சிவமயம்

திருச்சிற்றம்பலம்

பிரம்ம ஞான ஒளியில்

மெய்கண்டார் அருளிய

# சிவஞானபோதம்

## மறைபொருள் விளக்கம்


ஆக்கியோன் :

**திரு. பொன். கோவிந்தசுவாமி**

ஓய்வுபெற்ற இந்தியப்பள்ளி வித்தியாதரிசி, மலேசியா ;

முந்நாள் அறங்காவலர், ஸ்ரீ பாடலீஸ்வரர் தேவஸ்தானம்,

திருப்பாதிரிப்புலியூர்


[illegible] அளித்த

அன்னை வஸந்தையின்

அடிமலர்க் கமலங்களுக்கு

அர்ப்பணம்


1970

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

பிரம்ம ஞான ஒளியில்

மெய்கண்டார் அருளிய

# சிவஞானபோதம்

## மறைபொருள் விளக்கம்


ஆக்கியோன் :

திரு. பொன். கோவிந்தசுவாமி

ஒய்வுபெற்ற இந்தியப்பள்ளி வித்தியாதரிசி, மலேசியா ;

மூந்நாள் அறங்காவலர், ஸ்ரீ பாடலீஸ்வரர் தேவஸ்தானம்,

திருப்பாதிரிப்புலியூர்


[illegible] அளித்த

அன்னை வஸந்தையின்

அடிமலர்க் கமலங்களுக்கு

அர்ப்பணம்


1970

முதற்பதிப்பு : ஜூன், 1970





திரு. பொன். கோவிந்தசுவாமி

'அப்பர் அகம்'

45, அங்காளம்மன் கோயில் தெரு,
மஞ்சகுப்பம், கடலூர்-1, தென்னாற்காடு.

அடக்க விலைப் பதிப்பு விலை ரூ. 4-00

1970

முருகன் அச்சகம்,
இராயப்பேட்டை, சென்னை-14



உரை ஆசிரியர்

திரு. பொன். கோவிந்தசுவாமி

ഉ

OM

# The Esoteric meaning of Meikandar's SIVAGNANA BODHAM In the Light of Theosophy

Dedicated to

**Annie Besant - the Mother**

(Who Rejuvenated the Sanatana Dharma Hinduism)

Commentary by :

**Thiru. Pon. Govindaswamy**

Retired Inspector of Schools, Malaysia

Ex. Trustee of Sri Pataleeswarar Temple, Tirupapuliyur



1970

Cost Price Rs. 4-00, Postage Extra

# The Golden Stairs

A clean life

an open mind

a pure heart

an eager intellect,

an unveiled spiritual perception

a brotherliness for all,

a readiness to give and receive advice and instruction,

a loyal sense of duty to the Teacher,

a willing obedience to the behests of TRUTH.

a courageous endurance of personal injustice,

a brave declaration of principles,

a valiant defence of those who are unjustly attacked and

a constant eye to the ideal of human progression and

perfection which the sacred science depicts

these are the golden stairs up the steps of which

the learner may climb to the Temple of Divine Wisdom

—H. P. Blavatsky.



HELENA PETROVNA BLAVTSKY
Founder of the Theosophical Society
சித்புருஷி H. P. பிளவட்ஸ்கி அம்மையார்
பிரம்மஞான சங்கம் ஸ்தாபகர்

# உள்ளுறை-Contents

## Contents-அடக்கம்


| | | Page—பக்கம் |
|---|---|---|
| | பிளவட்ஸ்கி அம்மையார் அறவுரை ... | iv |
| 1. | அறிமுகம் ... | viii |
| 2. | நான்முகம் ... | xi |
| 3. | கடவுள் வாழ்த்து ... | 1 |
| 4. | அன்னை வஸந்தை அறவுரை ... | 6 |

I. (பிரம்மஞானம் 5-ம் பக்கம்)

| | | |
|---|---|---|
| 5. | தோற்றுவாய் ... | 7 |
| 6. | ஏகன் ... | 9 |
| 7. | அநேகன் ... | 17 |
| 8. | இறைவன் ... | 22 |
| 9. | உயிர் ... | 33 |
| 10. | பஞ்சகிருத்தியம் சிருஷ்டி ... | 42 |
| 11. | ஷை திதி ... | 47 |
| 12. | ஷை சங்காரம் ... | 51 |
| 13. | ஷை புனர்சன்மம் ... | 53 |
| 14. | ஷை திரோதானம் ... | 57 |
| 15. | ஷை அருளல் ... | 58 |
| 16. | நடராஜர் தத்துவம் (ஆங்கிலம்) ... | 60 |
| 17. | பிரார்த்தனை (ஆங்கிலம்) ... | 64 |

II. (சிவஞானம் 65-ம் பக்கம்)

| | | |
|---|---|---|
| 18. | தோற்றுவாய் ... | 67 |
| 19. | சிவஞானபோதம் மூலம் தமிழ் ... | 79 |
| 20. | ஷை மூலம் சமஸ்கிருதம் ... | 80-a |

Page—பக்கம்

21. சிவஞானபோதம் முதல் சுலோகம் ... 81
22. ௸ முதல் சூத்திரம் ... 81
23. சிவஞானசித்தியார் முதல் செய்யுள் ... 86
24. முதல் சூத்திரம் ஆங்கில மொழிபெயர்ப்பு 86
25. சிவஞானபோதம் 2-ம் சுலோகம் ... 87
26. ௸ 2-ம் சூத்திரம் ... 88
27. சிவஞானசித்தியார் 2-வது செய்யுள் ... 95
28. 2-வது சூத்திரம் ஆங்கில மொழிபெயர்ப்பு 95
29. சிவஞானபோதம் 3-ம் சுலோகம் ... 96
30. ௸ 3-ம் சூத்திரம் ... 97
31. சிவஞானசித்தியார் 3-ம் செய்யுள் ... 105
32. 3-ம் சூத்திரம் ஆங்கில மொழிபெயர்ப்பு ... 105
33. சிவஞானபோதம் 4-வது சுலோகம் ... 107
34. ௸ 4-வது சூத்திரம் ... 108
35. சிவஞானசித்தியார் 4-வது செய்யுள் ... 112
36. 4-வது சூத்திரம் ஆங்கில மொழிபெயர்ப்பு 113
37. சிவஞானபோதம் 5-வது சுலோகம் ... 114
38. ௸ 5-வது சூத்திரம் ... 115
39. சிவஞானசித்தியார் 5-வது செய்யுள் ... 123
40. 5-வது சூத்திரம் ஆங்கில மொழிபெயர்ப்பு 123
41. சிவஞானபோதம் 6-வது சுலோகம் ... 124
42. ௸ 6-வது சூத்திரம் ... 124
43. சிவஞானசித்தியார் 6-வது செய்யுள் ... 128
44. 6-வது சூத்திரம் ஆங்கில மொழிபெயர்ப்பு 129
45. சிவஞானபோதம் 7-வது சுலோகம் ... 130
46. ௸ 7-வது சூத்திரம் ... 130
47. சிவஞானசித்தியார் 7-வது செய்யுள் ... 134
48. 7-வது சூத்திரம் ஆங்கில மொழிபெயர்ப்பு 134
49. சிவஞானபோதம் 8-வது சுலோகம் ... 135



Page—பக்கம்

50. சிவஞானபோதம் 8-வது சூத்திரம் ... 136
51. சிவஞானசித்தியார் 8-வது செய்யுள் ... 141
52. 8-வது சூத்திரம் ஆங்கில மொழிபெயர்ப்பு 142
53. சிவஞானபோதம் 9-வது சுலோகம் ... 142
54. ௸ 10-வது ௸ ... 143
55. ௸ 9-வது சூத்திரம் ... 144
56. ௸ 10-வது ௸ ... 144
57. சிவஞானசித்தியார் 9-வது செய்யுள் ... 154
58. ௸ 10-வது ௸ ... 154
59. 9, 10-வது சூத்திரங்கள் மொழிபெயர்ப்பு 155
60. சிவஞானபோதம் 11-ம் சுலோகம் ... 157
61. ௸ 11-ம் சூத்திரம் ... 157
62. சிவஞானசித்தியார் 11-ம் செய்யுள் ... 163
63. 11-ம் சூத்திரம் ஆங்கில மொழிபெயர்ப்பு 163
64. சிவஞானபோதம் 12-ம் சுலோகம் ... 163
65. ௸ 12-ம் சூத்திரம் ... 164
66. சிவஞானசித்தியார் 12-ம் செய்யுள் ... 171
67. 12-ம் சூத்திரம் ஆங்கில மொழிபெயர்ப்பு 172

## III. (அநுபந்தம் 173-ம்பக்கம்)

68. அநுபந்தம்—1 ஆலய வழிபாடு ... 173
69. ௸ 2 மெய்கண்டார் நெறி ... 179
70. ௸ 3 சின்முத்திரை விளக்கம்
71. ௸ 4 தக்ஷிணாமூர்த்தி தத்துவம் (ஆங்கிலம்)
72. ௸ 5 தத்துவ அட்டவணை.
73. அநுபந்தம்—6 அடிப்படை தத்துவம் (ஆங்கிலம்)

# அறிமுகம்

ஸ்ரீ திரிபுரசுந்தரி சமேத திருவீரட்டானேஸ்வரர் கோயில் கொண்டிருக்கும் திருவதிகை எனது தாய்ப் பதியாகும். இத் தலத்தில்தான் அப்பர் அடிகளாரின் தமக்கை திலகவதியம்மை பார் வதிந்து, சைவ சமயத்தை விட்டு சமண சமயம் மாறிய அடிகளாரைத் திருவீரட்டானேஸ்வரர் அனுக்கிரகத்தால் தடுத்தாட்கொள்ளப்பெற்றுத் திரும்ப சைவ சமயத்திற்குத் திருப்பிய திருப்பதியாகும்.

அப்பர் அடிகளை சமணர்கள் கல்லில் கட்டி கடலில் பாய்ச்சியபோது பஞ்சாக்ஷர பதிகத்தை ஓதி, இறை அருளால் கல்லே தெப்பமாக மாறி, கரையேறிய தலமாகிய கரையேற விட்ட குப்பம் எனது தந்தையாரூராகும். இது அப்பர் அடிகளுக்குத் தோன்றாத் துணைவராயிருந்து அடிகளைக் கரையேற்றுவித்த ஸ்ரீ பெரியநாயகி சமேத ஸ்ரீ பாடலீஸ்வரர் எழுந்தருளியிருக்கும் திருப்பாதிரிப்புலியூர் திருப்பதியின் ஒரு பகுதியாகும்.

எனது தாய் வழி பாட்டன் பாட்டையா திருவருட் பிரகாச வள்ளலார் வடலூர் ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளின் தொண்டராவர். எனது சிறு வயதிலேயே அப்பர் அடிகளைப் பற்றியும், இராமலிங்க அடிகளைப் பற்றியும் என் பாட்டையார் கதையாக எனக்குச் சொல்வார்கள். அதனால் எனக்கு அப்பர் அடிகளிடமும், அடிகளின் திருமுறையிலும் ஒரு தனித்த பற்றுதல் உண்டு. இராமலிங்க வள்ளலார் எனது அந்தரங்கக் குருவுமாவர்.

அதனால், அப்பர் அடிகள் கரையேறிய திருக்குளத்திருப்பணியிலும், ஸ்ரீ பாடலீஸ்வரர் ஆலய நிர்வாகத்திலும் பங்கு பெற்றுத் தொண்டு புரியும் பாக்கியம் பெற்றேன். காசி முதல் இராமேஸ்வரம் வரை பல மூர்த்தி, தலம், தீர்த்தங்களைத் தரிசிக்கும் பாக்கியத்தையும் பெற்றேன். ஞானியார் சுவாமிகள் உள்பட பல அடியார்களையும் அன்பர்களையும் கண்டு, அவர்களது உபதேசங்களைக் கேட்கும் பாக்கியமும் பெற்றேன்.



எனக்கு இளம் வயதிலிருந்தே பொதுவாக சநாதன தர்ம இந்துமதத்திலும், சிறப்பாக சைவ சித்தாந்தத்திலும் பற்றுண்டு. பிரம்மஞான சங்கத்தில் சேர்ந்து இந்து மதத்தைப் பற்றி அன்னி வஸந்தை அருளிய நூல்களைப் பார்த்த பிறகு எனக்கு அவற்றில் முழு நம்பிக்கையும், உறுதிப்பாடும் ஏற்பட்டது. சாத்திர ஆராய்ச்சியும், சமயத் தொண்டும் எனது பொழுது போக்கு. மலேசியாவில் நான் பணியாற்றிய காலங்களில் காலஞ்சென்ற திரு. K. இராமநாதன் செட்டியார், பி.ஏ., பி.எல். அவர்களுடன் சேர்ந்து சித்தாந்த சாத்திர வகுப்புக்களிலும், சைவ சமயத் தொண்டிலும் ஈடுபட்டிருந்தேன். பிரம்மஞான சங்கத்தில் 46 ஆண்டுகளாக அங்கம் வகிக்கின்றேன். சென்னை சைவ சித்தாந்த மகா சமாஜத்தில் ஆயுள் உறுப்பினன்.

நான் தோத்திரத்திலும் சாத்திரத்தைக் கண்டுகளிப்பவன். மெய்கண்டார் அருளிய சிவஞான போதத்திற்கு நான் பார்க்காத உரைகள் கிடையாது. சிவஞான முனிவரின் சிற்றுரை, பேருரை, இவற்றிற்கு வியாக்கியானமாக ஸ்ரீ பொ. முத்தையா பிள்ளை எழுதிய விளக்க உரை, பாண்டிப் பெருமாள் உரை, பழைய உரை, சம்பிரதாய உரைகள், வேதாந்தக் கருத்தில் ஸ்ரீ வடிவேல் செட்டியார், ஸ்ரீ குப்புசாமி ராஜு இருவரும் எழுதிய உரைகள். கணக்கற்ற எளிய உரைகள், பல ஆங்கில மொழி பெயர்ப்புகள் உள்பட அநேக உரைகளைப் பார்த்திருக்கின்றேன்.

ஏறக்குறைய எல்லா உரையாசிரியர்களும் யாரோ ஒருவர் செய்து மெய்கண்டார் பெயரால் சிவஞானபோதத்தில் இடைச் சொருகி வைத்திருக்கும் வார்த்திகப் பொழிப்பு, மேற்கோள், ஏது, உதாரண வெண்பா என்ற நான்கு சுவர்களுக்குள்ளேயே கிணற்றுத் தவளையைப் போல் சுற்றிச் சுற்றி வந்து முட்டிக்கொண்டு நின்று விட்டார்களே தவிர, அதை விட்டு வெளியே வந்து புதிய கருத்துக்களைக் காண இதுவரை யாரும் முயன்றதாகத் தெரியவில்லை. எல்லோரும் போன சுவட்டிலேயே (Rut) போய்க்கொண்டிருக்கின்றனர்.

சிவஞானபோதம் உபனிஷத்துக்களின் கருத்துக்களையே உள்ளடக்கியிருக்கிறதென்று பேச்சளவில் சொல்லுகின்றனரே தவிர, உபனிடதங்களுடன் இவ்வுரைகளை ஒப்புநோக்கி ஆழ்ந்து ஆய்ந்து பார்த்தால், பல முரண்பாடுகள் இருப்பதைக் காணலாம். ஆதலால் இதிகாசம், புராணம், வேதவேதாந்தம், ஆகம ஆகமாந்தங்களடங்கிய பிரம்மஞான ஒளியில் சிவஞான போதத்திற்குப் புதிய கருத்துக்கள், மறைபொருள் விளக்கம் ஏதாவது இருக்குமோவென்று காண விழைந்தேன். இந்த ஆராய்ச்சியை எனது 60-ம் ஆண்டில் அதாவது 1960-ம் வருடம் ஆரம்பித்து, பத்து ஆண்டுகளாக ஒவ்வொரு சூத்திரமாக, ஒவ்வொரு வரியாக, ஒவ்வொரு பதமாக ஆராயத் தொடங்கி, இரவிலும் சிந்தித்துக் கொண்டே நித்திரைக்குப் போவேன்.

இவ்வாறு பிரம்மஞான ஒளிகொண்டு சிவஞானபோதத்தின் உள் நுழைந்து பார்த்தபோது அநேக புதுப்புதுக் கருத்துக்கள் தோன்ற ஆரம்பித்தன. பத்து வருடங்கள் கழித்து எனது 70-ம் ஆண்டில் எனக்குத் தோன்றிய அக்கருத்துக்களையெல்லாம் தொகுத்து இந்நூலாக வெளியிடுகின்றேன். இந்நூலை இரண்டு பாகங்களாகப் பிரித்து, முதல் பாகத்தில் உபனிடதத்தின் கருத்துக்களாகிய பிரம்மஞான சாரசங்கிரகத்தையும், இரண்டாவது பாகத்தில் அதன் ஒளி கொண்டு கண்ட சிவஞானபோதத்தின் மறைபொருள் விளக்கத்தையும் கொடுத்திருக்கின்றேன். ஆதலால் மெய்ப்பொருளை அறிய ஆர்வமுள்ளவர்கள் முதலில் முதல் பாகத்தை ஊன்றிப் படித்துவிட்டு, பிறகு இரண்டாவது பாகத்திற்குச் செல்லுமாறு விழைகின்றேன். கருத்து வேறுபாடுகள் காணின் தெரிவித்தால் மறுபதிப்பில் பர்யாலோசனை செய்யப்படும்.

கடலூர்
1—6—70

**திரு. பொன். கோவிந்தசுவாமி**

# நூன்முகம்

**எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்ப தறிவு.**

“ஆயிரம் முகத்தான் அகன்றதாயினும் பாயிரமில்லது பனுவலன்றே” என்பது நன்னூலாரின் இலக்கணம். இருந்தும் பாயிரமின்றியே இந்நூலை வெளியில் அனுப்பிவைக்கின்றேன். ஏனெனின், இலக்கண விதிப்படி பாயிரம் செய்தற்குரியார் எனக்கின்மையின்.

அதுமட்டுமின்றி, “படித்தவன் பாட்டைக் கெடுத்தான்; எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான்” என்பது முதுமொழி. அத்துடன் “வியாக்கியான கர்த்தா விடயத்தைக் கெடுத்தான்” என்ற ஒரு புது மொழியையும் சேர்க்க விழைகின்றேன். காரணம் உபனிடதம், கீதை, பிரம்மசூத்திரம், குறள் முதலிய நூல்களுக்குப் பல வியாக்கியான கர்த்தர்கள் தங்கள் விருப்பம் போல் முரண்பாடான பல வியாக்கியானங்களைக் கொடுத்துள்ளனர். அதுபோல் இதற்குப் பாயிரம் எழுதுவோர் உரை ஆசிரியரின் கருத்துக்கு மாறான கருத்துக்களைத் தெரிவிக்கலாம். அதன் அடிப்படையில் இவ்வுரையை வாசிப்பவர்களும் மாறான கருத்துக்களைக் கொள்ள ஏதுவாகும். ஆதலால் இந்நூலைப் படிக்கும் ஒவ்வொருவரும் அவரவர்களே தாங்கள் தங்கள் அபிப்பிராயங்களை உருவாக்கிக்கொள்ளட்டும் என்ற நோக்கத்தோடேயே இதைப் பாயிரம் இன்றி அனுப்பிவைக்கிறேன்.

இலக்கண இலக்கியத்தாலும், தர்க்கத்தாலும், அளவைகளாலும், சைவ சித்தாந்த பரிபாஷைகளாலும், பெயர்ச்சொல்லை வினைச்சொல்லாக்கி, வினைச்சொல்லைப் பெயர்ச்சொல்லாக்கி, ஆண்பாலைப் பெண்பாலாக்கி, பெண்பாலை ஆண்பாலாக்கி, வேற்றுமை உருபுக்களை மாற்றியும், போலியாலும், மயக்கத்தாலும், மொட்டைத்தலைக்கும் முழங்கைக்கும் முடிச்சுப்போட்டாற்

போல். அர்த்தத்தை அனர்த்தமாக்கி சிவஞானபோதம் என்ற தெள்ளிய இறைஞான ஓடையை முதலில் குழப்பி வைத்தவர் திருவாவடுதுறை ஆதீனத்து முக்காலிங்க தம்பிரான் (மடத்தாரால் சிவஞானமுனிவர் என்றும், மாதவச் சிவஞான யோகிகள் என்றும் பட்டம் சூட்டப்பட்டவர்) அவர்களாகும். அவரைப் பின்பற்றி வந்து, மடத்தின் பொருளுதவி பெற்று உரை காணவந்தவர்கள் அதை மேலும் மேலும் குழப்பிச் சேறாக்கி விட்டிருக்கின்றனர். தமிழ் இலக்கணம் எல்லாவற்றிற்கும் இடம் கொடுக்கும். உதாரணமாக "பத்தியிலாதவன்" என்பதை பத்தியில் + ஆதவன் என்றும், பத்தி + இலாதவன் என்றும் பிரித்து நேர் மாறான, முரணான பொருள்களைக் கொள்ளலாம்.

அக்காலத்தில் பெரியோர்கள் இலக்கண இலக்கியங்களையும் சாத்திரங்களையும் முறையாகப் படிக்கவேண்டுமென்று விதிமுறைகளை வரையறுத்து வகுத்து வைத்திருந்தனர். இலக்கியமென்றால் ஆத்திசூடி முதல், கீழ்க்கணக்கு, மேல்கணக்கு, பின் சங்க காவியங்கள், நிகண்டுகளென்றும், இலக்கணமென்றால் சிற்றிலக்கணம், நன்னூல், பின் தொல்காப்பியமென்றும், சாத்திரங்கள் என்றால் இதிகாசம் முதல் புராணம், ஸ்மிருதி, வேத வேதாந்தமென்றும் விதிமுறைகளை வகுத்து வைத்திருந்தனர்.

நூல்களைப் படிப்பதிலும், கற்றல், கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல் (அநுபவத்தில் அறிதல்) எனப் படிகளை வகுத்து வைத்திருந்தனர்.

ஆனால் இப்பொழுதெல்லாம் அஸ்திவாரம் இல்லாமல் எடுத்த எடுப்பில் சங்க காவியத்திற்கும், தொல்காப்பியத்திற்கும், உபநிஷத்துக்களுக்கும் போய்விடுகின்றனர். இங்குமங்குமாக துணிப்புல்லை மேய்ந்த மாதிரி சிலவற்றை மனப்பாடம் செய்து கொண்டு, அவற்றைப்பற்றிச் சிந்தித்துகூடப் பாராமல் பிரசங்கிக்கவும் சாத்திரங்களுக்கு முரணான வியாக்கியானம் கொடுக்கவும் ஆரம்பித்துவிடுகின்றனர். இவ்வாறு சிவஞானபோதத்தைக்



குழப்பி அதற்கு சுத்தாத்வைத சித்தாந்தம் என்ற வியாபாரக் குறி (Trade mark) யிட்டு, சிவன் எங்கேயோ கைலாயத்தில் பார்வதிதேவியுடன் டான்ஸ் ஆடிக்கொண்டிருக்கிறார், பாசம் எங்கேயோ பாதாளத்தில் இருக்கிறது, இவைகளுக்கிடையில் உயிர் ஊசலாடிக்கொண்டிருக்கிறது. சாம்பலைப் பூசினால் போதும், சிவா என்று உரக்கச் சொன்னால் போதும் உடனே சிவலோகத்திற்கு டிக்கட் கிடைத்துவிடும் என்று, உருவ வழிபாட்டை, குணத்தை விட்டு குறியை மட்டும் பிடித்துக் கொண்டு, எல்லாம் நம்முள்ளேயே இருக்கிறது என்பதை உணராமல், விக்கிரக ஆராதனையைக் கீழ்த்தரமான கேவல நிலைக்குக் கொண்டுவந்து விட்டனர்.

சைவ சமயம் பொருள் ஈட்ட உபயோகப்படுத்தப்படுகின்றதே தவிர, இறைஞானம் அடைய பிரயோசனப் படுத்தப்படுவதில்லை. பிச்சைக்காரனாகயிருந்தால் சாம்பலைப் பூசிக்கொண்டு, சுவாமி படத்தைக் கழுத்தில் மாட்டிக்கொண்டு பிச்சை எடுக்கப் போகிறான். பண்டிதர்களாகயிருந்தால் விபூதியைக் குழைத்துப் பூசிக்கொண்டு உருத்திராக்க மாலைகள் அணிந்து, விக்கிரகங்களை பெட்டியில் ஏந்திக்கொண்டு பிரசங்கம் செய்து பொருள் ஈட்டப் புறப்பட்டு விடுகின்றனர். சில சமயம் பிரசங்கம் அதினைப் பிரசங்கத்தில் முடிந்து அவதியுறுகின்றனர். எல்லாம் ஆஷாட பூதி வேஷத் தன்மையேயாம்.

அத்வைதம் என்றால் ஜீவன் சிவனுடன் இரண்டறக் கலத்தல்; அப்படி என்றால் சிவாத்துவிதமே சிறந்த சரியான பொருளாகும். சைவ சித்தாந்தம் என்றால் சிவசம்பந்தமுடைய சித்தாந்தம்; சிவம் என்றால் பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் மூவரையும் அடக்கி நின்றது. சித்தாந்தம் என்றால் முடிந்த முடிபு. அதாவது எல்லா முடிவுகளையும் தன்னுள் அடக்கிக் கொண்டு நிமிர்ந்து நிற்பது சைவ சித்தாந்தம். அதனாலன்றோ அப்பர் அடிகள் "விரிவிலா அறிவினார்கள் எரிவினால் வேறொரு சமயம் செய்தாரேனும் எம்பிராற்கு ஏற்கும்" என அருளிப்

போந்தார். அப்படியென்றால் எல்லா சமய தத்துவங்களும் சைவ சித்தாந்தத்தில் அடங்கியுள்ளன. அவைகளை மறுத்தால் சைவ சமயத்தை மறுத்ததாகும்.

மேலும் முக்காலிங்கத் தம்பிரான் காலம் விஞ்ஞான வளர்ச்சி இல்லாத காலம்; மெய்கண்டார் காலத்திய யோக மடங்கள் போக மடங்களாக மாறி, தலை வாழையிலையில் அறுசுவை யுண்டியுடன் சாப்பிட்டுவிட்டு இலக்கண, இலக்கிய, தர்க்க, அளவை ஆராய்ச்சியோடு நின்றுவிட்ட காலம். இதுபோது அதுவும் போய், மோக மடங்களாக மாறி, மடாதிபதிகள் தாங்களே சாத்திர ஆராய்ச்சி, தத்துவ விசாரணை முதலிய யோக சாதனைகளை அப்பியசித்து, வியாக்கியானங்கள் செய்வது போய், பொருள் கொடுத்துப் பிறரைக்கொண்டு, செய்விக்கும் காலமாக மாறி விட்டது. மற்றும் அரசன் ஆணையைக்கூட "நாம் யார்க்கும் குடியல்லோம்; நமனை யஞ்சோம்" என்று சொல்லி மறுத்தது போய், கீழ் பதவியிலுள்ள ஆணையர்கள் கூட "போடு தோப்புக் கரணம் என்றால், எண்ணிக்கொள்" என்று சொல்லும் காலமாகிவிட்டது. அக்காலத்தில் மடாதிபதிகள் அருட் செல்வர்களாக யிருந்தனர். இக்காலத்தில் பொருட்செல்வம் மட்டும் உடையவர்களாக இருக்கின்றனர். இது காலத்தின் கோலமாகும்.

நான் சிவஞானமுனிவர் நூல்கள் சிலவற்றையும், சிவப்பிரகாச சுவாமிகள் நூல்கள் சிலவற்றையும் பார்த்திருக்கின்றேன். சிவஞான முனிவர் நூல்கள் இலக்கண இலக்கிய, தர்க்க, அளவை நூல்களில் நுண்மாண் நுழைபுலன் அறிவுடன் எழுதப்பட்டவை யென்றும், சிவப்பிரகாச சுவாமிகளின் நூல்கள் கல்வியறிவுடன் ஆன்மீக அனுபவத்தினால் எழுதப்பட்டவைகள் என்பது எனது சிற்றறிவிற் கெட்டிய அபிப்பிராயமாகும்.

இதைச் சொல்லும்போது எனக்கு வடநாட்டுப் பெரியார்கள் இருவரின் வாழ்க்கை வரலாறு ஞாபகத்திற்கு வருகிறது. வடநாட்டில் வங்காளத்தைச் சேர்ந்த விவேகானந்தரும், பஞ்சாபைச் சேர்ந்த சுவாமி இராமதீர்த்தரும் ஏக காலத்தவர். இருவரும்



பட்டதாரிகள்தான்; மேல் நாடுகளில் சென்று இந்துமதப் பிரசாரம் செய்தவர்கள்தான். இவ்விருவர்களுடைய நூல்களையும் நான் பார்த்திருக்கின்றேன். விவேகானந்தரின் நூல்கள் அரசியல் அறிவோடு எழுதப்பட்டவை. சுவாமி இராமதீர்த்தரின் நூல்கள் ஆன்மீக அனுபவத்தால் (Self realisation) எழுதப் பட்டவைகள் என்பது அவர்களின் நூல்களை சீர்தூக்கிப் படித்தவர்களுக்குப் புலனாகும். பின்னவர் எளிய வாழ்க்கையிலும், கடின தவத்திலும் வாழ்ந்தவர்; முன்னவர் அமெரிக்க நாட்டு போக போக்கியத்தில் வாழ்ந்தவர். ஒருவர் கங்கைநீரால் அடித்துச் செல்லப்பட்டார்; மற்றவர் சர்க்கரை நீரால் காலமானார்.

இதையெல்லாம் இங்கு ஏன் சொல்லுகின்றேன் என்றால் இக்காலத்தில் 'பணம் பந்தியில், குணம் குப்பையில்' என்பதற்கிணங்க எல்லாம் பணத்திலும், பிரச்சாரத்திலும் இறங்கி விட்டிருக்கின்றது. அதனாலன்றோ "லெட்டர் ஹெட்" யோகியர்களும், ஜெட் விமான யோகியர்களும் கிளம்பி யோகத்தையும், ஞானத்தையும் சந்தையில் விற்பனை செய்யப் புறப்பட்டிருக்கின்றனர். "நெற்றிக் கண்ணைக் காட்டினாலும் குற்றம் குற்றமே" என்ற தைரியத்துடன், விஷயங்களுக்குச் சரியான மதிப்பு (Right assessment) கொடுக்கத் தவறிவிடுகின்றோம்.

சிவஞான முனிவரும், விவேகானந்தரும் செல்வமும், செல்வாக்குமுள்ள ஸ்தாபனங்களைச் சேர்ந்தவர்களாயிருப்பதால் அவர்கள் பிரபலமாகப் பிரச்சாரப்படுத்தப் படுகின்றனர். மற்றவர்கள் இருக்கும் இடம் தெரியவில்லை.

"பழையன கழிதலும், புதியன புகுதலும் வழுவல கால வகையினானே" என்ற இலக்கண விதிப்படி, தொன்மையவாம் எனும் எவையும் நன்றாகா; இன்று தோன்றிய நூலெனா எவையும் தீதாகா. ஆதலால் இந்த இருபதாம் நூற்றாண்டின் விஞ்ஞான வளர்ச்சியான அணு ஆயுத யுகத்தில் சைவ சித்தாந்தத்திற்கு ஒரு கிளர்ச்சியும், புரட்சியும், மறுமலர்ச்சியும் அத்யாவசியமாகிறது. மக்களுக்காக சமயமே தவிர, சமயத்திற்காக மக்கள்

இல்லை. வளர்ச்சியுறும் உயிருக்குப் புத்துயிர்ப்பான சமயம் இன்றியமையாதது. கிளிப்பிள்ளையைப் போலும், கிராமபோன் ரிக்கார்டு போலும் சில தோத்திரங்களையும், சாத்திரங்களையும், மனனம் செய்து ஒப்பிப்பதில் பயனில்லை. சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லவேண்டும். சமய சாத்திரங்களையும் தோத்திரங்களையும் புறநோக்காக நோக்காமல் அகநோக்காகப் பார்க்க வேண்டும். பன்னிரு திருமுறைகளையும், பதினுன்கு சாத்திரங்களையும் புனருத்தாரணம் செய்து மாற்றித் தொகுக்கவேண்டும். சித்தாந்திகள் வேதாந்தத்தையும், வேதாந்திகள் சித்தாந்தத்தையும் கற்கவேண்டும்; அகநோக்கு ஆராய்ச்சி வேண்டும்.

## நன்றியுரை

இந்நூலுக்குத் நமது மெய்கண்டார் பிளாக்கைக் கொடுத்து உதவிய எனது நண்பரும் அன்பருமான பழனி அடிவாரம், திருவடி திரு. K. அரங்கசாமி முதலியாருக்கு எனது நன்றி உரித்தாகுக.

உண்மையில், நான் மலேசியாவிலிருக்கும்போது 1958-ல் இவர் வெளியிட்ட "சிவஞானபோதம், எளியவுரை" முதல் பதிப்பைப் பார்த்த பிறகுதான் எனக்கும் இதற்கு ஓர் உரை காண வேண்டுமென்ற எண்ணம் உதித்தது. ஏனெனில், அன்பரும், என்னைப் போலவே சென்னை சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் உறுப்பினரும், துணைத் தலைவருமாவர். மற்றும் பிரம்மஞான சங்கத்தின் அங்கத்தினரும், பழனி கிளைச் சங்கத்தின் தலைவருமாவார். அவரது நூலின் கருத்தையும், இணைப்பையும் பொட்டியே எனது கருத்தும் இணைப்பும் அமைந்துள்ளது.

இந்நூலை, சிரமம் பாராமல் தானே பிழைதிருத்தி, அதி விரைவில் அழகுற அச்சிட்டுக்கொடுத்த சென்னை சைவ சித்தாந்த மகா சமாஜச் செயலாளரும், முருகன் அச்சக உரிமையாளருமான எனது அன்பரும், உறவினருமாகிய திரு. மு. நாராயணசாமி முதலியாருக்கும் எனது நன்றி உரித்தாகுக.

திரு. பொன். கோவிந்தசுவாமி

உ

சிவமயம்




பிரம்மஞான ஒளியில்

மெய்கண்டார் அருளிய

# சிவஞானபோதம்

## மறைபொருள் விளக்கம்

++++++++++++++++

### கடவுள் வாழ்த்து

INVOCATION TO GANAPATHY

கணபதி துதி

கல்லால் நிழல்மலை வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர் நல்லார் புனைவரே. 1.

—மெய்கண்டார்

## INVOCATION TO THE KING

குமாரக் கடவுள் துதி

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்
குருவாய் வருவாய் அருள்வாய் குமரா! 2

—அருணகிரியார்

## INVOCATION TO THE SILENT WATCHER

தக்ஷிணாமூர்த்தி துதி

கல்லாலின் புடையமர்ந்து நான்மறை
ஆறங்கமுதல் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை
இருந்தபடி இருந்து காட்டி
சொல்லாமற் சொன்னவரை நினையாமல்
நினைந்து பவத்தொடக்கை வெல்வாம். 3

## INVOCATION TO THE WORLD MOTHER

பராசத்தி துதி

மூவர்க்கும் முதற்பொருளாய் முத்தொழிற்கும் வித்தாகி
நாவிற்கும் மனத்திற்கும் நாடரிய பேரறிவாய்
தேவர்க்கும் முனிவர்க்கும் சித்தர்க்கும் நாகர்க்கும்
யாவர்க்கும் தாயாகும் எழில்பரையை வணங்குவாம். 4



## INVOCATION TO THE VISHNU

விஷ்ணு துதி

ஆணல்லன் பெண்ணல்லன் அல்லா அலியுமல்லன்
காணலு மாகான் உளனல்லன் இல்லையல்லன்
பேணுங்கால் பேணும் உருவாகும் அல்லனுமாம்
கோணை பெரிதுடைத்து எம்பெம்மானைக் கூறுதலே. 5

—நம்மாழ்வார்

## INVOCATION TO THE SOLAR LOGOS

ஸ்ரீகண்ட பரமேஸ்வரர் துதி

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம். 6

—சேக்கிழார்

## INVOCATION TO THE MASTERS

குருநாதர் துதி

தந்தைதாய் ஆவானும் சார்கதியிங் காவானும்
அந்தமிலா இன்பம்நமக்கு ஆவானும், எந்தம்உயிர்
தான்ஆகு வானும், சரண்ஆகு வானும், அருள்
கோன்ஆகு வானும் குரு. 7

குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்
குருடும் குருடும் குருட்டு ஆட்டம்ஆடிக்
குருடும் குருடும் குழி விழுமாறே. —திருமூலர்

### LOVE—அன்பு

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலர்
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே.

—திருமூலர்

### சர்வசமய தோத்திரம்

அணுத்தொறுங் கரந்தே அசைந்திட முயிரே
உயிர்தொறுங் கரந்தே சுடர்விடுஞ் சோதியே
அனைத்தையும் ஒன்றாய் அணைத்திடு முள்ளன்பே
நின்னுடன் தானும் ஒன்றென வுணருமவன்
அப்பெற்றி அனைத்திலுந்தன்னை காண்ப தறிவான்.

—திரு. பொன். கோ.

### UNIVERSAL PRAYER

OH Hidden Life! vibrant in every atom
OH Hidden Light! Shining in every creature
OH Hidden Love! embracing all in one-ness
May each who feels himself as one with Thee
Know he is therefore one with every-other.

—Annie Besant.

From the unreal lead me to the REAL
From darkness lead me to the LIGHT
From death lead me to IMMORTALITY. —Upanishat.




(சத்தியத்தின் மேலான சமயம் இல்லை)

## பிரம்மஞான சாரசங்கிரகம்

(பிரம்மஞானசங்க நூற்களிலிருந்து திரட்டியவை)

## The Essence of Brahma-Vidhya

Gathered from the Theosophical Literatures

### வஸ்து தோத்திரம்

நித்தியமாய், நிர்மலமாய், நிட்களமாய்
நிராமயமாய், நிறைவாய், நீங்காச்
சுத்தமுமாய், தூரமுமாய், சமீபமுமாய்த்
துரியநிறைச் சுடராய் எல்லாம்
வைத்திருந்த தாரகமாய், ஆனந்தமயமாகி
மனவாக் கெட்டாச்
சித்துருவாய், நின்றவொன்றை சுகாரம்பப்
பெருவெளியை சிந்தை செய்வாம்.

—தாயுமானர்

### மெய்யுணர்தல்

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.

—குறள்

# BIRTHDAY MESSAGE

Men have sought for God in many ways, but have not found Him, because they sought amiss. They sought Him in forest and jungle, in desert and cave: they sought Him through austerity and self-torture, through knowledge and argument, but He ever escaped them. In one place only can He surely be found, never to be lost again, and that is a place beyond emotion and intellect, in the depths of your own Spirit, who verily is He. There He abides ever, in the cave of the Heart, the Hidden God, the Light beyond the darkness, the Eternal, who is Strength and Love and Beauty. Find Him there, and you will thereafter see Him everywhere, in every human being, in every animal, in every plant, in every mineral, in the blue depths of all-embracing space, in joy and sorrow, in delight and in agony, even in the darkness of evil and of shame. Worship Him in all beings; serve Him in all needs; feed Him in the hungry; teach Him in the ignorant; love Him in the unloving; make your life His temple, and your acts His sacrifice. Then shall your eyes one day behold the KING in His Beauty, the highest manifestation of God on earth, and you shall grow into Man made perfect, Man Divine.

—Annie Besant

King = The Lord Sri Subramanya



Annie Besant - the Mother

ராஜயோகினி அன்னைவஸந்தை

# தோற்றுவாய்

சனாதனதர்மமாகிய இந்துமதம் இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்ற வேதங்கள் நான்கின் அஸ்திவாரத்தின் மேல், காமிகம் முதலிய ஆகமங்களாகிய தூண்களுடன், பதினெண் புராணங்கள் என்ற சுவர்கள் எழுப்பப்பெற்று, ஸ்மிருதிகள் என்ற கூரையுடன், இராமாயணம், பாரதம் ஆகிய இரு இதிகாசங்களாகிய வாயல்களுடன், தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, திருமந்திரம், திருஅருட்பா, திருக்குறள், சிவஞானபோதம் முதலிய பலகணிகளுடன் கூடிய ஓர் ஒப்புயர்வற்ற அழியாத உன்னத கட்டடமாகும். வேதம் பொது; ஆகமம் சிறப்பு. வேத, வேதாந்தங்கட்கு (உபனிஷத்துக்கள்) ஆகம, ஆகமாந்தங்கள் (சித்தாந்தங்கள்) வியாக்கியானமாகவும்; ஆகம ஆகமாந்தங்கட்கு ஸ்மிருதிகளும் புராணங்களும் வியாக்கியானங்களாகவும்; புராணங்களுக்கு இதிகாசங்கள் எடுத்துக்காட்டாகவும் அமைந்துள்ளன.

இந்த வேதாகம சாத்திரங்கள் எல்லாம் கர்மகாண்டம், ஞானகாண்டம் என இருபெரும் பிரிவுகளாக பகுக்கப்பட்டுள்ளன. முன்னதை அபரவித்தையென்றும், பின்னதை பரவித்தை என்றும் சொல்லுவர். இவை முறையே உயிர்களுக்கு இகத்திற்கும் (லௌகீகத்திற்கும்), பரத்திற்தும் (வைதீகம் அல்லது பாரமார்த்தீகத்திற்கு) வழிகாட்டியாகவும், விதிகளாகவும் அமைந்துள்ளன.

இந்த கர்மகாண்டம், ஞானகாண்டம் ஒவ்வொன்றும் ஆறு அங்கங்களாக வகுக்கப்பட்டுள்ளது. கர்மகாண்டம் சிக்ஷை, வியாகரணம், சந்தசு, கற்பம், நிருத்தம், சோதிடம் என்ற ஆறு அங்கங்களையுடைத்து. வைத்தியம், சிற்பம், கணிதம் முதலானவைகள் உபாங்கங்களாகும். ஞானகாண்டம் நியாயம், வைசேடிகம், சாங்

கியம், யோகம், மீமாஞ்சை, வேதாந்தம் என்ற ஆறு அங்கங்களையுடைத்து. இவை ஷட்தரிசனங்கள் என வழங்கப்படுகின்றன. இருடிகளாலும் முனிவர்களாலும் பிரத்தியட்சமாக தரிசிக்கப்பட்டவை தரிசனங்களாம். இங்கு எடுத்துக்கொள்ளப்பட்டது ஞானகாண்டப் பொருளேயாகும்.

இப்பரவித்தை பிரம்ம வித்தையெனவும் வழங்கப் படுகிறது. வேதங்களின் முடிவான உபனிஷத்துக்கள் இப்பிரம்ம வித்தையைப் பற்றியே கூறுகின்றன. பிரம்ம வித்தையென்ருல் பிரம்மத்தைப் பற்றி அறியும் ஞானம். பிரம்மம் என்ருலும், சிவம் என்ருலும் பொருள் ஒன்றே. பிரம்மம் என்ருல் வியாபகம்; சிவம் என்ருல் மங்களகரம். அப்பொருள் எங்கும் வியாபகமாய் மங்களகரமானது. இப் பிரம்ம வித்தை (1) ஈஸ்வரர் (பதி, கடவுள்), (2) சீவாத்மா (பசு, உயிர்), (3) பிரபஞ்சம் (பாசம், உலகம்), இம்மூன்றிற் கும் அடிப்படையான (4) பிரம்மம் (சிவம்) இவைகளைப் பற்றியும், இவற்றிற்குள்ள சம்பந்தா சம்பந்தங்களைப் பற்றியும் கூறுகின்றது.

உபனிஷத்துக்களை யெல்லாம் பிழிந்தெடுத்து அவற் றின் சாராம்சத்தை மணிவாசகப் பெருமான் தமது சிவ புராணத்தில் ஒரே வரியில் "ஏகன், அநேகன், இறைவன், அடி, வாழ்க" என்ற ஐந்து பதங்களில் அடக்கி சுருங்கச் சொல்லி விளங்க வைத்துள்ளார். இக்கருத்தையே உய்ய வந்த தேவநாயனரும் தமது திருவுந்தியாரில்,

"ஏகனுமாகி, அநேகனும் ஆனவன்
நாதனும் ஆனனென்று உந்தீபற
நம்மையே ஆண்டான்என்று உந்தீபற"

என்ற செய்யுளில் அப்படியே பிரதிபலித்திருக்கின்ருர். இந்த ஐந்து பதங்களின் பொருள்களை ஆராய்வதே இந் நூலின் நோக்கமாகும்.

# 1. ஏகன்

## சர்வம் பிரம்ம மயம்—சிவமயம

## The One Existence-Brahman is all

ஏகன்—மணிவாசகர் : ஏகனுமாகி—திருவுந்தியார்

பிரம்மஞானத்திற்குத் திறவுகோலாக இருப்பவை உபனிஷத்துக்களின் மகா வாக்கியங்களாகும். ஈஸ்வர னின் சங்கற்பங்களே இம்மகா வாக்கியங்களாகும். இம் மகா வாக்கியங்களுக்கு சிகரங்களாக விளங்குபவை நான்கு வேதங்களிலுமுள்ள நான்கு வாக்கியங்களாம்.

(அ) இருக்குவேதம்—அயித்ரேயோபனிஷத்து
1. பிரஞ்ஞானம் பிரம்மம்—அறிவே பிரம்மம்.

(ஆ) யசுர்வேதம்—தைத்ரியோபனிஷத்து
2. அகம் பிரம்மாஸ்மி—உள்ளமே பிரம்மம்.

(இ) சாமவேதம்—சாந்தோக்யோபனிஷத்து
3. தத்வமஸி—நீ அதுவாய் இருக்கின்ருய்.

(ஈ) அதர்வணவேதம்—மண்டோக்யோபனிஷத்து
4. அயம் ஆத்மா பிரம்மம்—இந்த ஆத்மாவே பிரம்மம்.

இவைகளின் கருத்து யாதெனில் சீவாத்மாவும் பரமாத்மாவும் ஒரே தன்மைத்து; இரண்டும் சச்சி தானந்தப் பொருட்கள். அது மட்டுமல்ல, மாயாகாரிய மாகிய தத்துவங்களும் பிரம்மத்தின் அம்ஸமே. "தத்வம்"

என்ற பதத்திற்கே பொருள் அது அதுவாய் இருக்கின்றது என்பதாம். இதனால் பதி, பசு, பாசங்களுக்கு அடிப்படையான வஸ்து ஒன்று இருக்கவேண்டுமென்பது வெளிப்படை. அதுதான் பிரம்மம் (சிவம்).

பல அளவுள்ள பாத்திரங்கள், குட்டை, குளம், ஏரி, கடல் முதலியவைகளில் நீர் இருக்கிறது. இவற்றிற்கெல்லாம் ஆதாரமாய் இருப்பது மகாசமுத்திரத்தின் நீராகும். அதுபோல் பதி, பசு, பாசங்கட்கெல்லாம் அடிப்படையாக, ஆதாரமாக ஒருவஸ்து உளது. அது ஒன்றே ஒன்றுதான். அதுதான் பிரம்மம் அல்லது சிவம் என்று சொல்லப்படுவது. அதுதான் முடிவான மெய்ப்பொருள் (Ultimate Reality). இதைத்தான் சாந்தோக்யோபனிஷத்தில் "ஏகமே அத்விதீயம்" அதாவது "இரண்டற்ற ஒன்றே ஒன்று" எனக்கூறப்பட்டுள்ளது. அதற்கு நாமரூபம் கிடையாது. அதை "வஸ்து" என்றே சொல்லப்பட்டிருக்கிறது. உய்யவந்த தேவநாயனார் தமது திருவுந்தியாரில் "அகலமாய் யாரும் அறிவரிது அப் பொருள்" என்று அதை ஒரு "பொருள்" என்று மட்டுமே கூறியிருக்கின்றார்.

ஆனால் பலசமயத்தினர்கள் அதற்குப் பல பெயரிட்டு அழைக்கின்றனர். இருக்கு வேதத்தில் "ஏகம் சத்விப்ரா பஹுதா வதந்தி" அதாவது ஒருருவம் ஒருநாமம் இல்லார்க்கு ஆயிரம் திருநாமம்பாடி நாம் தெள்ளேனம் கொட்டாமோ என்றபடி "வஸ்து ஒன்றே, அதற்கு அறிஞர் பல பெயரிட்டு அழைக்கின்றனர்" என்பதாம்.

அப்பொருள் எப்படிப்பட்டது; எத்தன்மைத்து என்று யாவராலும் கூறப்படவில்லை. வேதங்களே அதைத்தேடி ஓலமிடுகின்றனவென்றும், பிரம்ம விஷ்ணுக்களும் அதைப் பலகால்தேடியும் காணமுடியவில்லையென்றும் நூல்கள் கூறுகின்றன. அது கால தேசவர்த்த



மானங்கட்கு அப்பாற்பட்டது; மனோவாக்குக் காயங்கட்கு அகோசரமானது; முப்பாழும் பாழாய் அப்பாழுக்கப்பாலாய் உள்ளது. ஆணல்லன், பெண்ணல்லன், அலியுமல்லன்; சத்திற்கும் அசத்திற்கும் அப்பாற்பட்டது; சித்திற்கும் சடத்திற்கும் அப்பாற்பட்டது; சுகதுக்கங்களுக்கு அப்பாற்பட்டது. எல்லா மறுதலை இருமைகளும் (pairs of opposites) அதில் வேரூன்றியிருக்கின்றன. இது அல்ல, இது அல்ல (நேதி. நேதி) என்று சொல்லுவதே அதன் இலக்கணமாகும். அதைக் கண்டவர் விண்டிலர்; விண்டவர் கண்டிலர்.

"த்வே அக்ஷரே ப்ரஹ்ம பரேத்வ நந்தே
வித்யா அவித்யே நிஹிதேபத்ர கூடே"

என்பதுஉபனிடதவாக்கு;என்னவென்றால் அழிவற்றதும் ஆதியந்தமற்றதுமான அந்த மேலான பிரம்மத்தில் வித்தை, அவித்தை இரண்டும் அடங்கியுள்ளன. கீதையில் பகவான் "ஸத், அஸத் ஸோ அகம்" அதாவது நான் சத்தாகவும் அசத்தாகவும் இருக்கின்றேன் என அருளியிருக்கின்றார்.

"சித்தும் சடமும் சிவத்தைவிட இல்லையென்ற
நித்தன் பரம குருநேசத்தால் சுத்தநிலை பெற்றோமே"

எனத் தாயுமானாரும், சிவன் அருவுருவுமல்லன், சித்தினோடசித்தும் அல்லன் என சித்தியாரும் அருளியிருப்பது கவனிக்கத்தக்கது.

அப்பரம் பொருளைப்பற்றி உபனிடதங்களில் ஒரே ஒரு பெயரால் குறிக்கப்பட்டுள்ளது. அதுதான் "ஓம்" என்றபிரணவ அக்ஷரம். கதோபனிஷத்தில் ஓரிடத்தில்,

"ஸர்வே வேதா யத்பதமாமநந்தி தபாம்ஸி சர்வாணி
ச யத் வதந்தியதிச்சந்த்தோ ப்ரஹ்மசர்யம் சராந்தி
தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவீமி ஓம்
இத்யேதத் ஏதத்யே வாக்ஷரம் பிரஹ்ம ஏதத்யே
வாக்ஷரம் பரம்"

அதாவது எல்லா வேதங்களும் எதைச் சொல்லுகின்றனவோ, எல்லா தபசும் எதைச் சொல்லுகின்றனவோ, எதை ஆசிரியத்து பிரம்மச்சரியத்தை மேற்கொள்கின்றார்களோ, அந்தப் பதத்தை உனக்குச் சொல்லுகிறேன். அது தான் ஓம்; அந்த அக்ஷரமே பிரம்மம்; அந்த அக்ஷரமே மேலானது என்று யமதர்மன் நச்சிகேதனுக்கு உபதேசித்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த "ஓம்" ஓர் அக்ஷரத்தால் (ஓ, ௐம்) குறிக்கப்படும் ஓரசைச் சொல் (பதம்). இது "ஓ" என்ற சித்தாகிய உயிரும், "ம்" என்ற சடமாகிய மெய்யும் கூடியது. இந்த மெய்யோடு (சடத்தோடு) உயிர் (சித்து) கூடினாலல்லது மெய் (சடம்) இயங்காது. மற்றும் இந்த "ஓ" என்ற உயிரில் (சித்தில்) "அ", "உ" என்ற இரண்டு உயிர்கள் (சித்துக்கள்) அடங்கியுள்ளன என்பதைக் கவனத்தில் வைக்கவும்.

இவ்வாறு ஓர் அக்ஷரத்தால் குறிக்கப்படும் ஓரசைப் பதமாகிய ஓம் ௐல் அ, உ, ம், என்ற மூன்று அக்ஷரங்கள் அடங்கியுள்ளன. மகரமெய்யில் அகர உயிர் கூடினாலும், உகர உயிர் கூடினாலும் அது இயங்கும் என்பதையும் கவனிக்கவும். ஆதலால் இந்த மகரமெய் அ, உ என்ற இரண்டு உயிரையும் பிணிக்கும் (இணைக்கும்) பாசமாக இருக்கின்றதென்பதையும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவும். இந்த மூன்று அக்ஷரங்களும் சேர்ந்தது



தான் "ஓம்" என்ற பிரணவ அக்ஷரம். "ஓம்" என்று சேர்த்துப் பார்ப்பது சமஷ்டி என்றும், அதை அ, உ, ம் என்று பிரித்துப் பார்ப்பது வியஷ்டி என்றும் சொல்லப்படும். அக்ஷரம் என்றால் அழிவற்றது என்பது பொருள்.

இந்த ஓம் என்ற பிரணவத்திற்கு உபனிடதங்களில் பல பொருள்கள் கூறப்பட்டுள்ளன. அவற்றில் சிலவற்றை மட்டும் இங்கு எடுத்துக்கொள்வோம்.

பிரஸ்னோபனிஷத்தில் சத்தியகாமனுக்கு இந்தப் பிரணவத்தைப்பற்றி உபதேசிக்கும்போது அதில் "ஏதத்வைஸத்யகாம பரம்ச அபரம்ச ப்ரஹ்மயதோங்காரஹ" என்று கூறப்பட்டிருக்கிறது. அதாவது ஓ! சத்தியகாமா, உண்மையில் இந்த ஓங்காரம் பரம், அபரம் என்ற இரு தன்மைத்து என்பதாம்.

பிரஹதாரோண்ய உபனிஷத்து கூறுவதாவது: பிரம்மத்திற்கு இரண்டு நிலைகள் உள. அவையாவன: ரூபம்; அரூபம்; நித்தியம், அநித்தியம்; கண்டம், அகண்டம்; சத், அசத் என்பதாம். பிரணவத்தை ஓம் என்று சமஷ்டியாகப் பார்ப்பது மேல் நிலை; அதைப் பிரித்து அ, உ, ம, என்று தனித்தனியாகப் பார்க்கும் வியஷ்டி கீழ்நிலையாம்.

மண்டூக்யோபனிஷத்தில் கூறப்பட்டிருப்பதாவது: பிரம்மத்திற்கு நிர்க்குணம் என்ற பரநிலையும், சகுணம் என்ற அபரநிலையும் ஆக இரண்டு நிலைகள் உள. ஓம் நிர்க்குண நிலைப் பிரம்மம்; அ, உ, ம, என்பது சகுண நிலைப் பிரம்மம்.

பிரம்மம் பிரபஞ்சத்தொடு தொடர்பு கொள்ளும் போது அது அடையும் மூன்று அவத்தை நிலைகளையும் அ, உ, ம என்ற மூன்று அக்ஷரங்களும் குறிக்கின்றன. அவையாவன:

(1) "அ" அக்ஷரம் "வைஷ்வானரன்" என்ற ஜாக்கிரதாவஸ்த்தை நிலையையும் (2) "உ" அக்ஷரம்

''தைஜசன்'' என்ற சொர்ப்பனவஸ்த்தை நிலையையும் (3) ''ம'' அக்ஷரம் ''பிராஞ்ஞன்'' என்ற சுழுத்தி அவஸ்த்தை நிலையையும் குறிக்கின்றன.

சமஷ்டியாகிய ஓம் சிவத்தையும், வியஷ்டியாகிய ''அ'' உருத்திரனையும், ''உ'' விஷ்ணுவையும், ''ம'' பிரம்மாவையும் குறிக்கின்றன. ''ஸ்ருஷ்டி, ஸ்தித்யந்த காரணத் பிரம்ம, விஷ்ணு சிவாத்மிகாம் ஸஸம் நாம் யாதி பகவனேக ஏவஜனார்த்தன'' அதாவது ஜனார்த்தனன் என்ற ஒரே ஒரு கடவுள் படைத்தல், காத்தல் அழித்தற் கேதுவாக பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் எனப் பதவி நாமத்தை அடைகின்றான் என்று இருக்கு வேதம் கூறுகிறது.

மற்றும் சமஷ்டி ஓங்காரம் சிவமாகவும், வியஷ்டி ''அ'' = அரன் (பதி), ''உ'' = உயிர் (பசு), ''ம'' = மாயை (பாசம்) ஆகவும் கூறப்பட்டுள்ளது. பதியாகிய ''அ''வும், பசுவாகிய ''உ''வும் ''ஓ'' என்ற சிவசத்தினின்றே பிறந்திருப்பது இங்கு கவனிக்கத்தக்கது; இந்த இரண்டையும் பிணிப்பது ''ம'' என்ற பாசமே யாகும்.

சிவம் சக்தியும் சிவனுமாக பிரிந்தபோது ஆடவர் முன்னிலையில் பெண்களுக்கு ஆனந்தம் சனிப்பது போன்று, சிவனது நோக்கால் மாயாசத்தி கலக்குண்டு பூரணச்சந்திரன் முன் சமுத்திரம் பேரிரைச்சலொடு பொங்கியெழுவதுபோன்று பிரணவ நாத ஒலி எழுந்தது. அதனைத்தான் அதற்கு நாதப்பிரம்மம் என்ற பெயர் உண்டாயிற்று. சிவன் பிரணவசொரூபி.

''ஓங்காரத்துட் பொருளாய் நின்றான் கண்டாய்''

—அப்பர்

ஓமெனும் ஓங்காரத் துள்ளே யொருமொழி
ஓமெனும் ஓங்காரத் துள்ளே உருவரு
ஓமெனும் ஓங்காரத் துள்ளே பலபேதம்
ஓமெனும் ஓங்காரத் துள்ளே ஒண் முத்திசித்தி.



ஓங்காரத் துள்ளே உதித்த ஐம்பூதங்கள்
ஓங்காரத் துள்ளே உதித்த சராசரம்
ஓங்காரா தீதத்து உயிர்மூன்றும் உற்றன
ஓங்கார சிவ பாசிவ ரூபமே.

—திருமந்திரம்

இறை, சத்தி, பாசம், எழில்மாயை, ஆவி
உறநிற்கும் ஓங்காரத்துள்.

—திருவருட்பயன்

எல்லா மதங்களிலுமே இந்தப் பிரணவ ஓங்காரமே கடவுள் என ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. கிருஸ்து சமயத்தவர் ''ஆமென்'' எனச்சொல்லுவார்கள். கிருஸ்தவ ஆகமத்தில் ''ஆதியில் வார்த்தை இருந்தது, வார்த்தை தேவனிடத்தில் இருந்தது; வார்த்தையே தேவன்'' என்று கூறப்பட்டிருக்கிறது மகம்மதியர்கள் ''ஆமீன்'' என உச்சரிப்பர்.

மேலே கூறியவாறு ''முடிவாக உள்ள பொருள் (The Absolute Ultimate Reality) ஒன்றே ஒன்றுதான். அதைத்தான் பிரம்மம் அல்லது சிவம் என்று அழைக்கப்படுகிறது. அது கால (Time), தேச (Space), வர்த்தமானங் (Causation) கட்கு அப்பாற்பட்டது; மனோவாக்குக் காயங்கட்கு அகோசரமானது (எட்டாதது). அது சத்து, அசத்து; சித்து, சடம்; சுகம், துக்கம்; ஆண், பெண்; இரவு, பகல் என்ற எல்லா மறுதலை இருமைகட்கும் (pairs of opposites) அப்பாற்பட்டதும், அவற்றிற்கு நிலைக்களமாகவும் உள்ளது என்றும், அதுவே சத்து, அசத்து; சித்து (spirit), சடம் (Matter) முதலிய மறுதலை இருமைகளாகப் பிரிந்து இச் சேதனா சேதனப் பிரபஞ்சங்களாகத் திரிந்தது'' எனப் பார்த்தோம்.

மேற்கூறிய காரண காரியங்களால் பிரம்மத்தைத் தவிர (சிவத்தைத்தவிர) வேறு ஒன்றுமில்லை என்று கிறது. தைத்திரியோபனிஷத்தில் ''ஓங்காரமே பிரம்மம்;

சர்வம் ஓங்காரமே” என்றும்; சாந்தோக்கியோபனிஷத்தில் “சர்வம் பிரம்மமயம். அதிலிருந்தே சமுத்திர அலைகள் போல் பிரபஞ்சம் தோன்றுகின்றது; அதில் நிலைத்து, அதிலே மறைகின்றது; அதைத்தவிர வேறு ஒன்றுமில்லை'' என்றும்; அப்போது சத்துமில்லை, அசத்துமில்லை, அதைத்தவிர வேறு ஒன்றுமில்லை. “சர்வம் கல்விதம் பிரம்மம்.'' அதாவது சர்வம் பிரம்மமயம் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

சர்வமும் அதனுடைய பிரஞ்ஞை (Cosmic-consciousness) தவிர வேறு ஒன்றுமில்லை. அணு முதல் அண்டம் வரை எல்லாம் அவன் பிரஞ்ஞையே - அவனும் பிரபஞ்சமும் என்பதில்லை; அவனே பிரபஞ்சமாக இருக்கின்றான் என்பதாம். அது உயிர்களாய் இருப்பதினால்தான் உயிர்கள் அதை அறிய ஏதுவாய் இருக்கிறது என்பது ஒரு நியதி (Law). அதன் தன்மை உன்னிடம் இல்லையேயானால் நீ அதை அறியமுடியாது. ஆத்மஞானமும் பிரம்மஞானமும் ஒன்றே.

ஸ்காந்த புராணத்திலும் “யாககுண்டமும் அவனே, யாகாக்னியும் அவனே, யாகம் வளர்ப்பவனும் அவனே, யாகத்தை ஏற்பவனும் அவனே, அவிர்ப்பாகமும் அவனே அவிர்ப்பாகத்தை ஏற்பவனும் அவனே, யாகப் பொருட்களும் அவனே, எல்லாம் சிவனே, அவனைத் தவிர வேறு ஒன்றுமில்லை'' எனக்கூறப்பட்டிருக்கிறது.

“எல்லாம் சிவன் எனநின்றாய் போற்றி'' —அப்பர்

---

ஒரே பொருளைக் குறிக்கும் ஒப்புயர்வற்ற நூல்கள்

தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென்று உணர்.

## 2. அநேகன்—The Many

அநேகன் வாழ்க—மணிவாசகர் :

அநேகனுமாகி—திருவுந்தியார்.

இப்பிரபஞ்சம் (Universe) எப்படி உண்டாயிற்று, எப்போது உண்டாயிற்று என்று கடவுள் நம்பிக்கையில்லாத பகுத்தறிவாளர்களும், நாத்திகர்களும்; கடவுள் இப்பிரபஞ்சத்தை ஏன் படைத்தார், எப்படிப்படைத்தார், எப்போது படைத்தார் என்று கடவுள் நம்பிக்கையுடைய ஆத்திகர்களும் தொன்றுதொட்டு ஆராய்ந்து வந்திருக்கின்றனர்.

அழுக்கிலிருந்து புழுக்கள் உற்பத்தியாவது போன்றும், நீர்வாயும் பிராணவாயும் ($H_2O$) சேர்ந்து தண்ணீர் உண்டாவதுபோன்றும், வெற்றிலை, பாக்கு, சுண்ணம்பு சேர்க்கையினால் சிகப்பு நிறம் தோன்றுவது போலும் பஞ்சபூத சேர்க்கையினால் இயற்கையாகவே இப்பிரபஞ்சம் தோன்றிற்று என்று பகுத்தறிவாளர்களும்; கடவுள் அன்பு மயமானவர், தன் அன்பைக்காட்ட ஒரு பொருள் வேண்டி இப்பிரபஞ்சத்தைப் படைத்தார், இது அவருடைய திருவிளையாடல் என்றும், தேவரகசியம் என்றும் ஆத்திகர்களும் கூறுவாராயினர்.

ஞானதிருஷ்டியினால் ஈஸ்வரனுடைய சங்கல்பத்தைத் தொட்டு உணர்ந்த முனிவர்களும், மகரிஷிகளும் தாங்கள் அருளிய உபனிஷத்துக்களில் இதைப் பற்றி என்ன கூறுகின்றார்கள் என்பதைப் பார்ப்போம். ஈஸ்வரனுடைய சங்கற்பங்களே மகாவாக்கியங்களாக உபனிஷத்துக்களில் பொதிந்து வைத்துள்ளன என்பதைப் பற்றி முன் அத்தியாயத்தில் பார்த்தோம்.

சாந்தோக்கியம் முதலிய உபனிஷத்துக்களில் 12, 13 வது மகாவாக்கியங்களாக "ஏகோ அஹம் பஹூஸ்யாம்" அதாவது ஏகனாகிய நான் பலவாக ஆவேனாக எனவும், "ததைக்ஷத பஹூஸ்யாம் ப்ரஜாயேய" அதாவது ஒன்றாகிய நான் பலவாய் தோன்றுவேனாக எனவும் ஈஸ்வரன் சங்கற்பித்தமாத்திரந்தானே அவனினின்றும் சேதனாசேதனமான இப்பிரபஞ்சம் தோன்றிற்று என்று கூறப்பட்டுள்ளன.

எப்படித்தோன்றிற்று என்றால் மேற் சொல்லியவாறு சத்துக்கும், அசத்திற்கும்; சித்திற்கும், சடத்திற்கும் அப்பாற்பட்ட பிரம்மத்தில் இந்த இரண்டு மறுதலை இருமைகளும்ஒரு நாணயத்தின் இருபக்கங்கள்போல்நிலை கொண்டிருக்கின்றன. அது பலவாக ஆகவேண்டும் என்று சங்கற்பித்தபோது முதலில் சித்தும் (Spirit) சடமும் (மாயை Matter) ஆகப் பிரிந்தது. சிவன் மாயையை விரும்பி நோக்கி. "அகம் ஏதத் ஆஸ்மி" அதாவது நான் இதுவாய் இருக்கின்றேன் என்று சங்கல்பித்து இருவரும் கூட இந்த பிரபஞ்சம் தோன்றிற்று. இதுவே அனாதி சிருஷ்டியின் சங்கற்பமாகும்.

சிவனின் "ந அகம் தத்" அதாவது நான் அது அல்ல என்ற சங்கற்பத்தினால் திதி நடைபெறுகிறது. அதாவது பிரபஞ்சம் நிலைத்து நிற்கின்றது.

சிவன் மாயையை வெறுத்து "அகம் ஏதத் ந" அதாவது நான் இது அல்ல என்று சங்கல்பித்து அதை விட்டுப்பிரிந்து தனித்து நிற்கும்போது எல்லாம் அழிந்து சிவனில் ஒடுங்குகின்றன. இதுவே சிவனின் சங்கார சங்கற்பமாகும்.

இவ்வாறு சிவனின் விருப்பு (வேண்டுதல்) வெறுப்பு (வேண்டாமை) என்ற சங்கற்பங்களினால் பிரபஞ்சம் தோன்றுவதும் மறைவதுமான கல்பமும் பிரளயமும் காலச்சக்கர ஆணையின்படி (The Eternal Law of Cyclic



Periodicity) மாறி மாறி நடைபெறுகின்றன. இந்த விருப்பு வெறுப்பு என்ற இருவினைகளும் சிவனின் அநாதி ஆணை. (The Eternal Law of Attraction and Repulsion) ஆகும்.

"யதோர்ணநாபிகி ஸ்ருஜதே க்ருஹ்ணதேச
யதா ப்ருதிவ்யாம் ஔஷதயக ஸம்பவந்தி
யதா ஸதக புருஷாத் கேசலோமாநி ததா அக்ஷராத்
ஸம்பவதீஹ விச்வம் "

அதாவது எவ்வாறு சிலந்தி வலையை உண்டுபண்ணி சுருக்கிக் கொள்கிறதோ, எவ்வாறு பூமியில் ஔஷதிகள் உண்டாகின்றனவோ, எவ்வாறு புருஷனுடைய சரீரத்திலிருந்து மயிர் வளர்கின்றனவோ அவ்வாறே அழிவற்ற பிரம்மத்தினிடமிருந்து பிரபஞ்சம் தோன்றுகின்றது என்பது உபனிஷத்து வாக்கியம்.

சிலந்தியின் வலைபோல் சிவனின் சரீரமாகிய மாயையினின்றும் அசேதனப் பிரபஞ்சமும், நெருப்புச் சுவாலையிலிருந்து தீப்பொறிகள் கிளம்புவது போன்று அவனுடைய பிரஞ்ஞையி (Cosmic consciousness) னின்று சேதனப்பிரபஞ்சமும் தோன்றிற்று என்பது உபனிஷத்துக்களின் கருத்தாகும். தங்கம் ஆபரணங்களாக மாறுவதுபோல் சிவம் பதி, பசு, பாசங்களாகப் பரிணமிக்கின்றது.

இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய்
எறியுங் காற்று மாகி
அருநிலையதிங் களாய் ஞாயிறாகி ஆகாசமாய்
அட்ட மூர்த்தியாகிப்
பெருநலமும் குற்றமும், பெண்ணும் ஆணும்
பிறர்உருவும், தம்முருவும் தாமேயாகி,
நெருநலையாய் இன்றாகி நாளையாகி
நிமிர்புன்சடை அடிகள் நின்றவாறே —அப்பர்

அடிகளார் மற்றுமோர் இடத்தில் "பரந்தவன் காண் பல்உயிர்களாகி எங்கும்" என்று அருளியுள்ளார்.

சிவம் இவ்வாறு எல்லாமாய் மாறிவிட்டால் அதனுடைய பரிபூரணத்துவம் குறைந்து விடாதோ? ஒன்று தானே பரிபூரணமாகவும், நித்தியமாயும், வியாபகமாயும் இருக்கமுடியும். அப்படியிருக்க உயிர்களும் மாயையும் எப்படிப் பரிபூரணமாயும், நித்தியமாயும், வியாபகமாயும் இருக்கமுடியும்? என்ற ஒரு ஐயப்பாடு கேள்வி எழலாம். இதற்கு பிரஹதாரண்யகோபனிஷத்தில் ஒரு விடை கொடுக்கப்பட்டுள்ளது. அந்த உபனிஷத்தின் ஒரு வாக்கியத்தில்.—

"ஓம் பூர்ணமதஹ, பூர்ணமிதம்
பூர்ணாத் பூர்ணம் உதச்யதே
பூரணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவா வசிஷ்யதி"

அதாவது அதுவும் பூரணம், இதுவும் பூரணம், பூரணத்திலிருந்து பூரணம் தோன்றிற்று. பூரணத்திலிருந்து பூரணத்தை எடுத்துவிட்டால் மிகுந்திருப்பதும் பூரணமே என்பதாம்.

உதாரணமாக எத்தனை பூஜ்யங்களைக் கூட்டினும் மொத்தம் பூஜ்யமே. ஒரு பூஜ்யத்திலிருந்து எத்தனை பூஜ்யங்களைக் கழித்தாலும் மிகுந்திருப்பது பூஜ்யமே.

அதுபோல் பரிபூரண, நித்திய, வியாபக சிவத்தினின்றும் தோன்றிய பதி, பசு, பாசங்கள் எல்லாம் பூரண, நித்திய, வியாபகப் பொருள்களே. இக்கருத்தையே சிவஞான சித்தியாரில்.

சிவம் சக்தி தன்னை ஈன்றும்
சத்திதான் சிவத்தை யீன்றும்
உவந்து இருவரும் புணர்ந்து
இங்கு உலகு, உயிர் எல்லாம் ஈன்றும்,



பவன் பிரம்மச் சாரியாகும்
பான்மொழி கன்னி யாகும்
தவம்தரும் ஞானத் தோர்க்கு
இத்தன்மைதான் தெரியு மன்றே.

என்று அருளப்பட்டுள்ளது. இதனால் சிவத்தினுடைய பரிபூரணத்துவத்திற்கு ஹானி (குறைபாடு) யில்லை.

இவ்வாறு ஏகனாகிய சிவன் அநேகனுமாயும், எல்லாமாயும் பரிணமித்திருக்கின்றான்.

---

## பிரபுலிங்கலீலை

பரசிவம் பிரமம் என்னப்பட்டு ஒரு திரிவுமின்றி
உரைமனம் இறந்துநின்ற ஒரு சிவலிங்கந்தன்னில்
வரும்உபர் சதாசிவன்தான், மற்றுஅவன் தனைப்பொருந்தும்
அருமைகொள் ஞானசத்தி அவர்களால் சிவன்உதிப்பன்.

சாற்றும் அச்சிவனுக்கு இச்சாசத்தி அவ்விருவரானும்
தோற்றுவன் உருத்திரன்தான் சொல்லிய அவர்க்குசத்தி
மாற்றரும் கிரியையென்பர், மற்று அவர் இருபாலும்
போற்றரும் அரிஉதிப்பன், பொறி அவன்சத்தியாமால்.

அத்திருமாலும் மாவும்அளிப்ப வந்துதிப்பன் வண்டு
மொய்த்து இசைமுரலும் செவ்வேழ் முளரிவானவன் அவற்கு
சத்திவெண் கமலை, அன்னோர் தரவரும் உலகின்தோற்றம்
நித்தன் நங்குருகுகேசன் நினைவு மாத்திரையின் ஆமால்.

ஆக்குறும் செயலது ஒன்றே அயன்தனக்கு ஆக்கலொடு
காக்குறும் செயல்இரண்டும் கண்ணனுக்கு, ஆக்கல்காத்தல்
போக்குதல் என்று இம்மூன்றும் புராந்தகற்குஅளித்து அவர்க்கு
நீக்கரும் இறைமைநல்கி நிறுவினன் குருகுகேசன்.

# 3. இறைவன் - நாதன் - Ishvara

இறைவன் வாழ்க—மணிவாசகர்:

நாதனும் ஆனன்—திருவுந்தியார்

இறைவன், நாதன், ஈஸ்வரன், பதி முதலானவைகள் ஒரே பொருளைக்குறிக்கும் பல சொற்களாம். இவற்றிற்குத் தலைவன் எனப் பொருள்.

மேல் அத்தியாயங்களில் பிரம்மம் (சிவம்) சத்திற்கும், அசத்திற்கும்; சித்திற்கும், அசித்திற்(சடத்திற்கும்); கால தேசவர்த்தமானங்கட்கும் அப்பாற்பட்டது என்று பார்த்தோம். அந்த நிலையைப் பாழ், நிறை சூன்யம், தமஸ், இருட்டு என்று உபனிடதங்கள் கூறுகின்றன. அதை வியக்தம் (சகளம் Manifestation). அவ்யத்தம் (நிஷ்களம் Unmanifestation) இவைகளுக்கு அப்பாற்பட்ட அகள நிலை என்பது. அந்நிலையில் ஓர் அசைவு, விழிப்பு ஏற்பட்டு நான் என்ற உணர்வு உண்டாயிற்று. அது எப்படி, எப்போது, ஏன் ஏற்பட்டது என்பதெல்லாம் யாரும் அறிந்திலர். அது தேவரகசியம் (Divine Mystery) என்பர்.

"யத்தத் காரணமவ்யக்தம் நித்யம் ஸதஸதாத்மகம்
தத்விஸ்ருஷ்டஹ ஸபுருஷஹ லோகேப்ரஹ்மேதி
[கீர்த்யதே"

அதாவது சத்தும் அசத்துமாய நித்திய மாயா அவ்யக்த காரணத்தினின்றும் பிரம்மன் என்று உலகோரால் போற்றப்படும் பிரசித்திப் பெற்ற புருஷன் தோன்றினன் என்று உபனிடதங்கள் கூறுகின்றன.



எப்படித் தோன்றினன் என்பதற்கு "தபஸஸ்தந்மகிமா அஜாயதைதநும்" அதாவது பெரிய தபோசக்தியினல் ஒன்று தோன்றிற்று என்று உபனிடதம் கூறுகின்றது.

அவ்யக்தம் என்றால் ஒடுக்கம், வியக்தம் என்றால் விழிப்பு என்பது இங்கு பொருள். அகளநிலையான சிவ சத்தில் விழிப்பு ஏற்பட்டபோது அது சித்து (சிவன்) சடம் (மாயை) இரண்டாக வெளிப்பட்டுக் கூடியபோது சிவன் என நாமபேதம் உண்டாயிற்று. இந்த நிலைக்கு நிஷ்கள சிவன் (பிரம்மன்) எனப்பெயர்.

சிவனின் தன்மை சத்து, சித்து, ஆனந்தம் ஆகிய முக்குணங்களாம். இது மேல்நோக்கி எழும் தீச்சுடர் போன்று முக்கோண முகமாக (வடிவமாக) சாத்திரங்களில் கூறப்பட்டுள்ளது. மாயையின் தன்மை தாமதம், ராசதம், சத்துவம் என்ற முக்குணங்களாம். இது கீழ் நோக்கி விழும் நீர்த்துளிபோன்ற முக்கோண வடிவமாம். இந்த இரண்டின் சேர்க்கையே பிரபஞ்சத்தின் தோற்றம் என்பதை இவ்விரு முக்கோணங்களின் பின்னல் குறிப்பிடுகின்றது. மையத்திலுள்ள புள்ளி சிவத்தையும், அதைச் சுற்றியுள்ள வட்டம் பிரபஞ்சத்தின் சுற்றளவையும் குறிப்பிடுகின்றது. இந்தக்குறியை சர்வ சாதாரணமாகஎல்லா சைவசமயப் பெண்களும் தங்களது வீட்டுப் பூசையறைகளில் கோலமாகப் போடுவதைக் காணலாம். அவை வருமாறு :—



அகளமாகிய சிவசத்தினின்றும் தோன்றிய நிஷ்கள ரூபமாகிய சிவன் மாயையோடு கூடி காலதேசவர்த்தமானங்கட்கு உட்பட்டு சகளாவத்தையை யடைந்து பஞ்சகிருத்தியத்தில் ஈடுபடும்போது அதற்கு ஈஸ்வரன் (பதி) என்ற நாமம் ஏற்பட்டது. இதைப் புருடன் என்றும் சொல்வதுண்டு. மற்ற எண்ணற்ற ஈஸ்வரர்களிலிருந்து இதைப் பிரித்துக்காட்ட இதைப் பரமேஸ்வரன் அல்லது விராட் புருடன் என்று அழைக்கப்படுகிறது. அதாவது எல்லா ஈஸ்வரர்களுக்கும் மேலான ஈஸ்வரன் என்பது பொருள். மற்ற கீழுள்ள அனந்த ஈஸ்வரர்களைப் பற்றிப் பின்னால் சொல்லப்படும்.

நிஷ்களமாயும் நிர்க்குணமாயும், அகண்டமாயும் இருந்த சிவன் எப்படி சகளமாய், கண்டமாய் ஆனான்? தன் வினையினால் அல்லது வேறொன்றால் உந்தப்பட்டா என்றால்; இல்லை. உயிர்களின் மேல் வைத்த கருணையினால் பஞ்சகிருத்தியத்தின் பொருட்டுத் தனது தபோசக்தியினால், தியாக சங்கல்பத்துடன் தன்னைத்தானே காலதேசவர்த்தமானத்துக்குள் தன்னைக்கட்டுப்படுத்திக் கொண்டான். அதனாலேயே அவனுக்குத் தியாகராஜன் என்ற நாமமும் உண்டாயிற்று. இதை, திருவுந்தியாரில்,

அகளமாய் யாரும் அறிவரிதப்பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற
தானாகத் தந்தது என்று உந்தீ பற

என்று கூறப்பட்டிருக்கிறது.

"இச்சா சக்தி உமாகுமாரி" என்ற உபனிஷத்தின் வாக்கியப்படி சிவனின் இச்சா சக்தியே உமா என்ற கன்னியாம். சிவனினின்றும் எழும் ஒளியே அதாவது, சிவனின் பிரஞ்ஞையில் அசைவு (The change in the Cosmic Consciousness) சக்தியெனப்படும். இதற்கு ஆதி சக்தி (Fohat) என்று பெயர்.



இலங்கிபது எவ்வொளி அவ்வொளி ஈசன்
துலங்கு ஒளிபோல்வது தூங்கு அருட்சத்தி
விளங்கொளி மூன்றே விரிசுடர் தோன்றி
உளங்கொளி உள்ளே ஒருங்கு நின்றானே —திருமந்திரம்

மாயையை கலக்கிப் பிரபஞ்சத்தைப் படைப்பது இறைசத்தியாதலால் உபசாரமாக இது மாயாசத்தி என வழங்கலாயிற்று. "மாயாம்துப்ரகிருதிம் வித்தியாத் மாயிநம்து மகேஸ்வரம்" அதாவது மாயை பிரகிருதி யென்றும், மயையை உடையவன் மகேஸ்வரன் என்றும் அறிவாயாக என்பது உபனிடத வாக்கியம். ஒரு நாணயத்தின் இருபக்கங்கள்போல சத்தும் (சிவன்) அசத்தும் (மாயை) இரண்டறப் பிரிப்பற்று சமவேதமாய் நிற்பது.

மறுதலை இருமைகட்கும் (Pairs of Opposites), நாமரூபங்கட்கும் (Name and form), மானோவாக்குக்காயங் (Thought, Word and deed) கட்கும் அப்பாற்பட்ட அவ்யக்த (Unmanifested) சிவம் உயிர்களின் பொருட்டு வியக்தமாகி (Manifested) மேற்கொண்ட அவதரம் (States) சச்சிதானந்த சொரூப சிவன் என்று மேலே பார்த்தோம். இந்த சத்து சித்து ஆனந்தம் என்ற முக்குணத்தோடு கூடிய சிவன் ஆதிசக்தியை (முக்குணமாயை) அணையும்போது முறையே கிரியாசத்தி, ஞானசத்தி, இச்சா சத்தி என்ற சத்திபேதங்களை அடைகிறான். சிவனின் கிரியாசத்தி ரஜோகுண மாயையில் பிரதிபலித்துப் படைத்தல் தொழிலைச் செய்யும்போது பிரம்மன் என்ற பதவி நாமத்தையும், அவனின் ஞானசத்தி சத்துவகுண மாயையில் பிரதிபலித்துக் காத்தல்தொழிலைச் செய்யும் போது விஷ்ணு என்ற பதவிநாமத்தையும், அவனின் இச்சாசத்தி தமோகுண மாயையில் பிரதிபலித்து

அழித்தல் தொழிலைச் செய்யும்போது உருத்திரன் என்ற பதவிநாமத்தையும் சிவன் அடைகின்றான். இம்மூன்று அம்சங்களும் சிவனின் முப்பட்டைக் கண்ணாடிபோன்று மும்முகங்களாம் (Aspects). இந்த மூன்று நிலைகளின் சத்தி முறையே சரஸ்வதி, லக்ஷ்மி, காளி எனப்படும். இவை ஆதி(உமா)சத்தியின் பரிணாமங்களாம். இவ்வாறு ஒருவனே மூவராக விரிந்தனன்.

"ஓர் உருவம் மூவுருவம் ஆனநாளோ" —அப்பர்

சித்தத்தின் கூறாகிய மனம், புத்தி, அகங்காரம் என்ற மூன்றில் மனத்திற்கு மேற்பட்டது புத்தி, புத்திக்கு மேற்பட்டது அகங்காரம். அதுபோன்றே சிவனின் கூறாகிய பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் என்ற மூன்று அம்சத்தில் விஷ்ணுவின் நிலை பிரம்மாவின் நிலையில் மேற்பட்டது; உருத்திரனின் நிலை விஷ்ணு நிலையில் மேற்பட்டது. ஆனால் ஒன்றில்லாமல் மற்றொன்று இருக்க முடியாது. நெருங்கிய தொடர்பின் காரணமாக சிந்தையை சீவன் என்று உபசாரமாக அழைப்பது போல் சிவனின் முதல் அவதாரம் உருத்திரன் ஆனதாலும் இரண்டிற்குமுள்ள நெருங்கிய தொடர்பின் காரணத்தினால் உருத்திரன் உபசாரமாக சிவன் எனப்போற்றப் படுகிறான்.

உண்மையில் பார்க்கப்போனால் சிவத்திற்கு இந்த மூன்று நிலைகள் மட்டும் அல்ல. அது சிவன், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேஸ்வரன், உருத்திரன், விஷ்ணு, பிரம்மா என்ற நவ (9) பேதங்களையுடையது. சிவம் - அகளம்; சிவன், சத்தி, நாதம், விந்து இந்நான்கும் அருவமாகிய நிஷ்களம்; சதாசிவன் அருவுருவமாகிய சகள நிஷ்களம்; பரமேஸ்வரன், உருத்திரன், விஷ்ணு, பிரம்மா இந்நான்கும் உருவமாகிய சகளமாம். இது சிவ தத்துவம் எனப்படும்.



சிவன், சத்தி, நாதம், விந்து,
சதாசிவன், திகழும் ஈசன்
உவந்தருள் உருத்திரன்தான், மால், அயன்
ஒன்றின் ஒன்றாய்
பவந்தரும் அருவம் நால், இங்கு
உருவம்நால், உபயம் ஒன்றும்
நவந்தரும் பேதம் ஏகநாதனே நடிப்பன் என்பர்

—சித்தியார்

மலர்ந்த அயன், மால், உருத்திரன், மகேசன்
பலந்தரும் ஐம்முகன் பரவிந்து நாதம்
நலந்தரும் சத்தி சிவன் வடிவாகி
பலந்தரும் லிங்கம் பராநந்தி யாமே. —திருமந்திரம்

இதுவரை ஈஸ்வரர்களுக்கெல்லாம் ஈஸ்வரனும், மூலபுருடனுமான பரமேஸ்வரனைப் பற்றிப் பார்த்தோம். இனி சாத்திரங்களிற் கூறப்படும் பரமேஸ்வரனுக்குக் கீழுள்ள ஸ்ரீகண்டேஸ்வரர், அனந்தீஸ்வரர், வித்தியாதீஸ்வரர், மந்திரேஸ்வரர் முதலான எண்ணிறந்த கடவுளர்கள் யார் என்பதைப் பார்ப்போம்.

ஒரு சாம்ராஜ்யத்திற்கு (Empire)த் தலைவன் ஏகச் சக்கராதிபதியாகிய சக்ரவர்த்தியாகும். அவனுக்குக் கீழ் சிற்றரசர்கள், இராஜப்பிரதிநிதிகள், கவர்னர்கள், கலெக்டர்கள், தாசில்தார்கள், ரெவின்யூ இன்ஸ்பெக்டர்கள், கிராமமணியக்காரர்கள் முதலான எண்ணிறந்த உத்தியோகஸ்தர்கள் படிப்படியாக இருக்கின்றனர்.

கிராமத்திற்குத் தலைவன் மணியக்காரன்; பிர்க்காவிற்குத் தலைவன் ரெவின்யூ இன்ஸ்பெக்டர்; தாலுக்காவிற்குத் தலைவன் தாசில்தார்; ஜில்லாவிற்குத் தலைவன் கலெக்டர்; மாகாணத்திற்குத் தலைவன் கவர்னர்; நாட்

டிற்குத் தலைவன் இராஜப்பிரதிநிதி (கவர்னர்ஜெனரல்). இவ்வாறு ஒருவருக்குக்கீழ் ஒருவர் பல உத்தியோகஸ்தர்கள் இருக்கின்றனர். இந்த உத்தியோகஸ்தர்களெல்லாம் மேல்படியிலுள்ளவர்கள் கீழ் உள்ளவர்களைப் படிப்படியாக அதிட்டித்து நின்று குடிகளின் நலனுக்காக சக்ரவர்த்தியின் ஆணையைத் தலைமேற் கொண்டு தேச பரிபாலனம் செய்துவருவர்.

இந்தப் பதவிகளில் கவர்னர்ஜனரல், கவர்னர், கலெக்டர் முதலிய பெரிய பதவிகளை முதலில் சக்ரவர்த்தியின் இரத்த சம்பந்தமான நெருங்கிய உறவினர்களே (Members of Royal Family) வகிப்பது வழக்கம். காலக்கிரமத்தில் படித்துப் பட்டம்பெற்ற தகுதிவாய்ந்த பட்டதாரிகளைக் கீழ் உத்தியோகத்திலிருந்து மேல் பதவிகளுக்கு உத்தியோக உயர்வில் (Promotion) அமர்த்துப் படுவதுண்டு.

அவ்வாறே ஆதியந்தமற்ற அகண்ட பரிபூரணனான ஏகனாகிய மூலபுருடன் பரமேஸ்வரனின் பஞ்சகிருத்தியங்களுக்குத் துணையாய் பலநிலைகளிலும் பல திறப்பட்ட எண்ணிறந்த ஈஸ்வரர்கள் அவன் ஆணையை மேற்கொண்டு தொழிற் புரிகின்றனர்.

சந்திரன் பூமியைச்சுற்றி வருகிறது. பூமிசந்திரனுடன் சூரியனைச் சுற்றிவருகிறது. இவ்வாறு ஏழு கிரகங்கள் சூரியனைச் சுற்றிவருகின்றன. இந்தச் சூரியன் தன் ஏழு கிரகங்களுடன் இதைவிட வேறு ஒரு பெரிய சூரியனைச் சுற்றிவருகிறது. அந்தச் சூரியனும் அதைவிடப் பெரிய மற்றொரு சூரியனைச் சுற்றி வருகிறது. இவ்வாறு எல்லையற்றுப் போய்க் கொண்டேயிருக்கிறது. இதை நினைக்கில் தலைசுற்றும்.

சூரியனும் அதைச் சுற்றிவரும் கிரகங்களும் சேர்ந்து ஒரு அண்டம். பல அண்டங்கள் சேர்ந்து ஒரு பிரம்



மாண்டம். பல பிரம்மாண்டங்கள் சேர்ந்து ஒரு ஜகத். பல ஜகத்துக்கள் சேர்ந்து ஒரு விஸ்வா. பலவிஸ்வாக்கள் சேர்ந்து ஒரு மகா விஸ்வா. பல மகா விஸ்வாக்கள் சேர்ந்து ஒரு லோகம். பலலோகங்கள் சேர்ந்து ஒரு மகாலோகம். பல மகாலோகங்கள் கொண்டது ஒரு பத்மாஸம். பலபத்மாஸங்கள் கொண்டது ஒரு சம்சாரம். இப்படியே எண்ணிக்கையற்றுப் போய்க்கொண்டேயிருக்கின்றன. இதற்கு எல்லை (முடிவு) கிடையாது.

அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக்கு ஒன்று நின்றெழில் பகரின்
இல்நுழை கதிரின் துன்அணுப் புரைய
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன

—திருவாசகம்

கிரகங்கள் முதல் சம்சாரம் வரை ஒவ்வொன்றிற்கும் பலதரப்பட்ட பலநிலைகளிலுள்ள பல பதிகள் (ஈஸ்வரர்கள்) உண்டு. இவர்களுக்கெல்லாம் மேலாகப் பதியாய் இருப்பது ஒப்புயர்வற்றதும், உவமையற்றதும், மனோவாக்குக் காயங்கட்கு அப்பாற்பட்டதுமான ஏகனாகிய தேவதேவன் பரமேஸ்வரனாகிய சிவன் ஆகும்.

ஏகனாகிய சிவன் இரண்டாவது அத்தியாயத்தில் கூறியவாறு தனது சங்கல்ப மாத்திரையால் அணுமுதல் அனந்தீஸ்வரர் ஈராக அநேகனாகப் பரிணமித்தபோது முதன் முதல் தோன்றியவர்களே பிரபஞ்சங்களுக்கு ஈஸ்வரர்களாகப் பதவியேற்றனர். காலாந்தரத்தில் சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர் முதலிய ஆன்மாக்கள் தங்களது தபோபலத்தால் பதி (ஈஸ்வரர்) பதவிக்கு உயர்ந்ததுமுண்டு. பசுக்கள் ஆயிரம் அஸ்வ

மேத யாகம் செய்தால் இந்திரனாகவும், இந்திரன் ஆயிரம் அஸ்வமேத யாகம் செய்தால் பிரம்மாவாகவும், பிரம்மா ஆயிரம் அஸ்வமேத யாகம் செய்தால் விஷ்ணுவாகவும், விஷ்ணு ஆயிரம் அஸ்வமேத யாகம் செய்தால் உருத்திரனாகவும், உருத்திரன் ஆயிரம் அஸ்வமேத யாகம் செய்தால் ஈஸ்வரனாகவும் இப்படியே தபோ பலத்தால் மேற்பதவிகளுக்குப் போய்க்கொண்டேயிருக் கலாம் என்று சாத்திரங்கள் கூறுகின்றன.

எல்லோருமே அந்த ஏகனாகிய பரமேஸ்வரனின் இறை பணியில் நின்று அவனது ஆணையைக் கொண்டு செலுத்துபவர் ஆவர். எல்லாம் வல்ல அவனே இவர்களை யெல்லாம் படிவரிசையாக அதிட்டித்து நின்று பஞ்ச கிருத்தியங்களை நடத்துகின்றார்.

நாம் சம்பந்தப்பட்ட வரையில் நமது சூரியனை மையமாகக் கொண்ட அண்டத்திற்கு ஸ்ரீ கண்ட பரமேஸ்வரனே (Solar Logos) பதியாகும். ஸ்ரீ கண்ட பரமேஸ்வரனுக்குச் சூரியனே இருதயஸ்தானமாகும். அதனாலேதான் சூரியன் சிவசூரியன் என்றும் சூரிய நாராயணன் என்றும் வணங்கப்படுகின்றான்.

ஸ்ரீ என்பது தெய்வீகத்தன்மையைக் குறிக்கும் அக்ஷரம். கண்டம் என்பது அகண்டத்திற்கு மறுதலை. அதாவது ஓர் எல்லை வரையரையைக் கொண்டது. சூரியனும் அதைச் சுற்றிவரும் ஏழுக்ரகங்களையும் கொண்ட இடம் ஓர் எல்லையையுடைய (அண்டம்) கோளமாகும். இதைஹிரண்யகர்ப்பம் அதாவது தங்கமயமான முட்டை வடிவம் என்பர். ஈஸ்வரன் என்றால் பதி.

சாகரனால் வரவழைக்கப்பட்ட ஆகாயகங்கை புவனத்தில் நேராக விழுந்தால் புவனம் அதைத் தாங்காது அழிந்து விடுமென்று பரமேஸ்வரன் அதைத் தன் சடாபாரத்தில் தாங்கி மெதுவாகக் கீழே விட்டான்



என்று புராணங்கள் கூறுகின்றன. ஆகாயகங்கையென்பது சிவசக்தி. ஸ்ரீ கண்டபரமேஸ்வரனுக்கு மேல் அதிகாரத்திலுள்ள ஈஸ்வரனிடமிருந்து உலகோர்த்தமாக வரும் அவரது சத்தியை இவர் வாங்கிப் புவனத்திற்கு அருள்கின்றார் என்பது தத்துவப்பொருள்.

இதை ஒரு உதாரணத்தால் காட்டுதும். மின்சார சக்தியில் நேர் அலை (Direct Current - D. C.) என்றும் மாற்று அலை (Alternative Current - A. C.) என்றும் இரண்டு விதம் உண்டென்பது யாவரும் அறிந்த விஷயம். உற்பத்தி நிலையத்திலிருந்து நேராக வரும் கரண்டிற்கு D. C. என்றும், அந்த D. C. யைச் சிறிய நிலையங்களில் (Sub-Stations) சேகரித்து வைத்து அதிலிருந்து விடுவது A. C. என்றும் சொல்லப்படுகிறது. நமது வீட்டிலுள்ள ரேடியோ, விசிறி, பல்பு முதலிய கருவிகளில் D. C. கரன்ட் நேராகத் தாக்கினால் அதைத்தாங்காமல் அவை எரிந்து போகும். ஆதலால்தான் அவைகளுக்கு A. C. கரன்ட் மூலம் தொடர்பு வைத்தால் அதனின் குறைந்த ஆற்றல் கருவிகளைத் தாக்காது; கருவிகளும் நன்றாகத் தொழிற்படும்.

மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தால் அவன்சடையிற் பாயுமது என்னேடீ
சலமுகத்தால் அவன்சடையிற் பாய்ந்திலனேல் — தரணியெல்லாம்
பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாம் சாழலோ.

என்று மணிவாசகப் பெருமான் அருளியதுபோல் மேல் இடத்திலிருந்து வரும் சிவ சத்தியை ஸ்ரீ கண்டபரமேஸ்வரர் தாங்கி நமது புவனத்திற்குச் செலுத்துகிறார். நமது வேதாகம சாத்திரங்களில் கூறப்படுவனவெல்லாம் இந்த ஸ்ரீ கண்டபரமேஸ்வரனைப் பற்றியே யாகும். இவருக்கு

நீலகண்டன் என்ற பெயரும் உண்டு. நீலம் என்றால் மாயையைக் குறிக்கும். இராமலிங்க சுவாமிகளை உங்களுக்கு என்ன வேலை என்று யாராவது கேட்டால் "நான் நீல வியாபாரி" என்று சொல்வது வழக்கமாம். இதைச் சிந்திக்கவும்.

நமது உலகிற்கு—நமது உலகம் என்றால் பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகர்லோகம், ஜனோலோகம், தபோலோகம், சத்தியலோகம் ஆகிய சப்தலோகங்களும் அடங்கியது—பதி கண்கண்ட தெய்வம் கலியுக வரதன் குமாரக்கடவுளேயாகும். இவருக்குச் சிவசத்தி ஸ்ரீகண்ட பரமேஸ்வரரிடமிருந்து இவரது திருக்கரத்திலேந்தியிருக்கும் வேல் (Rod of Power) மூலம் வருகின்றது. ஆதலாலன்றோ நமது ஆலயங்களில் வேலைத் தனியாக வைத்து வணங்கினாலும் வணங்குவார்களே தவிர, வேல் இல்லாத முருகக்கடவுளைத் தனித்து வணங்கமாட்டார்கள். என்றும் இளமையோடிருப்பதால் குமரன் என்றும், அழகே உருவமாயிருப்பதால் முருகன் என்றும் போற்றப்படுகிறது.

குமாரக்கடவுளுக்கும் ஸ்ரீகண்ட பரமேஸ்வரருக்கும் இடையில் அநேக ஈஸ்வரர்கள் இருக்கின்றனர். இவர்களெல்லாம் மேலே சொல்லியவாறு தேவரகஸ்யம் (Divine Mystery) எனப்படும் கௌமார சிருஷ்டி, அனுக்கிரக சிருஷ்டியின்கீழ் வந்தவர்களாகும்.

———

சித்தியார்

சிவன் அரு வுருவுமல்லன், சித்தினோ டசித்துமல்லன்
பவமுதற் றொழில்களொன்றும் பண்ணிடு வானுமல்லன்
தவமுதல் யோகபோகம் தரிப்பவன் அல்லன்தானே
யிவைபெற இயைந்தும்ஒன்றும் இயைந்திடா இயல்பினனே.

## 4. உயிர்கள் - Jivatmas

சீவன், பசு, உயிர், ஆன்மா முதலியன ஒரே பொருளைக் குறிக்கும் பல சொற்களாம். மணிவாசகர் இதை அடி (மை) எனக் குறிப்பிட்டிருக்கிறார். நாம் இறைவனுக்கு அடிமைப் பொருள்களாகும். நாம் நம்மில் பெரியோர்களிடம் அடியேன் என்று சொல்வது வழக்கமன்றோ! திருவுந்தியாரில் 'நாம்' என்று சொல்லப் பட்டிருக்கிறது. பச் என்றால் பந்தித்தல்; பந்திக்கப்பட்டது பசு; பாசத்தையுடையது பசு; கட்டுநீங்கினால் பசுபதியாகும்.

பசு என்றால் மானிடப்பிறவி மட்டும் அல்ல. பந்திக்கப்பட்டவைகள் எல்லாம் - எறும்பு கடை யானையீறாக அணுமுதல் அண்டம்வரை - எல்லாம் பசுக்கள் தான். சீவன் அல்லது ஜீவாத்மா என்பது சீவிக்கப்பட்ட எல்லா ஜீவராசிகளும் சேர்ந்ததே. கல்லுக்கும் உயிர் உண்டு. ஞானக்கண் கொண்டு பார்த்த மணிவாசகப் பெருமான் "கல்லாய், புல்லாய், விலங்காய், மனிதராய் எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்" என அருளியுள்ளார். ஊனக்கண் கொண்டு ஆராய்ச்சி செய்த விஞ்ஞானிகளும் கல்லுக்கும் உயிர் இருக்கிறது; உணர்ச்சியிருக்கிறது; களைப்படைகிறது, உற்சாகமடைகிறது, வளர்கிறது என்று கண்டுள்ளனர். ஏனெனில் இறைவன் அணுவிலும் இருக்கின்றான்; அண்டத்திலும் இருக்கின்றான்; துரும்பிலுமிருக்கின்றான்; தூணிலுமிருக்கின்றான். அவன் இல்லாத இடமே இல்லை; அவனின்றி ஓர் அணுவும் அசையாது. அவனே எல்லாமாய் இருக்கின்றான்.

வியக்தமான (Manifested) ஜீவ அணுமுதல் அனந்தீஸ்வரர் வரை சேதன பிரபஞ்சப் பொருட்கள் எல்லாம்

சித்தும் (Spirit) சடமும் (Matter) புணர்ந்தே பிறந்தன. சிவனும் சத்தியும் கூடிப் பிரபஞ்சம் தோன்றிற்றென்று மேலே பார்த்தோம். இந்த பலதரப்பட்ட உயிர்களுள் உணர்வின் (Consciousness) அளவில்தான் வித்தியாசம். பரமாத்மா அகண்டாகார அநாதி முத்த சித்துப் பொருள். சீவான்மா அநாதி பெத்த சித்து கண்டப் பொருள். ஒரு விஞ்ஞானி சொல்லியவாறு உயிர்(உணர்வு) தாதுப் பொருளில்(Minerals) உறங்குகின்றது; தாவரத்தில் (Vegetables) கனவுகாண்கின்றது; விலங்கில் (Animals) விழித்திருக்கிறது; மனிதனில் (Human) தன் உணர்வு (Self Consciousness) பெறுகிறது. அநாதி பெத்த சித்து உருவாகிய உயிர் ஓர் அறிவு முதல் ஏழு அறிவு வரை ஆன்ம வளர்ச்சி அடைந்துகொண்டே போய் சீவன்முத்த தசை அடைகின்றது.

ஆதலால் வியக்தமான உயிர்கள் (Manifested beings) தனி சத்தோ அல்லது தனி அசத்தோ இல்லாமல் சத்தும் அசத்தும் கூடிய சதசத்தேயாகும். அவ்வாறே தனி சித்தோ (Spirit) அல்லது தனி அசித்தோ (Matter) இல்லாமல் சித்தும் அசித்தும் கூடிய சிதசித்து (Spirit-matter) ஆகும். மானிடவர்க்கத்திற்கு (Human Kingdom) கீழ்ப்பட்ட (Mineral, Vegetable and Animal Kingdoms) உயிர்களுக்கெல்லாம் அசத்தும், அசித்தும் மேலோங்கி நிற்கும்; சத்தும் சித்தும் கீழ் அடங்கி நிற்கும். மக்களுக்கு மேற்பட்ட சீவன் முக்தர் (Super-human) களில் சத்தும், சித்தும் மேலோங்கி நிற்கும்; அசத்தும், அசித்தும் அவர்கட்கு அடிபணிந்து நிற்கும். மனிதனில் தான் சித்தும் அசித்தும் சமமாக நின்று போர்புரிகின்றன; அவனில் தான் குருக்ஷேத்திரயுத்தம் நடந்து கொண்டேயிருக்கிறது. சத்தோடு சேர்ந்து சத்துத்தன்மையும், அசத்தோடு சேர்ந்து அசத்துத் தன்மையுமாக சார்ந்ததின்



சார்ந்த வண்ணமாக ஆகின்றான். (Man is both mortal and immortal). ஆதலால் சித்து, அசித்து இரண்டையும் அறியும் இயல்புடையவனாகவும் இருக்கின்றான்.

உபனிஷத்துக்களில் ஜீவாத்மாவைப்பற்றி என்ன சொல்லுகின்றன என்பதைப் பார்ப்போம். ஏகனாகிய சிவன் தன் சிற்சத்தியின் சங்கற்பத்தால் நான் அநேகனாக ஆவேன் என்று சங்கற்பித்தமாத்திரத்தில் தீச்சுடரிலிருந்து தீப்பொறிகள் கிளம்புவதுபோன்று பிரம்மத்தினின்றும் ஜீவர்கள் உதித்தார்களென்று மேலே பார்த்தோம். நான் நாமரூபத்தோடு ஜீவர்களாகத் தோன்றுவேன் என்று சங்கற்பித்தபோது இறைவனின் அம்சங்களாகிய தீப்பொறிகள் நாமரூபத்துடன் ஜீவர்களாகத் தோன்றின என்று உபனிஷத்துக்கள் கூறுகின்றன. இதிலிருந்து காலதேசவர்த்தமானங்கட்கு உட்பட்டுநாமரூபத்தில் பிறந்த ஈஸ்வரனே ஜீவாத்மாக்கள் என்பது புலனாகிறது. ரூபம் மாயையின் காரியமாகும். நாமம் என்றால் என்னவென்று பார்ப்போம்.

உயிர்களை நாம் இட்டு அழைக்கும் பெயர்கள் உண்மையில் உயிரின் நாமம் அல்ல. உடலுக்கே அப்பெயர். நாம் இடுகிற பெயர்களெல்லாம் பிறப்பிற்குப் பிறப்பு, தேசத்துக்குத் தேசம், சாதிக்குச் சாதி மாறிக்கொண்டேயிருக்கும். "ஊர் அனந்தம், பெற்ற பேர் அனந்தம், வினையினால் உடல் அனந்தம்" என அருளியிருக்கின்றார் தாயுமானார். ஆதலால இப்பெயர்களெல்லாம் உண்மையான நாமங்கள் அல்ல. இறைவனால் சிருஷ்டிக்கப்பட்ட பொருள்கள் ஒவ்வொன்றிற்கும் இயற்கையாகவே நிரந்தரமான நாமம் ஒன்று உண்டு.

அந்த நாமம் ஒலிவடிவான பிரணவ ஓசையால் உண்டாவது. பிரணவ சொரூபியாகிய ஈஸ்வரனின்றும் தோன்றிய உயிர்கள் ஒவ்வொன்றிற்கும் ஒரு நாத ஓசை

உண்டு. சலனத்தையுடைய அணுக்களுக்கும் ஓசை யுண்டு. இந்த அணுக்களாலாய ரூபத்திற்கும் ஓர் ஓசை யுண்டு. இவ்வாறு ஒவ்வொரு பொருளின் உயிரிலிருந்தும் உடலிலிருந்தும் உண்டாகும் ஓசைகளின் கூட்டமே அப் பொருளின் உண்மையான நாமமாகும். இவ்வோசை யோகியர்களுக்கே புலனாகும். அக்ஷரங்கள் ஓசைகளி லிருந்து உண்டானவை. அக்ஷரம் என்றால் அழிவற்றது என்பது பொருள். ஆதலால் இந்த நாமங்கள் எல்லாம் அழிவற்றன.

சாத்திரங்களில் கூறுவதாவது—அகர அக்ஷரம் அகங்காரத்தை இயக்குகின்றது; அதற்கு அதி தெய்வம் உருத்திரன்: புத்தியை உகரம் இயக்குகின்றது; அதன் அதிதெய்வம் விஷ்ணு: மனதை மகரம் இயக்குகின்றது; அதன் அதிதெய்வம் பிரம்மன்: சித்தத்தை விந்து இயக்கு கின்றது; அதன் அதிதெய்வம் மகேசன்: உயிரை நாதம் இயக்குகின்றது ; அதன் அதிதெய்வம் சதாசிவன்: இவ்வாறே இந்திரியங்கள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு அக்ஷரம் இயக்குகின்றது.

ஆன்ம சிருஷ்டியைச் சொல்லும்போது ஈஸ்வரன் முதலில் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்ற ஐம்பூதங்களைத் தோற்றுவித்தான். பின்பு குபேரன், வருணன், அக்கினி, மாருதி, இந்துரன் என்ற ஐந்து தேவர்களையும் சிருஷ்டித்தான். இந்த ஐந்து தேவர் களுக்கும் முறையே ஐந்து பூதங்களும் சரீரங்களாக அமைந்தன. இந்த ஐந்து தேவர்களும் ஜீவாத்மாவிற்குச் சரீரங்களாக அமைந்தன. அத்துடன் ஞானேந்திரியங் களாகவும் கர்மேந்திரியங்களாகவும் அமைந்தன.

> "வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
> ஐந்தும் அகத்தே நகும்"

என்ற குறளின் கருத்தைச் சிந்திக்கவும்.

தேவர்களால் ஆக்கப்பட்ட இந்த சரீரத்தின் தலை யில் மயிர்கள் பிரியும் இடத்தின் வழியாக ஜீவாத்மா நுழைந்து லலாடம், கண்டம், இருதயம் என்ற மூன்று இடங்களிலும் குடிகொண்டது. ஆன்மா சாக்ராவத்தை யில் லலாடத்தில் தொழிற் புரியும்போது அதற்கு தைஜசன் என்றும், சொர்ப்பனாவத்தையில் கண்டத்தில் தொழிற் புரியும்போது வைஷ்வானரன் என்றும், சுழுத் தியில் இருதயத்தில் தொழிற் புரியும்போது பிராஞ்ஞன் என்றும் நாமம் வழங்கலாயிற்று. ஜீவாத்மா சரீரத்தில் குடிபுகும்போது பிராணனும் உள்ளிட்டுப் பிராணன். அபானன், உதானன், வியானன், சமானன் என்ற ஐந்து பிரிவாகப் பிரிந்து ஐந்து இடங்களில் இயங்கலாயிற்று. பிராணனே ஆன்மா என்றும், ஆகாசமே ஆன்மா என்றும் சில உபனிஷத்துக்கள் கூறுகின்றன.

எந்நிலங்களினுமிக்க எழுநிலம் அவற்றின்மேலாய சத்திய லோகத்தில் அமர்ந்திடும் ஈஸ்வரனிடத்தி லிருந்து அதன் அம்சமாகிய தீப்பொறி போன்ற ஜீவாத்மா காலம் (Time) தேசம் (மாயை - Space) வர்த்த மானங்கட்கு (நியதி-Causation) உட்பட்டு, கலை, வித்தை, அராகத்துடன் கூடி-பஞ்சகஞ்சுக சரீரத்துடன் (Atmic body) ஜனோலோகத்தல் (Anupadhaka Plane) வந்திறங் கியது. இந்த நிலைக்கு அதற்குப் புருடன் (Monad) என்று பெயர். இந்தப் புருடன், மாயை, காலம், நியதி, கலை, வித்தை, அராகம் ஆகிய இவைகளுக்குப் புருடதத்துவம் என்று பெயர்.

பின், புருடனுடைய ஒரு அம்சம் (அதன் சாயல்) சுவர்க்க லோகத்தின் மேற்பகுதிவரை (Higner mental) வந்திறங்கியது. இங்கு அது சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற பஞ்ச தன்மாத்திரைகளும் (Permanent atoms), மனம், புத்தி, அகங்காரம் மூன்றும் ஆக எட்டும்

சேர்ந்த புரியட்டகாயம் என்ற சரீரத்தை (Buddhic body) யடைந்தது. இந்த நிலையில் அதற்கு ஆன்மா (Ego) என்ற பெயர்.

அங்கிருந்து ஆன்மாவின் ஒரு அம்சம் (சாயல்) மனம் (Mental), வாக்கு (Astral) காயம் (Physical) என்ற மூன்று சரீரங்களையும் (Bodies) ஏற்று இச்சை, அறிவு, செயலுடன் பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம் இந்தத் திரிலோகங்களிலும் போக்கு வரவு புரியாநிற்கும். இந்த நிலையில் அதற்கு சீவன் (Personality) என்று பெயர்.

மேலே கூறப்பட்ட தன்மாத்திரை 5, பூதம் 5, ஞானேந்திரியம் 5, கர்மேந்திரியம் 5, அந்தக்கரணம் 4, ஆக இந்த 24க்கும் ஆன்ம தத்துவம் என்று பெயர்.

உயிர் இந்த ஐந்து சரீரங்களுடனும் (தனுக்களுடனும்) பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகர்லோகம், ஜனோலோகம் ஆகிய ஐந்து உலகங்களிலும் சஞ்சரிக்கும்போது முறையே சாக்கிரம், சொர்ப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்என்ற ஐந்து அவத்தைகளையும் (States of Consciousness) அடையாநிற்கும். நாபி துரியத்திற்கும். மூலாதாரம் துரியாதீதத்திற்கும் இடமாகும்.

ஆன்மா (பசுக்கள்) பாசத்தால் பந்திக்கப்பட்டிருக்கின்றனவென்று மேலே பார்த்தோம். பாசத்தைஅழுக்கு, மலம் என்றும் சொல்லப்படும். இம்மலம் ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று வகைத்து. இம்மும்மலங்களாலும் கட்டுப்படுத்தப்பட்ட உயிர்களுக்கு சகலர் என்று பெயர். தீவிர ஞானசாதனங்களால் இப்பாசங்கள் ஒவ்வொன்றாகக் கட்டறும். முதலில் மாயாமலம் கட்டவிழும். மாயாமலமட்டும் கட்டவிழ்ந்து மீதி ஆணவம், கன்மம் என்ற இரண்டு மலத்தோடு இருக்கும் உயிர்களுக்கு பிரளயாகலர் என்று பெயர். பின் கன்ம மலம் கட்டவிழ்ந்து ஆணவ மலத்தோடுமட்டும் இருக்கும் உயிர்களுக்கு விஞ்ஞானகலர் என்று பெயர். ஆணவம் அடங்கினவர்கள் சீவன் முத்தராவர்.



இந்தக்கட்டுக்கள் அவிழ்ந்து ஞானம் பெற குரு அருளும் தீக்ஷையும், உபதேசமும் வேண்டும். இது இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதத்தால் கிட்டும்.

பசுப்பல கோடி பிரமன் முதலாய்ப்
பசுக்களைக் கட்டிய பாசம் மூன்றுண்டு
பசுத்தன்மை நீக்கிப் பாசம் அறுத்தால்
பசுக்கள் தலைவனைப் பற்றி விடாவே —திருமந்திரம்

## மும்மலங்கள்

மலங்கள் ஆணவம், கன்மம், மாயை என மூவகைத்து என்று மேலே பார்த்தோம். ஆணவமலம் செம்பிற்களிம்புபோலவும், நெல்லிற்கு உமிபோலவும் அனாதியே உயிர்கள் தோன்றியபோதே உடன் தோன்றிற்று. அதனால் அது சகச மலம் எனப்படுகிறது. மற்ற கன்மம், மாயை இரண்டும் இடையில் வந்ததால் அவற்றிற்கு அவாந்தர மலங்கள் என்று பெயர்.

1. **ஆணவமலம் என்றால் என்ன?** ஜீவாத்மாக்கள் பரமாத்மாவைப் போன்றே சித்தாகிய வியாபகப் பொருளாம். ஆனால் அவைகளின் இச்சா ஞானக்கிரியைகளைப் பிரகாசிக்கவிடாமல் தடை செய்து ஆன்மாக்களை அணுத்தன்மையாகச் செய்துவிட்டபடியால் இம்மலத்திற்கு ஆணவ மலம் என்று பெயர் வந்தது. வேதாந்த பரிபாஷையில் இதை அவித்தை என்பர்.

ஓர் அரை (Cell) யுள்ள காலராக்கிருமி ஒன்றை பூதக்கண்ணாடி மூலம் ஆராய்ச்சி செய்தபோது, அக்கிருமியின் உடல் மத்தியில் ஒரு ஜவ்வுத்தோன்றி ஒன்றாயிருந்த அக்கிருமி இரண்டாயிற்று. அவ்வாறே அந்த இரண்டும்

நான்காகவும், அந்நான்கு எட்டாகவும் அப்படியே விநாடிக்குள் ஆயிரக்கணக்கான கிருமிகள் அந்த ஒரு கிருமியிலிருந்து உற்பத்தியானதை விஞ்ஞானிகள் கண்டனர். அவ்வாறே ஏகனாகிய இறைவனில் (மகத்து-Cosmic Consciousness) எண்ணிக்கையற்ற உயிர்கள்-(அகங்காரங்கள்—Centres of Consciousness) தோன்றின என உபனிஷத்துக்கள் கூறுகின்றன. அப்படி உயிர்களைப் பிரிக்கும் நுண்ணிய ஜவ்வுபோன்றதே ஆணவ மலம் ஆகும்.

ஆணவமலத்தின் காரியம்: மோகம், மதம், இராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் முதலியனவாம். அவற்றையெல்லாம் இரண்டில் அடக்கலாம்; அவைதான் நான்என்ற அகங்காரம், எனது என்ற மமகாரங்களாகும். உயிர்களுக்கு எல்லா தீமைகளும் இவைகளாலேயே உண்டாவனவாம்.

தங்கத்தில் களிம்பு சேர்ந்தால் செம்பாகிறது. அழுக்கைக் கொண்டு அழுக்கை எடுப்பதுபோல், ரசவாத மூலிகைகளால் செம்பிலுள்ள களிம்பை நீக்கிவிட்டால் அது பழையபடி தங்கமாக மாறிவிடுகிறது. அது போன்று ஆணவமலத்தைப் போக்க மாயாமலகாரியமாகிய தனு, கரண, புவனத்துடன் ஆன்மாக்களைக் கூட்டிப் போகத்தில் அழுத்துவித்து அம்மலத்தைப் போக்கினல் உயிர்களின் இச்சா ஞானக் கிரியைகள் பூரணமாகப் பிரகாசியா நிற்கும்.

இதற்கு மூலிகை அன்பு, தயாளம், ஜீவகாருண்யம், ஈகை, பரநல-பரோபகார சிந்தனை முதலியனவைகளாம்.

2. கருமமலம்: இறைவனின் ஆதி சங்கல்பமாகிய மூலவினையால் உந்தப்பட்ட எல்லா உயிர்களும்கருமத்தை (வினையை) செய்தேயாக வேண்டும். இவ்வினை நல்வினை, தீவினை என இருவகையாம். இந்நல்வினை தீவினைகளுக்



கேற்ப உயிர்கள் புண்ணிய பாவ பயன்களைப் பெற்றுப் பல பிறவிகளை அடைந்து பூலோக, புவர்லோக, சுவர் லோகங்களில் பிறந்து இறந்து போக்குவரவு புரிந்து இன்பதுன்பங்களை அனுபவிக்கின்றன. இந்த வினைகளில் சஞ்சிதம், ஆகாமியம், பிராரத்வம் என்ற மூன்று வகைகள் உண்டு சஞ்சிதம் என்ருல் பல ஜென்மங்களில் செய்த வினைகளின் மூட்டை (Store House). ஒரு ஜென்மத்தில் அனுபவிக்கப்பிறக்கும்போது சேர்த்து அனுபப்படும் வினை பிராரப்த (Fate) வினையாகும். இந்த ஜென்மத்தில் செய்யப்படும் வினைக்கு ஆகாமியம் (Free Will) எனப் பெயர். இம்மலம் நீங்குவதற்குப் பாவத்தைத் கொடுக்கும் தீவினைகளை யகற்றி, புண்ணியத்தைத்தரும் நல்வினைகளையே செய்ய வேண்டும். இந்த நல்வினைகளையும் ஈஸ்வரார்ப்பணமாகச் செய்தால் கட்டு நீங்கிப் பிறப்பற்று வீடுபேற்றையடையலாம். இம்முறைகளைக் கருமம், விகர்மம், அகர்மம் என கீதையில் கூறப்பட்டிருக்கிறது. புண்ணியம் ஆம், பாவம்போம்-ஔவை.

இதனல் இருவினையொப்பு, மலபரிபாகம், சத்தி நிபாதம் ஏற்பட்டு மோக்ஷம் கிட்டுகிறது.

3. மாயாமலம்: அழுக்கை அழுக்கைக் கொண்டு நீக்குவதுபோல் ஆணவ மலத்தைப் போக்க சடமாகிய மாயாமலகாரியங்களான தனு கரண, புவன போகங்கள் உயிர்களுக்கு இறைவனல் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதை மேலே பார்த்தோம். இம்மாயை நன்மை, தீமை, புண்ணியம், பாவம் முதலியவற்ற உள்ளவாறு உணரவொட்டாமல் உயிர்களை மயக்கும். இவ்வாறு மாயை தனுகரண புவனபோகங்களைத் தோற்றுவித்து அவற்றின்வேருய் நின்று மயக்கத்தையும் செய்யும். இம் மலத்தை நித்தியாநித்திய வஸ்து விவேகத்தால் நீக்க வேண்டும்.

# 5. பஞ்சகிருத்தியங்கள்

பஞ்சகிருத்தியங்கள் என்ருல் இறைவனின் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து தொழில்களாம். இதனை மணிவாசகப் பெருமாஞல் "வாழ்க" என்றும், திருவுந்தியாரில் "ஆண்டான்" என்றும் கூறப்பட்டுள்ளது. உயிர்கள் வாழவே இறைவன் ஆணையுடன் நீக்கமற நின்று ஆள்கின்ருன். உயிர்களைப் பீடித்திருக்கும் ஆணவம், மாயை, கன்மம் என்றமும் மலங்களும் படைப்பால் ஆணவமலமும், காத்தலால் மாயாமலமும், அழித்தலால் கன்மமலமும் பரிபாகமடைந்து உயிர்கள் வீடுபேறடைய இறைவன் திரோதான (மறைப்பு) சக்தியுடன் கூடி நின்று அருள் புரிகின்ருன்.

## 1. சிருஷ்டி (படைத்தல்)

இறைவன் இப்பிரபஞ்சத்தை ஏன் படைத்தான். எதைக் கொண்டு படைத்தான் என்பதை மேலே பார்த்தோம். இப்போது எப்படிப் படைத்தான் என்பதைப் பார்ப்போம். இங்குக் கூறப்படுவதெல்லாம் புது சிருஷ்டியைப் பற்றியே தவிர அநாதி சிருஷ்டியைப் பற்றி அல்ல. சிலந்தி தன் வலையை சமைப்பது போன்று இறைவன் இப்பிரபஞ்சத்தைப் படைத்தான் என்று உபனிஷத்துக்கள் உபமான உபமேயத்துடன் கூறுகின்றன.

| உபமேயம் | உபமானம் | காரணங்கள் |
|---|---|---|
| இறைவன் | சிலந்தி | நிமித்தம் |
| மாயை | நூல் | முதல் |
| சத்தி | கால்கள் | துணை |



உபமேயமாகிய இறைவன் சிருஷ்டிக்கு உபமானமாகக் கூறப்பட்டிருக்கும் சிலந்தியின் வலையைப் பற்றி வேதாந்திகளுக்கும் சித்தாந்திகளுக்கும் யார் நிமித்த காரணன், யாது முதற் காரணம். எது துணைக் காரணம் என்பவைகளைப் பற்றி அனவசியமான குதர்க்கங்களும், விதண்டாவாதங்களும் நடைபெறுகின்றனவே தவிர அந்த உபமான உபமேயத்தின் முக்கிய அம்சங்களையும், ஒற்றுமைகளையும் சீர்தூக்கி ஆராய்ந்ததாகத் தெரியவில்லை.

சிலந்தி என்ருல் அதன் அவயவங்களோடு கூடிய உடலும் உயிரும் சேர்ந்துதான் சிலந்தி என்கிருேம். அதில் ஒன்றை விட்டு ஒன்றைப் பிரிக்க முடியாது. பிரித்தால் சிலந்தி என்ற பெயரே போய்விடும் ஒன்றில்லாமல் மற்ருென்று இருக்கமுடியாது. அது போலவே இறைவன் என்ருல் சித்து, சடம், சத்தி மூன்றும் வியாபக வியாப்பிய மென்பதின்றி சமவாய சமவேதமாய்ப் பிரிப்பின்றி ஒரு நாணயத்தின் இருபக்கங்கள் போல் இருப்பதுவே. இவைகளைப் பிரித்தால் இறைவன் என்ற பெயர் போய்விடும். ஆதலால் இறைவனே எல்லா காரணங்களாக இருக்கின்ருன் என்பதில் இழுக்கில்லை.

இது ஒருபுறமிருக்க, சிலந்தி தனது வலையை எப்படிக் கட்டுகிறது என்பதை உபனிஷத்துக்களை அருளிய மகரிஷிகள், அல்லது தற்கால நவீன உயிர்நூல் ஆராய்ச்சியாளர்களைத் தவிர குதர்க்கம் பேசி, வாதிடும் சித்தாந்திகளோ வேதாந்திகளோ கவனித்ததாக தெரியவில்லை.

சிலந்தி கூடு கட்டுவதைக் கூர்ந்து கவனித்தால் அது முதலில் தனது வலைக்கான ஒரு எல்லையை வரையறை செய்துகொண்டு, ஒரு பெரிய வட்டத்தை ஏற்படுத்தி, அதன் மையத்திலிருந்து குடைக்கம்பிகள் போல் சுற்று

வட்டத்திற்கு நூலால் பிணித்துக் கட்டுகிறது. பின் வெளிவட்டத்திலிருந்து வட்டத்திற்குள் வட்டமாகப் பல வட்டங்களை இழையால் இழைத்துக்கொண்டுபோய் நடுவில் தான் இருப்பதற்கு ஒரு இடத்தை ஏற்படுத்திக் கொள்கிறது.

அது போன்றே இறைவன் தனது அண்டத்தை சிருஷ்டிக்க முதலில் ஒரு வட்ட வடிவமான (Ring-Pass-Not) வெளியைத் தனது சங்கல்பத்தால் வரையறுத்துக் கொள்கின்றார். நூல்களில் சொல்வதெல்லாம் நமது சூரியாண்டத்தையும் (Solar System) அதன் பதியாகிய ஸ்ரீகண்ட பரமேஸ்வரனை (Solar Logos)ப் பற்றியேயாம். இதைத்தான் ஹிரண்யகர்ப்பம் அதாவது தங்கமயமான முட்டை (வடிவம்) என்று நூல்கள் கூறுகின்றன. இந்த ஹிரண்யகர்ப்ப அண்டத்திற்குள் பதியாகிய ஸ்ரீகண்ட பரமேஸ்வரர் தனது "சத்" அம்சத்தின் ரஜோகுண ரகித கிரியாசக்தியினால் பிரம்மா என்ற பதவி நாமத்துடன் மாயையைக் கலக்கிப் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், அநுபாதகம், ஆதி என்ற சப்த பூதங்களை உண்டாக்கி, அவைகளைக் கொண்டு சூரியனை மையமாகக் கொண்ட நிவர்த்தி கலை, பிரதிட்டாகலை, வித்தியாகலை, சாந்தி கலை, சாந்தியாதீத கலை, சக்தி (விஷ்ணு) கலை, சிவகலை யென்ற சப்த கலைகளையும் (Seven Cosmic Planes) உண்டாக்கி, சூரியனையும் அதனைச் சுற்றிவரும் சந்திரன், செவ்வாய், புதன், குரு, வெள்ளி, சனி, பூமி என்ற சப்த கிரகங்களையும் படைத்தார். சப்த கிரகங்களில் ஒன்றாகிய நமது பூமி பூ, புவர், சுவர், மகர், ஜன, தப, சத்யம் என்ற சப்த உலகங்களையும் கொண்டது.

மாயை கலக்குண்டபோது நாத ஒலியும், உஷ்ணத்தோடு கூடிய ஒளியும் உண்டாயிற்று. அதைத்தான் நெருப்புக் குழம்பு (Nebula) என்று பூதபௌதிக விஞ்



ஞான ஆராய்ச்சியாளர் கூறுவர். சுழற்சியோடு கூடிய இந்த நெருப்புக் குழம்பு குளிர்ந்து தடித்து, இறுகி சூரியனாகவும், அதனைச் சுற்றி வரும் கிரகங்களாகவும் பிரிந்தன.

பூதங்கள் உண்மையில் ஏழாகும். ஆதி பூதமும், அநுபாதக பூதமும் சுத்த மாயா காரியமாதலால் அவைகளை விட்டு இப்பிரபஞ்சத்துக்குரிய அசுத்த மாயாகாரியங்களாகிய பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் ஆகிய ஐந்து பூதங்களைப் பற்றியே நூல்களில் கூறப்பட்டிருக்கின்றன.

இப்பூதங்களின் படைப்பில் சில நியதிகள் (Divine Laws) உள. அவையாவன : அவற்றின் அளவு (மாத்திரை) பருமன், உருவம், நிறம் முதலியனவாம். ஒவ்வொரு பூதத்தின் தன் மாத்திரையாவன :—ஆகாயத்தின் தன் மாத்திரை (சப்தம்) ஓசை, வாயுவின் தன் மாத்திரை (பரிசம்) ஊறு, தேயுவின் தன் மாத்திரை (ரூபம்) ஒளி, அப்புவின் தன் மாத்திரை (ருசி) சுவை, பிருதிவின் தன் மாத்திரை (கந்தம்) நாற்றம் என்பவையாம். ஒவ்வொரு தன் மாத்திரையிலிருந்தும் ஒவ்வொரு பூதம் உண்டாகும். மற்றும் அவை (பூதங்கள்)தோன்றும் முறையாவன: ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து தேயுவும், தேயுவிலிருந்து அப்பும், அப்புவிலிருந்து பிரகிருதியும் தோன்றின. ஆதலால் ஆகாயத்தில் சப்த தன் மாத்திரை மட்டும் உண்டு. வாயுவில் ஸ்பரிச தன் மாத்திரை வெளிப்பட்டும், சப்த தன் மாத்திரை உள்ளடங்கியும்ஆக இரண்டு தன் மாத்திரைகள் உண்டு.தேயுவில் ரூப தன் மாத்திரை வெளிப்பட்டும், ஸ்பரிச சப்த தன் மாத்திரைகள் உள்ளடங்கியும் ஆக மூன்று தன் மாத்திரைகள் உண்டு. அப்புவில் ரச தன் மாத்திரை வெளிப்பட்டும், ரூபம், ஸ்பரிசம் சப்த தன் மாத்திரைகள்

உள்ளடங்கியும் ஆக நான்கு தன் மாத்திரைகள் உண்டு. பிருதிவியில் கந்த தன் மாத்திரை வெளிப் பட்டும் மற்ற நான்கு தன் மாத்திரைகள் உள்ளடங்கியும் ஆக ஐந்து தன் மாத்திரைகள் உள. உதாரணமாக மாம்பழத்திற்கு சுவை, ஒளி, ஊறு ஓசை, நாற்றம் என்ற ஐந்து குணங்களும் உண்டு. தண்ணீருக்கு நாற்றம் (மணம்) இல்லை; மற்ற நான்கு குணங்களும் உண்டு. நெருப்புக்கு நாற்றம், சுவை கிடையாது; மற்ற மூன்றும் உண்டு. காற்றுக்கு ஊறும், ஓசையும் மட்டும்தான் உண்டு. ஆகாசத்திற்கு ஓசை ஒன்றுதான் உண்டு.

இதையே மணிவாசகப் பெருமான் தமது திருவாசகத்தில்,

பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி.

எனக் கூறியுள்ளார்.

மற்றும் பூதங்களின் உருவங்கள், நிறங்கள் முதலிய வைகளைப் பற்றியும் வேதாந்த சித்தாந்தக் கட்டளை களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

மாயையைக் கலக்கிப் பூதங்களையும், கலைகளையும், உலகங்களையும் படைத்ததோடு பிரம்மாவின் வேலை முடிவுற்றது. அதனால்தான் பிரம்மாவிற்குக் கோயில் இல்லை என்ற சம்பிரதாயம். இதை பிராகிருத சிருஷ்டி என்பர். சிருஷ்டித் தொழிலால் உயிர்களின் ஆணவமலம் பரிபாகமடைகின்றது.



## 2. திதி - காத்தல்

உயிர்களின் மாயாமல பரிபாகத்திற்காகக் காத்தல் தொழில் நடைபெறுகின்றது. ஸ்ரீகண்ட பரமேஸ்வரன் தனது "சித்" அம்ஸத்தின் சத்வகுண ரகித ஞான சக்தி யினால் விஷ்ணு என்ற பதவி நாமத்துடன் காத்தல் தொழிலை நடத்துகின்றார். விஷ்ணுவுக்குப் படைத்தல், காத்தல் என்ற இரண்டு அதிகாரங்களுமுண்டு. தனது அன்பு (Love) என்ற பிணிப்பு சக்தியினால் (Divine Law of Cohesion)மேற்படி பஞ்சபூதங்களைப் பஞ்சீகரணம்செய்து ரசாயன மூலப்பொருட்களை (Chemical Elements) உண் டாக்கி அவைகளைக் கொண்டு பல்வேறு உருவங்களைச் சிருஷ்டித்து, அவைகளைத் தாங்கிக் காத்து நிற்கின்றார். இந்தப் பிணிக்கும் சக்தி இன்றேல் பூதங்கள் ஒன்றோ டொன்று சேராது; உருவங்களும் கைக்கூடா.

ஐம்பூதமும் பத்தாக்கி, அவைபாதி நந்நான்காக்கி
நந்துதம் பாதிவிட்டு நாலொடு நாலுங்கூட்ட
வந்தன தூலபூதம் மகாபூதம் இவற்றினின்றும்
தந்தன நான்காம் தூலதனு அண்ட புவனபோகம்.

பல்வேறு உருவங்களாவன:—ஆகாச பூதாசாரம் (Elemental Essence I), வாயு பூதாசாரம் (Elemental Essence II), தேயு பூதாசாரம் (Elemental Essence III), தாது வர்க்கம் (Mineral Kingdom), தாவர வர்க்கம் (Vegetable Kingdom), விலங்கு வர்க்கம் (Animal Kingdom), மனித வர்க்கம் (Human Kingdom) எனஏழு விதமான வர்க்கங்கள் படைக்கப்பட்டன. இவை ஒவ்வொன்றிலும் ஏழு உட்பிரிவுகள் உண்டு. இதைத்தான் வள்ளுவரும் தமது குறளில் "எழுமை எழு பிறவி" அதாவது ஏழேழு-நாற்பத்தொன்பது பிறவிகள் எனக் கூறியுள்ளார்.

இதை வைகிருத சிருஷ்டி என்பர். இத்துடன் தேவ வர்க்கம் (Devas Kingdom) என்ற ஒரு படைப்பும் உண்டு. இதைத்தான் மணிவாசகப் பெருமான் தனது திருவாசகத்தில்,

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்மிருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்.

என்றும்,

வேறுவேறு உருவும், வேறுவேறு இயற்கையும்
நூறுநூ றாயிரம் இயல்பின தாகி.

என்றும் கூறியுள்ளார்.

புராணங்களில் ஒன்பது வகையான சிருஷ்டிகள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளை யெல்லாம் (1)பிராகிருத சிருஷ்டி, (2) வைகிருத சிருஷ்டி, (3) கௌமார சிருஷ்டி, (4) அநுக்கிரக சிருஷ்டி என்ற நான்கினுள் அடக்கலாம். பிராகிருத சிருஷ்டியில் மகத் (புத்தி)-1, அகங்காரம்-1, தன்மாத்திரை 5, பூதங்கள்-5, ஞானேந்திரியம்-5, கர்மேந்திரியம்-5, மனம்-1, பிரகிருதி-1 என்ற 24 தத்துவங்களும் அடங்கும். இந்த பிராகிருத சிருஷ்டி பிரகிருதி மாயையினின்றும் அவரோகணமாய் தூலத்தில் இறங்கினவை(Descent into Physical). இதைப்பிரவிருத்தி மார்க்கம் என்பர். வைகிருத சிருஷ்டியில் தாவரங்கள் (Vegetable Kingdom), பிராணிகள் (Animal Kingdom), மனிதர் (Human Kingdom) அடங்கும். வைகிருத சிருஷ்டி ஆரோகணமாய் நிவர்த்தி மார்க்கத்தில் மேல்நோக்கிச்



செல்வது (Ascent from dense Physical). (அவரோகணம் = Involution; ஆரோகணம் = Evolution).

மற்றும் தாவர வர்க்கத்தை ஊர்த்தவ ஸ்ரோதஸ் என்றும், பிராணி வர்க்கத்தை திரியக் ஸ்ரோதஸ் என்றும், மானிட வர்க்கத்தை அர்வாக் ஸ்ரோதஸ் என்றும் மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஸ்ரோதஸ் என்றால் கால்வாய் (ஆகாரக் குழாய்). ஊர்த்தவ ஸ்ரோதஸில் ஆகாரம் கீழிருந்து மேல் நோக்கிச் செல்லும்; திரியக் ஸ்ரோதஸில் ஆகாரம் குறுக்காகச் செல்லும்; அர்வாக் ஸ்ரோதஸில் ஆகாரம் மேலிருந்து கீழ் நோக்கிச் செல்லும். தேவர்களும், மகரிஷிகளும் ஊர்த்தவ ஸ்ரோதஸைச் சேர்ந்தவர்கள். அவர்களுக்கு மூலாதாரத்திலிருந்து அமுர்தம் மேல்நோக்கிச் செல்லும்.

கௌமார சிருஷ்டி என்பது சனகாதி முதலிய நான்கு குமாரர்களின் படைப்பும், அனுக்கிரக சிருஷ்டி என்பது மந்தரேஸ்வரர், வித்தியேஸ்வரர், அனந்தீஸ்வரர் முதலான பல கடவுளர்களின் படைப்புமாகும். இவை ஒரு பரம ரகசியமான தேவரகசியமாகும் (Divine Mystery).

உயிர்கள் இறைவனின் அம்ஸம் என்றும், அவனைப் போலவே சத்து, சித்து, ஆனந்தத் தன்மையை உடையனவென்றும், ஆனால் இறைவன் அகண்டப் பொருள், உயர்கண்டப் பொருள் என்றும் பார்த்தோம். தங்கத்தில் களிம்பு சேர்ந்து செம்பாக மாறினது போன்று வியாபகமான ஆன்மா அனாதியே ஆணவ மலத்தால் பீடிக்கப்பட்டுத் தனதுபூரண அறிவு, இச்சை செயல்களில் தடைப்பட்டு நின்றது. அழுக்கைக் கொண்டு அழுக்கை நீக்குவதுபோல் அந்த ஆணவ மல மறைப்பை நீக்கி இச்சை, அறிவு, செயல்களை (சத்து, சித்து, ஆனந்தம்) பரிபூரணமாக்குவதற்காகவே மாயா மலத்தால் ஆகிய தனு, கரண, புவன போகங்களை உண்டாக்கி உயிர்களை

அவற்றில் நுழைவித்து, 84 லட்ச யோனி பேதங்களை யுடைய மேற்சொன்ன ஏழேழு நாற்பத்தொன்பது பிறவி களிலும் உத்பீஜம் (Dirt-அழுக்கு). ஸ்வேதஜம் (Sweat-வியர்வை), அண்டஜம் (Egg-முட்டை), சராயுஜம் (Womb-கர்ப்பம்) என்று சொல்லப்பட்ட நான்கு விதமான பிறப்புகள் மூலம் அச்சுமாறிப் பிறப்பிக்கச் செய்து படிப் படியாக சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், பகுத்தறிவு, உள்ளுணர்வு என்ற ஏழு அறிவுகளும் பரிபூரணமாக வளர்ந்து மலர்ந்து இறைவனை அடையச் செய்வதே திதியின் நோக்கமாகும்.

உயிர்களுக்கு ஒன்று முதல் ஏழு அறிவுகள் வளரும் (Evolution of Life & Expansion of Consciousness) விதங்க ளாவன :—கல், புல், பூண்டுகளாகப் பிறந்து பரிச (ஊறு) அறிவும்; சிப்பி, நத்தை முதலியவைகளாகப் பிறந்து பரிசத்துடன் சுவையும் சேர்ந்து இரண்டு அறிவுகளும்; சிதல், எறும்பு முதலியவைகளாகப் பிறந்து பரிசம், சுவையுடன் நாற்றமும் சேர்ந்து மூன்று அறிவுகளும்; தும்பி, வண்டு முதலியவைகளாகப் பிறந்து பரிசம், சுவை, நாற்றத்துடன் ஒளியும் சேர்ந்து நான்கு அறிவு களும்; பறவை, விலங்குகளாகப் பிறந்து ஊறு, சுவை, நாற்றம், ஒளியுடன் ஓசையும் சேர்ந்து ஐந்து அறிவுகளும், மக்களாகப் பிறந்து மேற்படி ஐந்தறிவுடன் பகுத்தறி வாகிய மனமும் சேர்ந்து ஆறு அறிவுகளும். ஜீவன் முக்தர்களிடம் மேற்சொன்ன ஆறு அறிவுடன் புத்தி யாகிய உள்ளுணர்வும் (Intuition) சேர்ந்து ஏழு அறிவு களும் வளர்ந்து, அறிவும் உணர்வும் (Consciousness) பரிபூரண சச்சிதானந்த தசையை அடைகின்றது.

மெய்,நா,மூக்கு, நாட்டம், செவிகளின் ஒன்று
முதலா கீழ்கொண்டு மேல்உணர் தலின் ஓர் அறி
வாதியாய் உயிர் ஐந்தாகும்.



புல்,மரம் முதல் உற்றறியும் ஓர் அறிவுயிரே
முரண்,நந்து ஆதி நா அறிவோடு ஈரறிவுயிரே
சிதல், எறும்பாதி மூக்கறிவின் மூவறிவுயிரே
தும்பி வண்டாதி கண் அறிவின் நாலறிவுயிரே
வானவர் மக்கள், நரகர், விலங்கு
புள்ளாதி செவியறிவோடு ஐயறிவுயிரே. —நன்னூல்

## 3. சங்காரம் - அழித்தல்

இதுவரை ஸ்ரீ கண்ட பரமேஸ்வரனின் படைத்தல், காத்தல் தொழில்களைப் பற்றிப் பார்த்தோம். இனி அவனின் அழித்தல் தொழிலைப்பற்றி பார்ப்போம்.

சிவனது ஆனந்த அம்சத்தின் தமோகுண ரகித இச்சாசக்தியினால் உருத்திரன் என்ற பதவி நாமத்துடன் சங்காரத் தொழில் நடைபெறுகிறது. சங்காரத்தினால் கர்ம மலம் பரிபாகமடைகின்றது. உண்ட உணவு உறக்கத்தில் ஜீரணிப்பது போன்று உயிரின் ஒடுக்கத் தில் கர்மமலம் பக்குவமடைகின்றது. உருத்திரனுக்கு படைத்தல், காத்தல், அழித்தலாகிய மூன்று அதிகாரங் களும் உண்டு. உபயோகமற்ற உருவங்களை அழித்து உயிரை புனருத்தாரணம் செய்வதே சங்காரத்தின் காரியமாகும். உருவங்கள் (உடல்)தான் அழிக்கப் படுகின்றதே தவிர, உயிர் அழிக்கப்படுவதில்லை; அது அழிவற்றது. அழிக்கப்பட்ட உருவங்களும் பூதங்களாகப் பிரிந்து மறுபடியும் புதிய உருவங்களுக்கு இடம் கொடுக்கும்.

இந்த சங்காரம் நித்திய சங்காரம் என்றும், நைமித்திக சங்காரம் என்றும், பிராகிருத சங்காரம் என்றும், ஆத்தியந்தக சங்காரம் என்றும் நான்கு வகைப்படும். (1) நாள்தோறும் உயிர்களின் உறக்கத்

தில் கிரியைகள் ஒடுங்குவதும், ஆயுள்முடிவில் சாக்காடும் நித்திய சங்காரம் எனப்படும். (2) பிரம்மாவின் பகல் முடிவில் சங்கர்ஷனர், ருத்திரர் முதலியவர்களால் செய்யப்படும் சங்காரத்திற்கு நைமித்திக சங்காரம் எனப்படும். அதுபோது சூரியன் நூறுண்டு எரிந்து பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகர்லோகம் ஆகிய நான்கு உலகங்களையும் அழித்தல்; அல்லது, நூறு முகிற்குலங்கள் குழுமி யானை கரம் போன்று மழையைப் பெய்து மேற்படி நான்கு லோகங்களையும் அழித்தல்; இவை மாறி மாறி நடைபெறும். இதுபோது சிவன்யோக நித்திரை கொள்வன். (3) பதார்த்தம், பார்த்தம் இரண்டும் சென்ற பின் பிரம்மா உருத்திரன் பாதத் தொடுங்கும். அதுபோது உருத்திரன் கோடி சூரியப் பிரகாசம்போல் நுதற்கண்ணுல் பிரம்மாண்டத்தை எரிப்பன். இதில் பிருதிவி அப்புவிலும், அப்பு தேயுவிலும், தேயு வாயுவிலும், வாயு ஆகாசத்திலும், ஆகாசம் அகங்காரத்திலும், அகங்காரம் புருடனிலும், புருடன் முக்குண மாயையாகிய பிரகிருதியில் ஒடுங்குவதே மகா சங்காரம் அல்லது பிராகிருத சங்காரம் எனப்படும். (4) ஒரு சீவன் சிவனுடன் ஒன்றுபட்டு கலக்கும்போது அக்காலம் ஆத்தியந்தக சங்காரம் எனப் பெயர் பெறுகின்றது. இதுவே மோக்ஷமாம் (முக்தியாம்). சங்காரம் பிரளயம்; சிருஷ்டி கல்பம் எனப்படும்.

> உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
> விழிப்பது போலும் பிறப்பு. —குறள்

> மலமாயை கன்மம் மாயே யம்திரோ தாயி மன்னிச்
> சலமாரும் பிறப்பு இறப்பில் தங்கியித் தரைகீழ் மேலும்
> நிலையாத கொள்ளி வட்டங் கறங்கென நிமிடத் தின்கண்
> அலமாரும் இறைவன் ஆணை யால்உயிர் நடக்கு மன்றே.
> —சித்தியார்



## புனர் ஜன்மம் - Re-Incarnation

எண்ணறிய பிறவிதனில் மானிடப் பிறவி (Human Kingdon) தான் அரிதரிது; மிக மேலானது. இப்பிறவியில் தான் இறைசக்தி அதாவது இறைவன் திருவடி (தாள்) ஆன்மாவின் தலையில் பதிந்து (தாள் + தலை) தாடலையாக உருக்கொண்டுஅத்துவித கலப்புண்டாயது. இந்த நிலையைத்தான் மணிவாசகப் பெருமான் "இணையார் திருவடி என் தலைமேல் வைத்தலுமே" எனக் கூறியுள்ளார். (The First Logos sends a Fragment of Himself-a Monad-to make an individual man in a Causal Body; and the Soul of Man made in the image of god). மானிடப்பிறவியில்தான் உயிர்களுக்குக் கர்ம மலம் வந்து சேருகிறது. இதில்தான் நல்வினை தீவினைகளுக்கீடாக கர்மப் பிரதி கர்ம ஆணையின்படி (Law of Action & Re-Action) பாவ புண்ணிய பலன்களாகிய இன்ப துன்பங்களை உயிர் அடைகிறது. தீய வினைகளை விலக்குவதால் பாவ பலனுல் உண்டாகும் துன்பம் நீங்குகிறது; நல்வினையால் புண்ணிய பலனுகிய இன்பம் கிடைக்கிறது. இரண்டு வினைகளும் பிறவிகளுக்குக் காரணங்களாகும். நல்வினைகளை தன்னலங் கருதாது பரோபகாரமாக ஈஸ்வரார்ப்பணத்துடன் செய்யின் கர்மம் நம்மை பந்திக்காது; உயிருக்குப் பிறப்பு இறப்பு இல்லை; வீடு கிட்டும்.

இந்த ஞானுனுபவத்தைப் பெறவே இறைவன் உயிர்களை இந்த சம்சார சாகரம் என்ற பள்ளியில் விடுத்திருக்கின்ருன். எப்படி இவ்வுலகில் நாம் அறிவு பெறுவதற்கு ஆரம்பதரக் கல்வி, மத்தியதரக் கல்வி, உயர்தரக் கல்வி, கலாசாலைக் கல்வி, சர்வ கலா சாலைக் கல்வி, பட்டதாரிக் கல்வி எனப் பல பிரிவு கல்வி நிலையங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றனவோ அதே மாதிரி தான் உயிர்கள் பரிபூரண

ஞானத்தைப் பெற மேலே சொல்லிய ஏழேழு நாற்பத் தொன்பது பிறவிகளும் உயிர்களுக்கான கல்வி நிலையங் களாக இறைவனால் அமைக்கப்பட்டிருக்கின்றன.

1. ஆரம்பக் கல்வி நிலையம் = பூதாசார வர்க்கங்கள் Elemental Kingdom

2. மத்தியதரக் கல்வி நிலையம் = தாது வர்க்கம் Mineral Kingdom

3. உயர்தரக் கல்வி நிலையம் = தாவர வர்க்கம் Vegetable Kingdom

4. கலாசாலைக் கல்வி நிலையம் = விலங்கு வர்க்கம் Animal Kingdom

5. சர்வகலாசாலைக் கல்வி நிலையம் = மானிட வர்க்கம் Human Kingdom

6. பட்டதாரிக் கல்வி நிலையம் = ஜீவன் முக்தர் வர்க்கம் Super-Human Kingdom (7 வித உத்தி யோக பட்டங்கள்) இது விரிக்கிற் பெருகும்.

மானிட வர்க்கத்தில் உயிர்கள் தூலம் (காயம்), சூக்கு மம் (வாக்கு, காரணம் (மனம்) என்ற மூன்று சரீரங் களுடன் முறையே (சாக்கிரத்தில்) பூலோகம், (சொர்ப் பனத்தில்) புவர்லோகம், (சுழுத்தியில்) சுவர்லோகம் என்ற மூன்று உலகங்களிலும் சஞ்சரிக்கின்றன. அதனால் அதற்கு திரிலோக சஞ்சாரி எனப் பெயர் வந்தது. மாறி மாறி வருகின்ற பிறப்பு, இறப்பாகிய புனர் ஜன்மங்கள் (Re-Incarnations) மூலமாக மூவுலகங்களிலும் சஞ்சாரம் செய்கின்றன. தூல உடம்பு அழிந்தால் உயிர்கள்



சூக்கும உடலுடன் புவர்லோகம் செல்லுகின்றன. சூக்கும உடல் அழிந்தால் காரண சரீரத்துடன் சுவர்க்கலோகம் செல்லுகின்றன. புவர் லோகத்தில் கீழ்ப் பகுதி, மேல் பகுதி என இருப் பிரிவுகள் உள. கீழ்ப்பிரிவுக்குப் பிரேத லோகம் அல்லது காமலோகம் என்றும், மேல் பகுதிக்குப் பிதிர்லோகம் என்றும் பெயர். பாவம் செய்தவர்கள் மரணத்திற்குப் பின் யாதனா சரீரத்துடன் பிரேத லோகத்தில் நெடுங்காலமிருந்து நரக துன்பங்களை அனு பவித்து, பின் பூதனாசரீரத்துடன் பிதிர்லோகத்தில் சிறிது காலம் தங்கி, பின் சுவர்க்கத்தை எட்டிப்பார்த்து உடனே பூமியில் மறுஜன்மம் எடுப்பார்கள். பாவமும் புண்ணியமும் கலந்து செய்தவர்கள் காமலோகத்தில் கொஞ்ச காலம் தங்கி, பின் பிதிர்லோகத்தில் நெடுங் காலம் தங்கி, பின் சொற்பகாலம் சொர்க்கத்தில் இன் பத்தை அனுபவித்துவிட்டு, மறுபடியில் பூமியில் ஜனனம் எடுப்பார்கள். புண்ணியம் அதிகமாகச் செய்தவர்கள் சொற்பகாலம் பிதிர் லோகத்தில் தங்கி, பின் சொர்க்கத் தில் நெடுங் காலம் இன்பத்தை அனுபவித்த பின் பூமியில் வந்து மறு ஜன்மம் எடுப்பார்கள்.

காரணசரீரம் அழிவதில்லை. பூவுலகில் செய்த நல் வினை தீவினைகளின் பலன்களெல்லாம் வாசனா திரவிய மாகக் காரண சரீரத்தில் தங்கி மறு ஜன்மம் எடுப்பதற் குக் காரணமாகயிருப்பதால் அதற்குக் காரண சரீரம் (Causal Bdoy) எனப் பெயர் வந்தது. காரண சரீரத்தில் தான் ஆன்மா (Ego) நிலைகொண்டிருக்கிறது. பூவுலகில் நாம் செய்த வினைகளின் ஞாபகம் காரண சரீரத்திற்கு எடுத்துச் செல்லப்படுகிறது. அங்கு அன்னம் சீரணித்து இரத்தமாக மாறுவதுபோன்று, எண்ணங்களெல்லாம் சக்திகளாக மாறுகின்றன. நமது பூவுலக அனுபவங்க ளெல்லாம் குணங்களாக - ஆற்றலாக - (Faculty) மாறு

கின்றன. அடுத்த ஜன்மத்தில் நாம் அக்குணங்களுடன் பிறக்கின்றோம். "தினை விதைத்தவன் தினை அறுப்பான்; வினை விதைத்தவன் வினை அறுப்பான்" (As you sow, so you reap) என்றபடி, இப்பிறப்பில் இவ்வுலகில் நாம் என்ன செய்கின்றோமோ, என்ன நினைக்கின்றோமோ அவ்வாறான பண்புகளுடன்தான் நாம் மறுபிறப்பில் பிறக்கின்றோம்.

மேற்சொன்னவைகளால், ஒரு உடலில் இறப்பு என்றால் மறு உடலில் பிறப்பு என்றாகிறது. உலகில் உயிர் நீத்த உயிர்கள் புவர்லோகத்திலும், சுவர்க்க லோகத்திலும் இருந்துவிட்டு புரியட்ட காயத்துடன் மேகமண்டலத்தில் மிதந்து கொண்டிருக்க, மழையின் மூலம் பூமிக்கு வர, அவற்றைப் பயிர்கள் உண்டு தானியங்களாகக் கொடுக்கின்றன; அவற்றை மனிதன் உண்ண, இந்திரிய (சுக்கில)மாக மாறிப் பெண்ணின் கர்ப்பத்தில் சென்று கருத்தரித்து குழந்தையாகப் பிறக்கிறது. இதுதான் பஞ்சாக்கினி வித்தை யெனப்படும். இந்த (சுவர்க்கம், மேகமண்டலம், நிலம், தந்தை, தாயாகிய) பஞ்சாக்கினி வித்தை மூலமே புனர்ஜன்மம் (Re-Incarnation) நடைபெறுகிறது.

மரணத்திற்குப் பின்பு உயிர்கள் செல்லக்கூடிய மார்க்கம் இரண்டு. ஒன்று பிதிர்யானம் என்றும், மற்றொன்று தேவயானம் என்றும் சொல்லப்படும். பந்தபாசத்தில் கட்டுப்பட்ட உயிர்கள் பிதிர்யான மார்க்கமாகச் சென்று மறுபடியும் பூமியில் ஜன்மம் எடுப்பார்கள். ஞானசாதனைகளால் பந்தபாசத்திலிருந்து விடுபட்டவர்கள் குருவருளால் ஞான தீட்சை பெற்றுத் தேவயான மார்க்கமாகச் சென்று இறைவன் திருவடியை (வீடுபேற்றை) அடைவர். அவர்களுக்கு மறு ஜன்மம் கிடையாது.



## 4. திரோதானம் அல்லது மறைத்தல்

இறைவனின் பஞ்சகிருத்தியங் (ஐந்தொழில்)களில் மறைத்தல் என்ற ஒன்றும் அடங்கும். இதை திரோதானம், ஆவரனம் என்றும் சொல்வர். இது ஞானிகளைத் தவிர மற்ற உயிர்களை நித்தியா நித்தியவஸ்து, நன்மை தீமை இவைகளின் வித்தியாசம் தெரியவொட்டாமலும்; முன், பின் ஜன்மங்களின் விடயங்களைத் தெரியவொட்டாமலும் மறைத்து நிற்கும். உயிர்களுக்குப் பக்குவம் வரும்பொருட்டு அனுபவிக்கவேண்டிய வினைப்பயன்களைக் கூட்டுவித்து அனுபவிக்கச் செய்யும்போது அனுபவிக்க வேண்டிய விடயங்களிலுள்ள குண தோஷங்களை அவ்வுயிர்களுக்குத் தெரிய வொட்டாமல் மறைத்து நிற்கும் இறை சத்திற்குத் திரோதான சத்தி யெனப்பெயர். குணதோஷங்களை மறைக்கவில்லையாயின் அனுபவம் கைகூடாது. அனுபவங் கூடாதாயின் மலங்கள் பரிபக்குவமடையா, ஞானம் கைவல்லியமாகாது, இத் திரோதான சத்தி உயிர்களுக்குப் பக்குவம் வருவித்தற் பொருட்டு ஆணவமலத்தின் (அவித்தை அல்லது அஞ்ஞானம்) வழிநின்று மோகம், மதம், மாற்சரியம் முதலியவைகளைச் செய்விக்கும்; அதனால் அனுபவம் உண்டாகும்.

ஆதலால் இந்த மறைப்பு உயிர்களுக்கு இன்றியமையாதது. உதாரணமாக நமது அண்டைவீட்டான் முன் ஜன்மத்தில் நமக்குப் பெரிய தீங்கிழைத்தவனை இருக்கலாம். அதை இப்போது அறியும் சக்தி நமக்கிருந்தால் நாம் அவனைப் பழிக்குப் பழி வாங்க முயற்சிப்போம். மற்றும் நமது பழைய கொடிய தீவினையின் காரணமாக அடுத்த ஜன்மத்தில் நாம் சொல்லொண்ணா துன்பங்களை அனுபவிக்கப் போகிறோம் என்பதை இப்போதே தெரிய வந்தால் நமது மனம் சதா எவ்வளவு வேதனைக் குள்ளா

கும் என்பதை உன்னிப் பாருங்கள். விரிக்கிற் பெருகு மாதலால் ஊகித்தறியவும். எனவே இந்த மறைப்புத் தொழிலை இறைவனின் மறக் கருணை யெனலாம்.

## 5. அருளல்

பஞ்சகிருத்தியங்களில் அருளல் கடைசியாக வைத்திருந்த போதிலும் அத்தொழிலே இறைவனின் முதல், இடை, கடையாக ஆதிமுதல் அந்தம் வரையான இடையுறாத் தொழிலாகயிருக்கிறது. "தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத்தரும் சத்தி பின்னமிலான் எங்கள் இறை" என்றதற்கேற்ப பந்தத்தில் கட்டுப்பட்டிருக்கும் உயிர்கள் தளை நீங்கித் தன்னை வந்தடையும் வரை இறைவன் தனது அருட்சத்தியுடன் பிரிப்பின்றி கூடி நின்று அயரா அன்பினால் உயிர்களைக் கண்காணித்து வருகின்றான். இறைவனின் ஆதிசத்தி, திரோதானசத்தி, பராசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி, அருட்சத்தி எனப் பலவாகப் பிரிந்து இறைவன் எத்தொழில் புரிகின்றானோ அத்தொழிலுக்கு உடன் நின்று உதவி புரிந்து மன்னுயிர்களைக் காத்து வருகின்றது. ஆதி சக்தியின் ஒரு முனை திரோதான சத்தியென்றால் மறுமுனை அருட்சத்தியாகும். திரோதான சத்தி அன்பே வடிவான இறைவனின் மறக்கருணை போன்று, அருட்சத்தி அவனின் அறக்கருணையாகும். அவன் உயிர்க்குயிராய் உள்நின்றும், குருமூர்த்தமாய் வெளிப்பட்டும் உயிர்களை இரட்சித் தருள்கின்றான்.

சத்தியாய் விந்து சத்தி யாய்மனோன் மனிதா னாகி
யொத்துறு மகேசை யாகி உமைதிரு வாணி யாகி
வைத்துறும் சிவாதிக்கு இங்ஙன் வரும்சத்தி யொருத்தி யாகும்
எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்.

—சித்தியார்



பொன்னம்பலம் என்ற கனகசபையில் ஞான (மௌன)குருவாய்க் கல்லாலின்கீழ் எழுந்தருளியிருக்கும் தக்ஷிணாமூர்த்தியை (Silent Watcher)த் தலைவராகக் கொண்டு வாழையடி வாழையென வரும் திருக்கூட்டத்தினரால் (By the Members of Spiritual Hierarchy) கேவலாவத்தையிலிருந்து பிரவர்த்தி மார்க்கமாய் (Involution) சகலாவத்தைக்கு வந்த மன்பதைக்கு, நிவர்த்தி மார்க்கமாய் (Evolution) சுத்தாவத்தையை அடைய வழிகாட்டப்படுகின்றது. அத்திருக்கூட்டத்தினர் உலகில் ஆங்காங்கே தோன்றிக் காலதேச வர்த்தமானத்திற் கிணங்க பல்வேறு சமயங்களை வகுத்து, துணையாக சாத்திரங்களைத் தொகுத்து மேல் நிலைக்கு வழிகாட்டியருள்கின்றனர். தவத்தின் பயனாக இருவினை யொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் அடைந்த உயிர்களுக்குக் குருவடிவில் வந்து ஞான தீட்சைகள் செய்வித்து, ஞானோபதேசம் செய்து ஈடேற்றுவிக்கின்றனர்.

அண்டசம் சுவேத சங்கள் உற்பிச்சம் சராயு சத்தோடு
எண்டரு நாலெண் பத்து நான்குநூ றாயி ரத்தால்
உண்டு பல்யோனி யெல்லாம் ஒழித்துமா னுடத்து உதித்தல்
கண்டிடில் கடலைக் கையால் நீந்தினன் காரி யங்காண்.

பூதனா சரீரம் போனால் புரியட்ட ரூபந் தானே
யாதனா சரீர மாகி இன்ப துன்பங்க ளெல்லாம்
நாதனார் ஆணை யுய்க்க நரகொடு சுவர்க்கந் துய்த்துத்
தீதிலா அணுவாய் யோனி சேர்ந்திடும் சீவ னெல்லாம்.

—சித்தியார்

# THE HINDU SYMBOLISM and IDEOGRAPH



தோற்றம் துடிப்தனில் தோயும் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—முற்றுமா
ஊன்றுமலர் பதத்தில் உற்ற திரோதம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு. —மனவாசகங்கடந்தார்

The Philosophical significance and occult meaning of the Symbol of Natarajah of Chitambaram

Nata - Dance ; Rajah - King ; Chit-Wisdom ; Ambaram-Space or Akasa.



I. Natanam (Dance) is not a haphazard jumping at random but :—

1. A Rhythmical. Hormonious and graceful movement of body and limbs.

2. Rhythmical and Hormonious vibration (motion) of the Atoms (OH ! Hidden Life Vibrant in every atom.)

3. Rhythm, Hormony, Symmetry and Beauty in all the Kingdoms of Nature in the universe.

II. Ishvara (Solar Logas) in His triple aspects of a Trinity as :—

1. Brahma, the creator (The Holy ghost) with His Kria-Shakti (Consort) Saraswathi (Goddess of Learning) representing the intellectual mind.

2. Vishnu the protector (The Son) with His Gnana-Shakti (Consort) Lakshmi (Goddess of Wealth) representing Buddhi, Wisdom and Love.

3. Rudhra, the destroyer (Father) with His Ichcha-Shakti (Consort) Kali (Goddess of destruction) representing al.o Regeneration.

Performing Pancha Krityas : five kinds of function - Srishti (Creation), Sthithi (Protection) Sangara (Destruction), Anugraha (Benediction) and Tirodhana, (Obscuration) symbolized in the image NATARAJAH with four hands and two legs-one raised and another resting on a giant Muyalagan.

III. Symbols:—1. HAND HOLDING THE DRUM - Sound denotes creation. Saraswathi the goddess Learning, the consort of Brahma the creator who is a Kria Shakti is also depicted as holding a Veena, the queen of the Musical Instruments in her hand representing also the sound. Sound shapes matter into forms. When light seeds are spread on a glass or smooth surface and a musical instrument is played nearby, it was found that seeds take different forms-Geometrical shapes-according to the different tones of the music. God Geometrises-Plato.

2. RAISED HAND denotes blessing and protection. Whenever youngsters make obeisance to the elders, it is customary for elders to raise their right hand and bless the youngsters with long life, health and wealth. Lakshmi the goddess of wealth, the Gnana Shakti and consort of Vishnu the protector bestows wealth, wisdom and Love on her devotees. As Porut-Selvam, the material wealth is indispensable for mundane happiness, so also the Arut-Selvam, the grace of the Lord is indispensable for the spiritual eternal happiness and liberation of the souls.

3. THE HAND HOLDING THE FIRE denotes destruction. Kali the goddess of destruction, the Ichcha Shakti and consort of Rudhra the destroyer, denotes destruction. Rudhra means angry and destroys every thing. Rudhra with His consort Kali is depicted as dancing in the cremeation ground.

Fire has not only the power of burning but has also the power of purifying. When cow dung is put into



the fire, all the dross are burnt out and it become pure white holy ash having magnetic power. So also, destruction means regeneration. Old Forms are destroyed to give place to a new better form to suit the evolving life.

4. HAND POINTING TO THE RAISED FOOT represents benediction. It invites the soul to come to the Feei of the Lord for salvation - Mukti, liberation from bondage to attain perfect eternal happiness.

5. FOOT PRESSING THE GIANT Muyalagan represents obscuration. Ishvara has wisely and graciously put a screen between us and our past and future incarnations to hide the past and future happenings from us; otherwise evolution of life is not possible. This is said to be His Marakkarunai - blessing in disguise while the protection and benediction are His Arakkarunai - direct blessing:

IV. OTHER IDEOGRAPHS :—

1. The giant Muyalagam under His foot represent Ahankara (Egoism) Anavamalam - suppressed.

2. The tiger skin He is wearing represents Karma-malam (fruit of the action) suppressed.

3. Elephant skin represents Mayamalam (Illusion) dispelled. Before the Feet of Ishvara is attained, these three Malams (bondages) should be suppressed and overcome.

4. Serpents represent Time and Motion (various forces)

5. The circle (Thru:atchi) represents our Anda-(Heranya garba Golden Egg), Solar System, (the ring-pass-not) within which the activities of Ishvara is going on.

6. The three strands in the head represent Trinity.

7. Legs - one foot up and one foot down represents out-breathing and inbreathing i.e. appearance and disappearance of the universe - Day and Night of Brahma. Both feet down means rest - pralaya.

V. Conclusion : There is a cavity (space filled with Akasa) in the centre of the Lotus like heart of every being where-in the LORD is ever dancing. MEDITATE ON IT OM.

Idols and symbols in Hinduism have an occult meaning, philosophical significance and ideals behind them, Those ideals should be understood, contemplated and meditated upon - and not outer forms.

---

INVOCATION

OM. May the MAHA RISHIS, Great Teachers, Guides, and Guardians of humanity give us Their protection, illumine our studies and help us to spread Their message— the message of Divine-Wisdom and unity of life. Let us dedicate ourselves to Their service and let Their will be done in all our thoughts, words and deeds. OM.



சிவஞானபோதம் அருளிய சிவஞான [illegible] கண்ட
மெய்கண்டார்

உ

சிவமயம்

மெய்கண்டார்க்கு அனுக்கிரகம் அருளிய
திருவருட்டுறை



பொல்லாப் பிள்ளையார்

கல்லால் நிழல்மலை, வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர், நல்லார் புனைவரே.

மெய்கண்டார் அருளிய

# சிவஞானபோதம்

## மறைபொருள் விளக்கம்

வடமொழி சுலோகமும் தென்மொழி சூத்திரமும்

## The Esotoric Meaning of Sivagnana Bhodam

SANSKRIT SLOKAS and TAMIL SUDRAMS

சி. 5

## மெய்கண்ட தேவர் துதி

பண்டைமறை வண்டாற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇரு தயகமல முகைகளெல்லாம்
கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய்மேவும்
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம். 1

—சிவஞானசித்தியார்

சிறிய ஆடியில் பெரியமால் வரைப்பொருள் செறிந்தாங்கு
அறிவு நூல்களின் முடிபெலாம் அகத் தடக்கியதோர்
நெறியின் நீடிய நிகழ்சிவ ஞானபோ தத்தைக்
குறிய தீந்தமி ழால்உரை குரவனைப் பணிவாம். 2

—கச்சியப்ப முனிவர்

வேதம்பசு; அதன்பால் மெய்யாகமம்; நால்வர்
ஓதும் தமிழ்அதனின் உள்ளுறுநெய்—போதமிகு
நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் திறம். 3

—சிவஞானசித்தியார்

## தோற்றுவாய்

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு —குறள்

ஓர் அறிவு முதல் ஆறு அறிவுவரை, எறும்புகடை யானையீருக எல்லா ஜீவராசிகளும் இன்பத்தையே நாடுகின்றன. ஏனெனின் ஆனந்தம் உயிர்களின் இயல்பு (Natural Instinct). அவ்வாறே அகண்ட அறிவையும், நீண்ட ஆயுளையும் விரும்பி நிற்கின்றன. காரணம் சித்தும் சத்தும் ஆனந்தத்தைப்போல் உயிர்களின் இயற்கைத் தனமைகளாம். ஆனல் நாம் அனுபவிக்கும் சத்து சித்து ஆனந்தம் குறுகியவையும், அநித்தியமுமானவை. நிரந்தரமான பூரண அறிவையும் ஆனந்தத்தையும் அடைய வேண்டுமானல் தனக்குவமையில்லாதான் தாள்சேர்ந்தார்க்கல்லால் மற்றவர்களுக்குக் கிட்டாது.

தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது. —குறள்

இறைவன் அகண்டபரிபூரண நித்தியவஸ்துவான சச்சிதானந்த சொரூபி. அன்பே வடிவான இறைவன் "தன் நிலைமை மன்னுயிர்கள் சாரத்தரும் சத்தி பின்னமிலான் எங்கள் பிரான்" என்றபடி உயிர்கள் அவன் தன்மையைஅடையவேண்டுமெனக் கருதி நமக்குத் தனு, கரண, புவன, போகங்களைக் கொடுத்து வாழ்க்கை என்ற பள்ளியில் நம்மைப் படிக்க விட்டிருக்கின்ருன். இவ்வாறு உலகம், உயிர், இறைவன் இவைகளின் இலக்கணம், இவைகளுக்கிடையான சம்பந்தாசம்பந்தங்கள், உயிர்கள் இறைவனை அடையுமார்க்கம் முதலிய

வற்றை விளக்க வந்ததே சமயம், மதம், மார்க்கம் என்பனவாம்.

எல்லா மதங்களும்புராணம் (Mythology), சடங்குகள் (Rituals), தத்துவம் (Philosophy) என்ற முப்பகுதிகளை யுடையன. புராணங்களும், சடங்குகளும்காலதேசவர்த்த மானங்கட்கிணங்க தேசத்திற்குத் தேசம், சமயத்திற்குச் சமயம், காலத்திற்குக் காலம் வேறுபட்டிருக்கும். ஆனல் எல்லா சமயங்களின் அடிப்படைத் தத்துவம் ஒன்றே. புராணங்களும், கிரியைகளும் தத்துவத்தையே அடிப் படையாகக் கொண்டுள்ளன. தத்துவஞானமே உயிருக்கு நிரந்தரமான உறுதுணையாம். சமய நூல்கள் தோத் திரம், சாத்திரம் என இருவகைப்படும். சிவஞான போதம் தத்துவஞானத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு சாத்திரப் பொது நூலாகும்.

மதங்கள், சில நவீன ஆராய்ச்சியாளர்கள் கூறுவது போன்று அநாகரீக ஆதிவாசி குடிமக்களின் (Aboriginal Tribes) அறியாமையாலும், மழை, காற்று, இடி, மின்னல், பூகம்பம் முதலிய இன்னல்தரும் இயற்கை உற்பாதங் களுக்குப் பயந்து அவர்களது மூட நம்பிக்கையாலும் உருவானதல்ல. இறைவனலும், இறைவன் அருளைப் பெற்றவர்களாலும் சமய நூல்கள் அருளப்பட்டன.

இறைவன் இப்பிரபஞ்சத்தைக் காத்திராப்பிரகாரம் (Extempore and Accidental) சிருஷ்டித்து விடவில்லை. தன்னிலைமை மன்னுயிர்கள் சாருவதற்கான ஆன்ம வளர்ச்சிக்காக (Evolution of Atman) முன்கூட்டிய ஒரு திட்டவட்டமான சங்கல்பத்துடன் (Divine Ideation-Plan) தன் சிற்சத்தி ஆணையின் (The Eternal Divine Laws of Nature) துணைகொண்டு படைத்துள்ளான். இறைவனின் ஆணைதான் வேதாகம சாத்திரங்கள். இது அவனுடைய பிரணவ நாதத்தினின்றும் தோன்றிய பஞ்சமை,



சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரியாகிய ஐந்து வாக்குகள் மூலம் வெளிவந்தன.

வேத வேதாந்தம், ஆகம ஆகமாந்தம், ஸ்மிருதி, புராணம், இதிகாசம் இவைகள் ஒன்றிற்கொன்றுவியாக்கி யானமாக அமைந்துள்ளன என்பதை மேலே பார்த் தோம். புராணங்கள் பிரபஞ்ச சரித்திரம், இதிகாசங்கள் தேச சரித்திரம், வேதாகமம் ஆன்மாவின் சரித்திரம் விரிக்கிற் பெருகும்.

இறைவனின் பஞ்சகிருத்தியங்கட்குத் துணையாய் அவனுடைய ஆணையை மேற்கொண்டு காரியங்களை நடத்துபவர்கள் தேவர்களும் மகரிஷிகளுமாம். இவர்கள் எல்லோரும் பிரம்மாவின் மானசப்புத்திரர்களாவர். முப் பத்து முக்கோடி தேவர்களின் கூட்டத்திற்கு இந்திரன், மாருதி, அக்னி, வருணன், குபேரன் முதலானோர் தலை வர்களாவர். ரிஷிக்கூட்டத்திற்கு சப்த மகாரிஷிகள் தலைவர்களாம். தேவர்கள் உடல் வளர்ச்சியையும், (Evolution of Form), மகரிஷிகள் உயிர்வளர்ச்சியையும் (Evolution of Life) கண்காணித்து வருகின்றனர்.

வாழையடி வாழையெனவரும் இம்மகரிஷிகளின் திருக்கூட்டத்திற்கு, திருசிற்றம்பலம், பொன்னபலம், கனகசபை எனப் பலபெயர்கள் உள. இப்பொன்னம் பலத்திற்கு (Spiritual Heirarchy) தலைவர் மௌனகுரு வாகிய தக்ஷிணாமூர்த்தியாம். இம்மகரிஷிகள் இமயமலைப் பிராந்தியத்திலும், இன்னம் உலகில் பல்வேறு தேசங் களின் மலைகளில் உள்ள ஆச்சிரமங்களில் நிலை கொண் டிருக்கின்றனர். நம்நாடு சம்பந்தப்பட்ட மட்டில் பொதியமலையில் வதியும் அகத்திய முனிவர்தான் தென் னாட்டிற்கு முக்கியமாகத் தமிழகத்தின் பாதுகாவலர் (Guardian) ஆவர்.

இத்திருக்கூட்டத்தினர்கள்தான் மக்களை ஆன்மீகத் தில் வழிகாட்டி அழைத்துச் செல்லப் பல்வேறு தேசங்க

களில் பல்வேறு காலங்களில் தோன்றி காலதேசவர்த்த மானங்கட்கிணங்க மக்களின் பக்குவத்திற்குத் தக்க பல் வேறு சமயங்களை வகுத்துச் சென்றனர். அதனால்தான் எல்லா சமயங்களின் அடிப்படைதத்துவத்தில் ஓர் ஒற்று மையைக் காண்கின்றோம். காலாந்தரத்தில் மக்கள் சமயத்தின் உண்மைத் தத்துவங்களை மறந்து மூட நம்பிக்கையால் சந்தைவிட்டுச் சக்கையைப் பிடித்துக் கொள்வதுபோல் சமயச் சடங்குகளைப் பற்றிக்கொண்டு சமயச்சண்டைசச்சரவுகளில் ஈடுபட்டுக்கொண்டிருக்கும் போது திருச்சிற்றம்பலத்திலிருந்து மகரிஷிகள் தாங் களே நேரில் தோன்றியும் அல்லது தவத்தால் பரிபக்குவ மடைந்த ஆன்மாக்கள் மூலமும் தத்துவஞானத்தை உப தேசித்து சத்தியத்தை (உண்மை இறைஞானத்தை) நிலைநாட்டிச் சென்றுள்ளனர்.

அவ்வாறு தமிழ் நாட்டில் மக்கள் சமயத்தின் உண்மைத் தத்துவத்தை மறந்து,மதப்பூசல்களில் ஈடுபட் டிருந்த சமயந்தான் பொன்னம்பலத்திலிருந்து மக ரிஷிகள் கி. பி. 13-ம் நூற்றுண்டில் தவத்தால் மிக்க மெய் கண்டார் மூலமும், 17-ம் நூற்றுண்டில் தாயுமான சுவாமி கள் மூலமும், 19-ம் நூற்றுண்டில் திருவருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் மூலமும் தத்துவஞான உண்மைகளை நிலைநாட்டிச் சென்றனர். 20-ம் நூற் றுண்டில் அது ஜகத்குரு கிருஷ்ணஜி மூலம் நடைபெற்று வருகிறது.

மெய்கண்டார் அவதரித்த காலம் இற்றைக்கு சுமார் 700 ஆண்டுகட்கு முன்னதாகும். அக்காலத்தில் தமிழ் நாட்டில் சமயச்சண்டைகள் பலமாக இருந்தன வென்ப தற்கு அருள் நந்தி சிவாச்சாரியார் செய்திருக்கும் "சித்தியார் பரபக்கம்", உமாபதி சிவாச்சாரியார் செய் திருக்கும் "சங்கற்ப நிராகரணம்" என்ற இரண்டு நூல்



திருஅருட்பா அருளி சத்திய ஞான சபையை சமைத்த
திருவருட் பிரகாச வள்ளலார்
சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள்

ளுமே போதிய அகச்சான்ருகும். சயமங்களைப் புறப் புறச்சமயம், புறச்சமயம், அகப்புறச் சமயம், அகச் சமயம், அக அகச்சமயம் எனப் பலவாகப் பிரித்து அவற்றின் ஒவ்வொன்றிலும் உட் பிரிவுகள் பலவற்றைக் கற்பித்தும் அர்த்தமற்ற விதண்டாவாதங்களும், குதர்க் கங்களும் பேசி மதப் போர் நடந்து கொண்டிருந்த சமயம் மெய்கண்டார் தோன்றிய காலமாகும்.

மெய்கண்டார் தமிழ் நாட்டில் பெண்ணுகடம் என்ற கிராமத்தில் வேளாளர் குலத்தைச் சார்ந்த அச்சுதகளப் பாளர் என்ற பிதாமகற்குத் திருவெண்காட்டீஸ்வரர் அனுக்கிரகத்தால் அவதரித்த பூர்வ புண்ணிய தவத்தால் சிறந்த சற்புத்திரராவர். அவரின் பிள்ளைத் திருநாமம் அதாவது பெற்ருேர்களால் இடப்பட்ட பெயர் சுவேத வனப் பெருமாள் என்பதாகும். இவரின் குழந்தைப் பருவத்திலேயே தந்தையார் காலமாய்விட, தாயார் குழந்தையை அழைத்துக் கொண்டு தன் தாயகமாகிய திருவெண்ணெய் நல்லூருக்குச் சென்று அங்கு தன் சகோதரர் காங்கயபூபதி என்பவர் வீட்டில் வசித்து வந்தார். இவர்கள் ஓர் குறுநில மன்னர் இனத்தைச் சேர்ந்தவர்கள்.

திருவெண்ணெய் நல்லூரில் குழந்தை சுவேதவனர்—அப்போது இவருக்கு சுமார் நாலைந்து வயதிருக்கும்—ஒருநாள் வீதியில் விளையாடிக் கொண்டிருக்கும்போது அதுசமயம் இமயமலையிலுள்ள தமது ஆச்சிரமத்தி லிருந்து சத்தியஞானதரிசினிகளின் சீடரான பரஞ் சோதி முனிவர் அவர்கள் சூக்தும சரீரத்துடன் (Astral Body) பொதியமலையில் வீற்றிருக்கும் அகத்திய முனி வரைப் பார்க்கப் போய்க்கொண்டிருந்தவர் தெருவில் விளையாடிக்கொண்டிருந்த அச்சிறுபிள்ளையைப் பார்த்து அதன் பூர்வபுண்ணிய தபோமகிமையையும், பரிபக்கு

வத்தையும் கண்டு தரையில் இறங்கி தூலவுடலெய்தி (Materialised Physically) சுவேதவனருக்குத் தீக்ஷைகள் செய்வித்து, ஞானேபதேசம் செய்து, தன் குருவின் பெயரையே தமிழாக்கத்தில் "மெய்கண்டார்" என்ற தீக்ஷாநாமமும் சூட்டிச் சென்றார். சத்தியஞான தரிசினிகள் சனத்குமாரரின் சீடராவர்.

சமயத்தின்உண்மைகள் மறைந்து, பொய்மை மலிந்து மக்கள் சமயசண்டையில் ஈடுபட்டிருப்பதைத் தடுத்து நிறுத்தி, சமயங்களின் அடிப்படையான தத்துவ (இறை) ஞானத்தை மெய்கண்டார் வாயிலாக மக்களிடை பரப்பு வான் வேண்டி, மெய்கண்டாரைச் சூக்கும உடலுடன் சத்தியஞான தரிசினிகளின் ஆச்சிரமத்திற்கு அழைத்துச் சென்று, அங்கு அவருக்கு இருபத்தெட்டு ஆகமங்களில் ஒன்றாகிய இரெளரவ ஆகமத்துள் பாபவிமோசனம் என்ற படலத்தில் பன்னிரண்டு சுலோகங்களால் கூறப் பட்டிருக்கும் சிவஞான போதத்தைத் தமிழில் போதித் தருளினர்.

ஏன் தமிழில் போதிக்கப்பட்டது என்றால் அக் காலம் வடமொழி (சமஸ்கிரதம்) வழக்கொழிந்திருந்த காலம். தமிழ் மொழி இந்தியாவில் மட்டுமின்றி பிற நாடுகளிலும் பரவியிருந்தது. இந்த சிவஞானம் (Theosophy) எல்லா நாட்டவருக்கும், எல்லா சமயத்தவருக் கும் பயன்படக்கூடியதாக கால தேசவர்த்தமானங்கட் கிணங்க பொதுமறையாகத் தமிழில் உபதேசிக்கப் பெற்றது. வடமொழி ஆகமம் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் இந்துக்களுக்காக அருளப்பட்டது. அப்போது இந்து மதம்மட்டும் இருந்தகாலம்.

மற்றும் வடமொழி நூலில் அக்காலத்திற்கேற்ப இலை மறைகாயென மறைந்திருந்த அநேக மறை பொருள்கள், மெய்கண்டார் காலத்திற்கேற்பத் தமிழ் ஞானபோதத்



ஜெகத்குரு கிருஷ்ணஜி

தில் வெளிப்படையாகவும், விளக்கமாகவும், பொது வாகவும் கூறப்பட்டுள்ளது. இது விஷயம் இருமொழி நூல்களையும் ஒப்பு நோக்கிப் பார்த்தால் தெரியவரும். ஆகவே இருமொழிபோதங்களும் இவ்வெளியீட்டில் இடம் பெற்றுள்ளன.

மெய்கண்டாரும் தமது குரு ஆஞ்ஞையின்படி தான் அவரிடம் கேட்டறிந்த சிவஞான தத்துவத்தை (Theosophy) நாற்பது வரிகளைக் கொண்ட பன்னிரண்டு சூத்திரங் களாக்கி அதை ஓர் கையேடாக வைத்துக்கொண்டு சிஷ்யவர்க்கத்தைக் கூட்டி, சிவஞான கழகம் (Theosophical Society) என்ற ஒரு ஸ்தாபனத்தை நிருவி அதன் மூலம் மக்களுக்குச் சமயங்களின் அடிப்படையான தத்து வத்தை (Philosophy)யும் ஆன்மஞானத்தையும் போதித்து வந்தார். மக்களும் அவருடைய கழகத்திற்கு ஏராள மான திரவியங்களையும், நிலங்களையும் வழங்கி அவரை ஆதரித்து வந்தனர். இவ்வாறு மெய்கண்டார் நெடுங் காலம்சிவஞானபோதத்தின் தத்துவங்களை மக்களிடைப் பரப்பிக் கடைசியாக ஐப்பசி மாதம் சுவாதி நட்சத்திரத் தன்று இறைவனுடன் இரண்டறக் கலந்தனர். மெய் கண்டார் கண்ட சிவஞான கழகமே இன்று பல சைவமடங்களாகப் பிரிந்து, உயிரற்ற உடல்போல் காட்சியளிக்கின்றன.

மெய்கண்டார் வரலாற்றை நினைக்கும்போது எனக்கு இதுபோது உண்மை உலக குருவாகத் திகழும் கிருஷ்ண ஜியின் வாழ்க்கை வரலாறும், அவர் உபதேசங்களும் நினைவிற்கு வருகின்றன. பிரம்மஞான சங்கத்தைத் தோற்றுவிப்பதற்குக் காரணகர்த்தர்களான திருச்சிற் றம்பலத்து மகரிஷிகள் இமயமலையிலுள்ள தங்கள் ஆச்சிர மத்திலிருந்து சூக்கும உடலில் (Astral body) அடையாறு வழியாக அகத்தியர் ஆச்சிரமத்திற்குச் செல்வதுண்டு.

அவ்வாறு செல்லுங்கால் ஒரு சமயம் அடையாற்றில் விளையாடிக்கொண்டிருந்த சிறுபிள்ளை கிருஷ்ணஜியை—அவருக்கு அப்போது வயது சுமார் 10, 12, இருக்கும்—கண்டு அவர் உருவத்தில் சிறுவராயிருந்தாலும், உயிர் (ஆன்ம) வளர்ச்சியில் உயர்ந்து, பரிபக்குவ நிலையை அடைந்திருப்பதைக் கண்டு, ஆங்கே தூல உடலெய்தி (Materialised Physically) அவருக்குத் தீக்ஷைகள் செய்வித்து ஞானோபதேசம் செய்யப்பட்டது.

மெய்கண்டார் தோன்றிய 13-ம் நூற்றுண்டில் உள்நாட்டுச் சமயங்களுக்குள் போராட்டம்; ஆனால் 19-ம் நூற்றுண்டில் பலநாட்டு (இந்து, பௌத்தம், கிருஸ்துவம், மகம்மதியம், சீக்கியம்) சமயங்களுக்குள் போராட்டம் நடந்துகொண்டிருந்த காலம். காரணம் சமயங்களின் அடிப்படை உண்மைகளை மறந்து, வெளி சடங்குகளைப் பற்றிக்கொண்டு உலோகாயதத்தில் அமிழ்ந்திருந்த தீமைகளேயாகும். ஆகவே எல்லா மதங்களின் அடிப்படை தத்துவ (இறை) ஞானத்தைப் பழையபடி மக்களிடைப் பரப்பி உலகில் சகோதரத்வம், சமாதானம், சத்தியம் இவற்றை நிலைநாட்டுவான் வேண்டி திருச்சிற்றம்பலத்து மகரிஷிகள் பிரம்மஞான சங்கத்தை நிருவித்து அதன் மூலம் பிரம்மஞானத்தை உலகில் பரப்பினது மட்டுமல்லாமல், பரிபக்குவமடைந்திருந்த கிருஷ்ணஜியை சூக்கும உடலில் (Astral body) தங்கள் ஆச்சிரமத்திற்கு அழைத்துச் சென்று அவருக்கு கைவல்யோபனிஷத்தின் பொருளை ஆங்கிலத்தில் போதித்து அதை உலகில் பரப்ப ஏற்பாடு செய்தனர்.

ஏன் ஆங்கிலத்தில் போதிக்கப்பட்டது என்றால் வடமொழி வழக்கொழிந்து, தென்மொழி தெம்பிழந்து ஆங்கிலமே உலக மொழியாகப் பிரகாசித்துக்கொண்டிருந்தது. ஆதலால் சாதி, சமயம், தேசம், நிறம் பாகுபாடின்றி அகில உலக மக்களுக்கும் பயன்படக்கூடியதாய் ஆங்கிலத்தில் போதிக்கப்பட்டது. மற்றும் வடமொழி கைவல்யோபனிஷத்து பல்லாயிரம் ஆண்டுகட்கு முன் இந்துக்களுக்காக அருளப்பட்டது. அதில் அக்காலத்திற்கேற்ப அநேக மறைபொருட்கள் இலைமறைகாயென பொதிந்து வைக்கப்பட்டுள்ளன. ஆதலால் அவற்றையெல்லாம் அணுகுண்டு, சந்திரப் பிரயாணம், முதலான விஞ்ஞான (Science) வளர்ச்சியுடன் முற்போக்கான இக்காலத்திற்கேற்ப அநேக மறைபொருள்கள் வெளிப்படையாயும், விளக்கமாயும் விஞ்ஞான ரீதியில் உபதேசிக்கப்பட்டது. அத்துடன் வேதாகமங்களெல்லாம் ஆங்கிலத்தில் ஆக்கப்படுகின்றன. மகரிஷிகளுக்கு எல்லா மொழிகளும் தெரியும்.



இதுவிஷயம் வடமொழி கைவல்யோபனிஷத்தையும், கிருஷ்ணஜியால் அருளப்பட்ட "சர்குருவின் அடிமலர் கமலங்களுக்கு" (At the Feet of the Master) என்ற நூலையும் மற்றும் புத்தகரூபமாக வெளிவந்திருக்கும் அவரது உபதேச மொழிகளையும் சீர்தூக்கிப் படித்தால் தெரியவரும். இதுபோது அவர் உலகெங்கும் "தத்வமசி" என்ற மகாவாக்கியத்தின் கருத்தை இக்காலத்திற்கேற்ப "காண்பான்," "காட்சி," "காணப்படும் பொருள்" மூன்றையும் ஒன்றித்து ஏகனாகி அறிந்தாங்கறிய வேண்டும். அதுவே ஆத்மஞானம். அதற்குப் பரிபூரண அன்பு அத்யாவசியம் என உபதேசித்துக்கொண்டு வருகிறார். விரிக்கிற் பெருகும். ஆர்வமுள்ளோர் அவர் உபதேசங்களை வாங்கி வாசிக்கக் கடவர்.

மெய்கண்டார் கண்ட சிவஞான கழகமும், திருவருட் பிரகாச வள்ளலார் கண்ட சத்தியஞான சபையும், ஆல்காட் பெரியார் கண்ட பிரம்மஞான சங்கமும், திருச்சிற்றம்பலத்தின மூலவேரிலிருந்தே தோன்றியவை

களாம்; ஒரே நோக்கத்தை உடையனவாம். சிவஞானம், சத்தியஞானம், பிரம்மஞானம் என்ற சொற்கள் ஒரே பொருளை (இறைஞானம் - Divine Wisdom - Theosophy) குறிக்கும் சொற்களாம்; அவ்வாறே கழகம், சபை, சங்கம், அம்பலம் என்ற பதங்கள் ஒரே பொருளை (ஸ்தாபனம் - Society)க் குறிக்கும் பதங்களாம். மெய்கண்டார் கண்ட சிவஞான கழகத்திற்கும், ஆல்காட் பெரியார் கண்ட பிரம்மஞான சங்கத்திற்கும் அகச் சந்தானம் ஒன்றே யாம். அவை வருமாறு:—

| I. சிவஞான கழகம் | II. பிரம்மஞான சங்கம் |
|---|---|
| (திருச்சிற்றம்பலம்) | (திருச்சிற்றம்பலம்) |
| ஸ்ரீகண்டபரமேஸ்வரர் | (Solar Logas) |
| (அகச்சந்தானம்) | (அகச்சந்தானம்) |
| 1. திருநந்திதேவர் | 1. Silent Watcher |
| 2. சனத்குமாரர் | 2. சனத்குமாரர் |
| 3. சத்தியஞானதரிசினி | 3. மாரீச மகரிஷி |
| 4. பரஞ்சோதி முனிவர் | 4. தேவாபி மகரிஷி |
| (புறச்சந்தானம்) | (புறச்சந்தானம்) |
| 1. மெய்கண்டார் | 1. பிளவட்ஸ்கி அம்மை |
| 2. அருள்நந்தி சிவம் | 2. ஆல்காட் பெரியார் |
| 3. மறைஞானசம்பந்தர் | 3. அன்னை வஸந்தை |
| 4. உமாபதி சிவம் | 4. பெரியார் லெட்பீட்டர் |

## The Outer Heads of Theosophical Society

பிரம்மஞான சங்கம் புற சந்தான குரவர்கள்



H. P. பிலவட்ஸ்கி அம்மை



H. S. ஆல்காட் பெரியார்



அன்னை வஸந்தை



யோகி C. W. லெட் பீட்டர்

இதனால் இவ்விரண்டு இயக்கங்களின் மூலவேர் ஒன்றே யாகும்; நோக்கமும் ஒன்றேயாம்.

சிவஞானபோதம் திருக்குறள் போன்று ஓர் பொதுத் தமிழ் மறையாகும். இதுபோது வழங்கிவரும் வார்த்திகப் பொழிப்புரை, கருத்துரை, உரைவகை, மேற்கோள், ஏது, உதாரணவெண்பா, பாயிரம், சூரணிக்கொத்து, பொது, சிறப்பு, பிரமாணம், இலக்கணம், சாதனம், பயன், அதிகரணம் முதலிய பாகுபாடுகள் மெய்கண்டாரால் செய்யப்பட்டதல்லவென்பது திண்ணம். பிற்காலத்தவர்களால் சிவஞானபோதத்திற்குச் சைவ சமய வர்ணத்தைக் கொடுக்க இவைகளைக் கற்பனை செய்து மெய்கண்டார் பெயரால் இடைச்செருகல் செய்யப்பட்டவை. ஆழ்ந்து ஆராயின் அவற்றின் உண்மை தெரியவரும். சிவஞானபோதத்திற்கு வியாக்கியானமாகச் செய்யப்பட்ட சித்தியாரின் ஆசிரியராகிய அருள்நந்தி சிவாச்சாரியாரும் அவர் வாழ்க்கை வரலாற்றின்படி அவர் ஓர் பெரிய பண்டிதர், சைவசமயாச்சாரியர், பரமத கண்டனம்செய்தவர், தன்முனைப்பாளர். ஆதலால் தான் அருளிய சித்தியார் சுபக்கத்திற்குச் சைவசமய வர்ணத்தைக் கொடுத்துச் சென்றார்.

சிவஞானபோதம் வடமொழி உபனிஷத்துக்கள் போன்று சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் ஓர் தமிழ் உபனிடதமாம். உபனிடதங்களின் மறை பொருளுக்கு ஏழு திறவுகோல் உளவென்றும், ஞானதீட்சை பெற்று இறைஞானத்தில் ஒவ்வொரு படியாக ஏறும்போது மறைக்கதவுகள் ஒவ்வொன்றாகத் திறக்கப்படும் என்றும் மெய்யுணர்வுடையோர் கூறுவர்.

சிவஞானபோதத்தின் பன்னிரண்டுசூத்திரங்களுமே சிறப்புடைத்து; அவற்றில் எதுவும் பொது, சிறப்பு என்பதில்லை. தூலாருந்ததி நியாயமாக முதல் நான்கு

சூத்திரங்களில் தனு, கரண, புவன, போகங்களைச் சொல்ல வந்தவர் முதல் சூத்திரத்தில் அசுத்த மாயா மலமாகிய மூலப் பிரகிருதியின் காரியமாகிய புவனத்தையும், இரண்டாம் சூத்திரத்தில் கர்மமலத்தின் காரியமாகிய இருவினைப் பயன், பிரபஞ்சத் தோற்றம், உயிரின் போகம் இவற்றையும், மூன்றும் சூத்திரத்தில் உயிர் உறையும் தனுக்களையும், நான்காம் சூத்திரத்தில் ஆணவமல இலக்கணத்தையும், அதனால் ஆன்மா அடைந்த அந்தக்கரணத்தையும், உயிரின் உபாதிகளையும் விளக்கி. ஐந்தாம் சூத்திரத்தில் ஆன்மாவால் தனுகரணங்களும்,இறைவனால் தனு, கரண, புவன, போகங்களும் தொழிற்படும் முறைமைகளையும், ஆறும் சூத்திரத்தில் பதி, பசு, பாசங்களின் அடிப்படையான சிவசத்தின் இலக்கணத்தையும், ஏழாம் சூத்திரத்தில் பசு, பதியின் இலக்கணங்களையும், எட்டாம் சூத்திரத்தில் பரிபக்குவமடைந்த ஆன்மாக்களுக்குக் குரு உபதேசத்தின் முறைமையையும், ஒன்பதாம், பத்தாம் சூத்திரங்களில் பரிபக்குவமடைய அதிதீவிரதர சாதனங்களாகிய கர்மம், பக்தி, யோகம், ஞானம் ஆகிய நான்கு மார்க்கங்களையும், அவற்றாலெய்தும் பயன்களையும், பதினோராம் சூத்திரத்தில் உயிர்கள் தோன்றாத் துணைவன் அருளால் தன்னைத்தான் அறிந்து தலைவனையும் உணரும் தன்மையையும், பன்னிரண்டாம் சூத்திரத்தில் சாதாரண உலகமக்களுக்குச் சமயமார்க்கத்தில் (லௌகீகத்திலிருந்து வைதீகத்திற்கு) செல்லத்திரிகரணசுத்திற்கான ஆரம்ப சாதனங்களையும் அருளிப்போந்தார் மெய்கண்டார். என்னே சிறப்பு.

திருச்சிற்றம்பலம்

உ

## சிவஞானபோதம் தமிழ்ச் சூத்திரங்கள்

அவன்அவள் அதுஎனும் அவைமூ வினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்
அந்தம்ஆதி என்மனார் புலவர். 1

அவையே தானே யாய்இரு வினையில்
போக்கு வரவு புரிய ஆணையின்
நீக்கம் இன்றி நிற்கும் அன்றே. 2

உளதில தென்றலின் எனதுடல் என்றலின்
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலில் கண்படில்
உண்டிவினை யின்மையின் உணர்த்த உணர்தலின்
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா. 3

அந்தக் கரணம் அவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா(து)
அமைச்சர சேய்ப்பநின் றஞ்சவைத் தைத்தே. 4

விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்தறிந் தறியா ஆங்கவை போலத்
தாந்தம் உணர்வின் தமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே. 5

உணருரு அசத்தெனின் உணரா தின்மையின்
இருதிற னல்லது சிவசத் தாமென
இரண்டு வகையின் இசைக்குமன் னுலகே. 6

யாவையும் சூனியம் சத்தெதிர் ஆதலின்
சத்தே அறியா(து) அசத்தில தறியா(து)
இருதிறன் அறிவுள(து) இரண்டலா ஆன்மா. 7

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே. 8

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்நிழலாம் பதி,விதி எண்ணும் அஞ்செழுத்தே. 9

அவனே தானே யாகிய அந்நெறி
ஏகனாகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை இன்றே. 10

காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே. 11

செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரனெனத் தொழுமே. 12

———

ॐ

## ॥ शिवज्ञानबोधः ॥

1. स्त्रीपुंनपुंसकादित्वाज्जगतः कार्यदर्शनात् ।
अस्ति कर्ता स हृत्वैतत्सृजत्यस्मात्प्रभुर्हरः ॥ १ ॥

2. अन्यः सन् व्याप्तितोऽनन्यः कर्ता कर्मानुसारतः ।
करोति संसृतिं पुंसामाज्ञया समवेतया ॥ २ ॥

3. नेतितो ममतोद्रेकादक्षोपरतिबोधतः ।
स्वापे निर्भोगतो बोधे बोद्धृत्वादस्त्यणुस्तनौ ॥ ३ ॥

4. आत्मान्तःकरणादन्योऽप्यन्वितो मन्त्रिभूपवत् ।
अवस्थापञ्चकस्थोऽतो मलरुद्धस्वदृक्क्रियः ॥ ४ ॥

5. विदन्त्यक्षाणि पुंनाऽर्थान्न स्वयं सोऽपि शंभुना ।
तद्विकारी शिवश्चैन्न कान्तोऽयोवत्स तं नयेत् ॥ ५ ॥

6. अदृश्यं चेदसद्भावो दृश्यं चेज्जडिमा भवेत् ।
शंभोस्तद्व्यतिरेकेण ज्ञेयं रूपं विदुर्बुधाः ॥ ६ ॥

7. नाचिच्चित्संनिधौ किं तु न वित्तस्ते उभे मिथः ।
प्रपञ्चशिवयोर्वेत्ता यः स आत्मा तयोः पृथक् ॥ ७ ॥

8. स्थित्वा सहेन्द्रियव्याधैस्त्वां न वेत्सीति बोधितः ।
मुक्त्वैतान् गुरुणाऽनन्यो धन्यः प्राप्नोति तत्पदम् ॥ ८ ॥

9. चिद्दृशात्मनि दृष्ट्वेशं त्यक्त्वा वृत्तिमरीचिकाम् ।
लब्ध्वा शिवपदच्छायां ध्यायेत् पञ्चाक्षरीं सुधीः ॥ ९ ॥

10. शिवेनैक्यं गतः सिद्धस्तदधीनस्ववृत्तिकः ।
मलमायाद्यसंस्पृष्टो भवति स्वानुभूतिमान् ॥ १० ॥

11. दृशोर्दर्शयिता चात्मा तस्य दर्शयिता शिवः ।
तस्मात्तस्मिन्परां भक्तिं कुर्यादात्मोपकारके ॥ ११ ॥

12. मुक्त्यै प्राप्य सतस्तेषां भजेद्वेषं शिवालयम् ।
एवं विद्याच्छिवज्ञानबोधे शैवार्थनिर्णयम् ॥ १२ ॥

(रौरवागमे)

May the Eternal Wisdom illumine our minds,
May the Spirit of Truth purify our hearts,
May the Great Law guide all our words and deeds.

## நூல்

### வடமொழி சுலோகங்களும் தென்மொழி சூத்திரங்களும்

### முதல் சுலோகம்

1. (அ) ஸ்திரீபும் நபும்சகாதித் வாஜ்ஜகத:
கார்யதர் சநாத்।
அஸ்தி கர்த்தாஸஹிருத் வைதத்ஸிருஜத்
யஸ்மாத் பிரபுர்ஹர:

ஜகதக = உலகம், ஸ்திரிபும் நபும்சகாதித்வாத் = பெண், ஆண், அலி முதலியதாக இருத்தலின், கார்யதர் சநாத் = காரியமாகக் காணப்படுதலின், கர்த்தா = கர்த்தா, அஸ்தி = உளன். சஹ = அவன், ஏதத் = இவ் வுலகை, ஹிருத்வா = ஒடுக்கி, ஸிருஜத் = படைக்கின்றான். யஸ்மாத் = இக்காரணத்தால், ஹரஹ = அரனே. பிரபுஹ = பிரபு ஆவன்.

கருத்து

உலகம் பெண், ஆண், அலி முதலிய (பாகுபாடு உடைய) தாக இருத்தலினாலும், (தோன்றி, நின்று, ஒடுங்கும்) காரியத்தன்மை காணப்படுதலினாலும், (யாது யாது காரியம் அது) கர்த்தாவினை யுடையதாம், அவன் இவ்வுலகை சங்கரித்து (மீள) சிருஷ்டிக்கின்றான். இக் காரணத்தால் (சங்காரகர்த்தாவான) அரனே பிரபு வாவன்.

### முதல் சூத்திரம்

(ஆ) அவதாரிகை

மாயாமலமும் அதன் காரியமாகிய புவனத்தையும் கூறி, கர்த்தாவின் உண்மையை உணர்த்தியது.

அவன்அவள் அதுஎனும் அவைமூ வினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்
அந்தம்ஆதி என்மனார் புலவர்.

அந்நுவயம்

மூவினைமையின் அவன், அவள், அது எனும் அவை மலத்து தோற்றியதிதியே மலத்து ஒடுங்கி, மலத்து அந்தம் ஆதி உளதாம்; தோற்றி ஆதி அந்தம் ஆம் (என) புலவர் என்மனர்.

பிண்டப் பொழிப்புரை

தோன்றி, நின்று, மறையும் முத்தன்மைகளை உடையதும், அவன், அவள், அது என்ற முப்பகுப்புக்களை உடையதுமான இப்புவனம் மூலப்பிரகிருதி மாயையி னின்றும் தோற்றுவிக்கப்பட்ட அம்முறையே அம்மூலப் பிரகிருதியில் ஒடுங்கி, முன்கல்பத்தின் அந்தத்தில் (முடிவில்) ஒடுங்கியவாறு மறு கல்பத்தின் ஆதியில் மீண்டும் அம்மூலப் பிரகிருதியினின்றுமே தோன்று வதாகும் என்றும், அவ்வாறு தோற்றுவிப்பதற்குக் காரணமாய் இருந்த கர்த்தாவே இப்புவனத்திற்கு ஆதி யாயும் அந்தமாயும் உளர் என்றும் அறிஞர் கூறுவர்.

விளக்கவுரை

அவை என்றது ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் என்றும், உயர்திணை, அஃறிணை என்றும், சேதனம், அசேதனம் என்றும் இவ்வாறு பலவாய் பகுத்து, சுட்டி அறியப்படும் சொல் லும் பொருளும் (நாமரூபம்) ஆய இருகூற்றுப் புவனத் தொகுதியைக் குறித்து நின்றது.



புவனம் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில் காரணமாக தோன்றல், நிலைத்தல், மறைத லாகிய காரியங்களை உறுதற்குரியதாக யிருத்தலின் யாது, யாது காரியம் அது அது காரண கர்த்தாவினை உடையதாம் என்றவாறு.

"அந்தம் ஆதி (மீள) உளதாம்" என்றது சென்ற கல்பத்தின் அந்தத்தில் (முடிவில்) எந்த நிலையில் புவனம் பிரளயத்தில் ஒடுங்கிற்றோ, அதே நிலையில் பிரளயத்திற் குப் பின், மறு கல்பத்தின் ஆதியில் (ஆரம்பத்தில்) "இலயத்ததுஇலயத்தவாறு உளதாம்" என்ற நியதிப்படி மீளத் தோன்றுவதாகும். அதனாலேயே உலகை ஆயிரம் தலைகளையுடைய ஆதிசேஷன் தாங்கிக்கொண்டிருக் கின்றான் எனப் புராணங்கள் கூறுகின்றன. ஆதிசேஷன்: ஆதி = ஆதியில், சேஷம் = மிச்சமாய் இருப்பது. ஆயிரம் தலை பாம்பு என்றது பல்வேறு சக்திகளைக் குறித்து நின்றது.

"தோற்றி" = புவனத்தைத் தோற்றுவிப்பதற்குக் காரணமாய் நின்ற கடவுளைக் குறித்தலின் பெயர்ச் சொல்லாம். "ஆதியந்தம்" என்றது இறைவன் உலகிற்கு ஆதியாயும் அந்தமாயும் இருக்கின்றான் என்பது. அவன் விழிக்கும்போது புவனம் எழுகின்றது; அவன் துயிலும் போது புவனம் ஒடுங்குகின்றது. "தோற்றமும் ஈறுமாகி நின்றாய் சோபுர மேயவனே" என்று சம்பந்தரும், "ஆதி யும் அந்தமும் ஆயினருக்கு" என்று பட்டினத்தடிகளும் அருளியதைக் காண்க.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு.

—குறள்

சிலந்தி தனது உடலினின்றும் உண்டாகும் நூலைக் கொண்டு தன் வலையைக் கட்டுவது போன்று இறைவன்

தனது உடலாகிய மாயையினின்றும் இப்புவனங்களைத் தோற்றுவிக்கின்றான். சுத்தமாயை (விந்து), சுத்தா சுத்த மாயை (மோகினி), அசுத்தமாயை அல்லது பிரகிருதி மாயை (மான்) இம்மூன்றும் எதிர் நிரல் நிறையாக இறைவனின் தூலம், சூக்குமம், காரண சரீரங்களாக அமைந்துள்ளன. ஒவ்வொரு பகுதியிலும் அதற்குரிய தத்துவங்களும், புவனங்களும், ஆன்மாக்களும் உள. நாம் சம்பந்தப்பட்டவரையில் பிரகிருதி மாயா தத்துவ புவனங்களேயாகும். ஆதலால் இது மூலப்பிரகிருதி (Root Matter) என வழங்கப்படுகிறது.

புவனங்கள் தோன்றுவதற்கு இறைவன் நிமித்த காரணன்; மாயை முதற்காரணம்; இறை சத்தி (காலம், நியதி, ஆவரணம், விக்ஷேபம் முதலிய சத்திகள்) துணைக் காரணமாம். இவைகளெல்லாம் பிரிப்பின்றி சமவேதமாய் வியாபக வியாப்பிய வேறுபாடின்றி நிற்றலால் இறைவனே இப்பிரபஞ்சத்திற்கு எல்லா காரணமுமாய் இருக்கின்றான் என்பதில் இழுக்கில்லை.

### தத்துவ தோற்றமும் ஒடுக்கமும்

உருத்திர தேவநாயனார் அருளினாலே குணரூபமான மூலப்பிரகிருதி தோன்றும். மூலப்பிரகிருதியில் முக்குணங்களும் தோன்றும். முக்குணங்களும் தோன்றாது நின்ற இடம் அவ்வியத்தம் (Unmanifested). அந்த அவ்யத்தத்தில் சித்தமும், சித்தத்தில் புத்தியும் தோன்றும். புத்தியில் அகங்காரம் தோன்றும். அவ்வகங்காரம் சத்துவகுண அம்ஸமான தைசத அகங்காரம்; இரஜோகுண அம்ஸமான வைகாரிக அகங்காரம்; தமோகுண அம்சமான பௌதாதிக அகங்காரம் என மூவகைப்படும். இவற்றுள் தைசத அகங்காரத்தில் சத்துவகுணத்தைப் பொருந்திய மனமும், ஞானேந்



திரியம் ஐந்தும் தோன்றும். வைகாரிக அகங்காரத்தில் இராசத குணத்தைப் பொருந்திய கன்மேந்திரியங்கள் ஐந்தும் தோன்றும். பௌதாதிக அகங்காரத்தில் தமோ குணத்தைப் பொருந்திய தன் மாத்திரைகள் ஐந்தும் தோன்றும். தன்மாத்திரை ஐந்தனுள் சத்தத்திலே ஆகாசமும், பரிசத்திலே வாயுவும், ரூபத்திலே தேயுவும், ரசத்திலே அப்புவும், கந்தத்திலே பிருதிவியும் தோன்றி, ஆகாசத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து தேயுவும், தேயுவிலிருந்து அப்புவும், அப்புவிலிருந்து பிரகிருதியுமாக ஐம்பெரும் பூதங்கள் உண்டாயின. ஒடுங்குங் காலத்தில் தோன்றின அடைவே யொடுங்கும்.

### கருத்துரை

தோன்றி, நின்று, மறையும் சேதன சேதனமான இப்புவனம் மூலப்பிரகிருதி மாயையிலிருந்து தோற்றுவிக்கப்பட்டு, நின்ற முறையே, ஒடுங்கி மீளவும் இலயத்தது இலயத்தவாறு அதனினின்றும் தோன்றும். அதன் கர்த்தா ஆதிபகவன் ஆவர்.

### குறிப்புரை

இந்த சூத்திரம் அசுத்த மாயா மலத்தையும் அதன் காரியமாகிய புவனத்தையும் சொல்ல வந்ததே தவிர ஆணவமலத்தைப் பற்றிக் கூறவரவில்லை.

"தோன்றிய" என்று தன்வினையால் கூறாமல் "தோற்றிய" என பிறவினையால் கூறியமையால் அப்பிறவினைக்குரிய வினைமுதலாகிய கர்த்தா என்பது அவாய் நிலையாய் வந்தது. சடம் தானாகவே தோன்றாது.

தோன்றி, ஒடுங்கி என்றுமட்டும் சொன்னபோதிலும் ஏற்புழிக் கோடல் என்ற உத்தியால் நிலைத்தலையும் அடக்கி நின்றுள்ளது.

அசுத்த மாயா தத்துவங்கள் 24. அவையாவன: தன் மாத்திரை 5, பூதங்கள் 5, ஞானேந்திரியம் 5, கர்மேந் திரியம் 5, அந்தக்கரணம் 4 = 24. இதை ஆன்மதத்துவம் என்பர். முவினை = தோன்றல், இருத்தல், மறைதல். திதியே = முறையே. மலம் = மாயாமலம். அவை = புவனத் தொகுதி. உண்மையில் பூதங்கள் 7. அவையாவன பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், அனுபாதகம், ஆதி என்பவைகளாம். அநுபாதகமும் ஆதியும் சுத்த மாயா காரியமாகையால் அசுத்த மாயா காரியமாகிய மூலப் பிரகிருதி மாயையில் அவை சேர்க்கப்படவில்லை. "மலத்து" என்ற சொல்லை தோற்றிய, ஒடுங்கி, உள தாம் என்ற மூன்றின் முன்னும் சேர்த்துக் கொள்ளவும்.

சிவஞான சித்தியார்

ஒருவனோடு, ஒருத்தி, ஒன்றுஎன்று உரைத்திடும் உலக
வருமுறை வந்து நின்று போவதும் ஆதலாலே[மெல்லாம்
தருபவன் ஒருவன் வேண்டும்; தான்முதல் ஈறும் ஆகி
மருவிடும் அநாதி முத்த சித்துரு மன்னி நின்றே.

### ENGLISH SUMMARY

This Sutram explains the emanation of the Universe - both Sentient and insentient from the Root - Matter (Mula - Prakriti) by the Logos (Ishvara.)

This Universe which is a Composite consisting of components variously termed as Animate and In-animate, Organic and In-organic and Sentient and In-sentient objects and which undergoes three kinds of changes - Birth (appearance), Existence (maintenance), and Death (decay and dissolution) is emanated by the Logos (Ishvara) from His Root-Matter (Mula-Prakriti) to which it (the Universe) returns during the



deluge (Pralaya) at the end of a Life-Period (Kalpa) in the order of its forth - coming and reappears again in the next Kalpa with the same conditions, attributes and qualities that prevailed at the end of the previous Kalpa. The Ishvara creates the Universe as a spider spins its web out of the thread coming from its body. He is the beginning (Alpha) and the end (Zeta) of the Universe of which He is the efficient as well as the material and auxiliary cause.

---

### இரண்டாம் சுலோகம்

2. (அ) அங்யஃஸன்வியாப்திதோ அனன்யஃ கர்த்தா
கர்மானுசாரதஃ|
கரோதி சம்ஸ்ருதிம் பும்ஸாமாக்ஞயா
சமவேதயா||

வியாப்திதஹ = வியாபித்திருத்தலால், அனன்யஹ = (பிரபஞ்சத்திற்கு) வேறுகாதிருக்கின்ற, கர்த்தா = கர்த்தா, அன்யஹஸன் = வேறுக யிருந்துகொண்டு, சமவேதயா = நீக்கமின்றி யிருக்கின்ற, ஆக்ஞயா = (தனது) ஆணையால், பும்ஸாம் = புருடர்களுக்கு, கர்மானுசாரதஹ = (அவர்களது) கர்ம பரிபாகத்தை யனுசரித்து, சம்ஸ்ருதிம் = சம்சாரத்தினை, கரோதி = செய்கின்றான்.

கருத்து

தனது வியாபகத் தன்மையால் பிரபஞ்சத்திற்கு வேறுகாதிருக்கின்ற சிவபெருமான் வேறுக யிருந்து கொண்டு, தன்னை விட்டு நீக்கமின்றி நிற்கும் ஆணையைக் கொண்டு, ஆன்மாக்களுக்கு அவர்களது கர்மானுசாரத் திற்கீடாக சம்சாரத்தினை செய்கின்றான்.

## இரண்டாம் சூத்திரம்

(ஆ) அவதாரிகை

கன்மமலமும் அதன் காரியமாகிய போகத்தையும் கூறி அநாதி சிருஷ்டி, புது சிருஷ்டிகளை உணர்த்தியது.

அவையே தானே யாய்இரு வினையில்
போக்கு வரவு புரிய ஆணையின்
நீக்கம் இன்றி நிற்கும் அன்றே.

அந்நுவயம்

(தோற்றி) அன்றே இருவினையின் ஆணையில் அவையேயாய், தானே ஆய், அவையே தானேயாய் (புவனத்தை) ஆணையில் போக்குவரவு புரிய; (உயிர்களின்) இருவினை ஆணையில் (உலகில்) போக்கு வரவு புரிய; ஆணையில் நீக்கமின்றி நிற்கும்.

பிண்டப் பொழிப்புரை

இறைவன் அநாதியே வேண்டுதல் வேண்டாமை என்னும் நியதிப் (ஆணையின்)படி தனது இரு சங்கற்ப வினையினால் சேதன சேதனமான இப்புவனமாகப் பரிணமித்தும், (அதே சமயம்) இப்புவனத்தோடு தாக்குறாது தனித்து வேறாகியும், இப்புவன பேதங்களோடுஉடனாயும் நின்று, காலச் சக்கர நியதிப்படி, புவனத்தைத் தோற்றுவித்தும், இருத்தியும், ஒடுக்கியும், உயிர்களை பிரவிருத்தி நிவர்த்தி மார்க்கங்களில் புகுத்தியும், அவைகளின் நல்வினை தீவினை யென்ற இருவினைக் காரணங்களுக் கேற்ப கர்ம நியதிப்படி பல்வேறு யோனிகளில் பிறத்தல் இறத்தல் செய்வித்து, புனர்ஜன்ம நியதிப்படி பூலோக, புவர்லோக, சுவர்லோகங்களில் போக்குவரவு புரியவும் செய்வதற்குத் தனது ஆக்ஞாநியதி (சிற்சத்தி)யுடன் பிரிப்பின்றி நிலைகொண்டிருக்கின்றான்.



விளக்கவுரை

பிரபஞ்சம் எப்படித் தோன்றிற்று? எப்போது தோன்றிற்று? ஏன் தோன்றிற்று? இறைவனுக்கும் இந்த சேதன சேதன பிரபஞ்சத்திற்குமுள்ள சம்பந்தா சம்பந்தம் என்ன என்ற வினாக்களுக்குப் பல சாத்திரங்கள் பலவிதமாகக் கூறுகின்றன. சிவன் அன்பு மயமானவன்; தன் அன்பைக் காட்ட ஒரு பொருள் வேண்டி தன் சங்கற்ப மாத்திரையானே தன்னுடைய ஓர் அம்சத்திலிருந்தே இப்பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தான் என்றும், அது அவன் திருவிளையாடல்கள் என்றும், இவையெல்லாம் தேவ ரகசியம், சொல்லொணாதது என்றும் பலவாகக் கூறுகின்றன. இவைகளைப் பற்றி உபனிஷத்துக்களில் சொல்லப்படும் உண்மைகளையே பிரதிபலிக்கும் வகையில் மெய்கண்டார் அனாதி சிருஷ்டியைப் பற்றியும், புது சிருஷ்டிகளைப் பற்றியும் இச்சூத்திரத்தில் கூறுகின்றார்.

ஓர் அரசன் அரசியல் நிர்ணய சட்டத்தின் (ஆணையின்)படி தனது நாட்டைப் பரிபாலிக்கின்றான். அரசனின்றி அரசியல் சாசனம் இல்லை; அரசியல் சாஸனமின்றி அரசு இல்லை. அரசனும் அரசியல் சாஸனமும் பிரிப்பற்றது. அதுபோல இறைவனும் ஒரு நியதி (ஆணை)யின் (Divine Laws of Nature)படி பஞ்சகிருத்தியங்களைச் செய்கின்றான். இரண்டும் (அரனும் ஆணையும்) அனாதியே பிரிப்பின்றி சமவேத சமவாயமாய் உள்ளது. இந்த ஆணைக்கு ஆதிசத்தி (Fohat) என்று பெயர். இது பல பிரிவுகளை யுடைத்து.

இறைவன் பிரபஞ்சத்தை சிருஷ்டிக்கத் திருவுளங் கொண்ட மாத்திரம் "சிவம் சத்திதனை யீன்றும், சத்தி தான் சிவத்தை யீன்றும், உவந்து இருவரும் புணர்ந்து இங்கு உலகு உயிர் எல்லாம் ஈன்றும்" என்ற சித்தியார் வாக்குப்படி ஏகமாகிய சிவம், சிவன் (Spirit) சத்தி (Matter-மாயை)யாகப் பரிணமித்து, சிவன் மாயையை விரும்பி நோக்கிப் புணர, தங்கம் ஆபரணமாக மாறினது போன்று அவருடைய அம்சத்தின் ஒரு பகுதி சேதன சேதன பிரபஞ்சமாகத் திரிந்து பரிணமித்தது. பூமியிலிருந்து தாவரங்கள் முளைப்பது போலும், உடலிலிருந்து உரோமம் உற்பத்தியாவது போன்றும், அசேதனப் பிரபஞ்சமும், அக்னிச் சுடரிலிருந்து நெருப்புப் பொறிகள் கிளம்புவது போன்றும் சேதனப் பிரபஞ்சமும் இறைவனிடமிருந்தே தோன்றின. இதைத்தான் "அவையேயாய்" என்று இச்சூத்திரத்தில் கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு இறைவனுடைய ஓர் அம்சம் பிரபஞ்சமாக மாறிவிட்டது என்றால் அவனுடைய பரிபூரணத்துவம் குறைந்துவிடாதோ யெனின், குறையாது. அவன் என்றும் பரிபூரணமாகவே இருக்கின்றான். பூஜ்யத்திலிருந்து எத்தனை பூஜ்யங்கள் கழித்தாலும், கூட்டினாலும் பூஜ்யத்தின் மதிப்பு மாறுவதில்லை. இதைத்தான் மேலே சொன்ன சித்தியார் செய்யுளின் மூன்றாவது அடியில் "பவன் பிரம்மச்சாரியாகும், பால்மொழி கன்னியாகும்" எனக் கூறப்பட்டுள்ளது. பகவான் கீதையில் "என்னுடைய ஒரு அம்சத்திலிருந்து இந்தப் பிரபஞ்சம் சிருஷ்டிக்கப்பட்டுள்ளது; இருந்தும் நான் இருக்கின்றேன்" என இக்கருத்தையே அருளியுள்ளார். இதைத்தான் இச்சூத்திரத்தில் "தானே ஆய்" என்று கூறப்பட்டுள்ளது.



மற்றும் இறைவன் பகுதிஅம்சத்திலிருந்து தோன்றிய இச்சேதன சேதன பிரபஞ்சப் பொருட்கள்எல்லாம் பூரண வஸ்துக்களே. அவ்வஸ்துக்களுடன் இறைவன் உடனாயும் நிற்கின்றான். இதைத்தான் இச்சூத்திரத்தில் "அவையே தானேயாய்" என்று கூறப்பட்டுள்ளது. இவ்வாறு இறைவன் இச்சேதன சேதன பிரபஞ்சத்துடன் ஒன்றாயும், வேறாயும், உடனாயும் இருக்கின்றான். இக்கருத்துக்களை தேவார திருவாசகங்களில் பரக்கக் காணலாம். இவ்வாறு ஒன்றாய் இருப்பதால் சத்துத் தன்மையும், வேறாய் இருப்பதால் சித்துத் தன்மையும் உடனாயிருப்பதால் ஆனந்தத் தன்மையும் உயிர்களுக்கு ஏற்படுகின்றது.

இவ்வாறு இறைவன் மாயையை விரும்பி நோக்கி அதனைக் கூடும்போது இப்பிரபஞ்சம் தோன்றிற்று எனப் பார்த்தோம். அவ்வாறே அரன் அவளை வெறுத்து உதரித் தள்ளித் தனித்து யோகத்தில் இருக்கும்போது இப்பிரபஞ்சம் ஸ்தம்பித்து அழிந்து ஒன்றில் ஒன்று மறைந்து இறுதியில் இறைவனில் ஒடுங்கி விடுகின்றது. இறைவனின் இந்த விருப்பு, வெறுப்பு என்ற இவ்விரு வினை நியதியே (Law of attraction and Repulsion) இப்பிரபஞ்சம் தோன்றி மறையக் காரணமாக யிருக்கின்றது. இவ்வுண்மை பொய்யா மொழிப் புலவரின்,

"வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை யில"

என்ற குறளில் பொதிந்து கிடப்பதைக் காணலாம். இதையே இறைவனின் "ஞான நடனம், ஊன நடனம்" எனச் சாத்திரங்கள் கூறுகின்றன.

மற்றும் இப்பிரபஞ்சம் தோன்றுவதும் மறைவதும் காலச் சக்கரநியதிப் (Laws of Periodicity)படி கல்பத்தில்

தோன்றுவதும், பிரளயத்தில் மறைவதும் மாறி மாறி நடந்துகொண்டேயிருக்கின்றது. இதைத்தான் "இருவினை ஆணையில் போக்கு வரவு புரிய" என்று இச்சூத்திரத்தில் கூறப்பட்டுள்ளது. இறைவனிலிருந்து பிரபஞ்சம் தோன்றுவதை, "போக்கு" என்ற பதமும், ஒடுங்குவதை "வரவு" என்ற பதமும் குறிக்கின்றது. இவ்வாறு பிரபஞ்சத்தை ஆக்குவதும் அழிப்பதுமான செயலை இறைவனின் "சம்சாரம்" என வேதங்களில் கூறப்படுகின்றது. இதுவே இறைவனின் அநாதி சிருஷ்டியாகும்.

இதுவரை இறைவனின் இருவினை ஆணையாலும் காலச்சக்கர நியதியாலும் "அவையே தானேயாய் போக்குவரவு புரிதலை"ப் பார்த்தோம். இனி உயிரின் இருவினை ஆணையால் அது போக்கு வரவு புரிதலைப் பார்ப்போம்.

அநாதி சிருஷ்டியில் கேவலாவத்தையிலிருந்த உயிர்கள் மூலவினையால் உந்தப்பட்டு விக்ஷேப சக்தியால் (Law of Expansion) சகலாவத்தையில் பிரவிர்த்திக்கப்பட்டன. அப்படி பிரவிர்த்திக்கப்பட்ட உயிர்கள் சகலாவத்தையில் அவைகளின் நல்வினை தீவினைகளுக் கீடாக எய்திய புண்ணிய பாவ பலன்களுக்கேற்ப கர்மப் பிரதி கர்ம நியதிப் (Law of Action and Re-action)படி ஏழேழு நாற்பத்தொன்பது பிறவிகளின் 84 லக்ஷ யோனி பேதங்களில் புனர்ஜன்ம நியதிப் (Law of Re-incarnation)படி பஞ்சாக்னி மூலம் பிறந்து இறந்து பூ, புவர், சுவர் ஆகிய திரிலோகங்களில் போக்கு வரவு புரிந்து போகபோக்கியங்களை நுகர்ந்து சம்சார சாகரத்தில் உழன்று பரிணாம நியதிப் (Law of Evolution)படி வளர்ந்து மலர்ச்சியுற்று நிவர்த்தி மார்க்கமாக சுத்தாவத்தையை யடைந்து இறுதியில் இறைவனில் இரண்டறக்கலக்கின்றன. இதன் கருத்து வள்ளுவரின்,



"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"

என்ற குறளில் பிரதிபலிக்கிறது.

இறைவனின் பஞ்சகிருத்தியங்களுக்குத் துணைக் காரணமாகயிருக்கும் இறை (ஆதி) சத்தி பல இயற்கை நியதி (ஆணை)களாக (Divine Laws - Laws of Nature) பரிணமிக்கின்றது. இந்த ஆணை அநாதியே இறைவனுடன் நீக்கமற நிற்பதாகும்.

"தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத்தரும் சத்தி
பின்னமிலான் எங்கள் பிரான்" —திருவருட்பயன்

உயிர்களுக்கு இருவினையின் பயனை ஊட்டுவிப்பவன் இறைவனாகும். இறைவனின் சம்சாரம் சுதந்தரமாக சங்கல்ப மாத்திரையானே நடைபெறுவதாகும். உயிர்களின் சம்சாரம் பரதந்திரமாய் இருவினையால் உந்தப்பட்டு நடைபெறுவதாகும்.

கருத்துரை

இறைவன் தன்னுடன் நீக்கமின்றி நிற்கும் ஆணையைக் கொண்டு பஞ்சகிருத்தியங்களைச் செய்கின்றான். விருப்பு, வெறுப்பு என்ற இருவினை நியதிகொண்டு மாயையை கூடியும் பிரிந்தும் இப்பிரபஞ்சத்தை ஆக்கலும் அழித்தலும் செய்கின்றான். தானே இச்சேதனசேதனப் பிரபஞ்சமாக மாறியும், அத்துடன் தாக்காது வேறாகியும், உடனுமாயும் நின்று காலச் சக்கர நியதிப்படி புவனத்தைப் போக்கு வரவு புரிகின்ற சம்சாரத்தில் ஈடுபடுகின்றான். உயிர்களையும் அவைகளின் நல்வினை தீவினை யென்ற இருவினைக்கேற்ப கர்மப் பிரதி கர்ம நியதிப்படியும், புனர்ஜன்ம நியதிப்படியும் உலகில்

பல்வேறு யோனிகளில் அச்சு மாறி பிறத்தல் இறத்தலைச் செய்வித்தும், திரிலோகங்களிலும் போக்குவரவு புரிவித்தும் சம்சார சாகரத்தில் அழுத்தி இன்ப துன்ப போக போக்கியங்களை ஊட்டுவித்து, பக்குவப்படுத்தி அநுக்கிரகிக்கின்றான்.

### குறிப்புரை

1. "அவை" என்றது முதல் சூத்திரத்தில் சொல்லிய "அவை"யைப் போல் சேதனம், அசேதனம் என்ற இருகூற்றுப் பிரபஞ்சத்தையும் குறித்து நின்றது; சேதனப் பிரபஞ்சத்தை மட்டும் அன்று. உலகெலாமாகி- சித்தியார்.

2. இருவினை என்பது இறைவனின் வேண்டுதல் (விருப்பு), வேண்டாமை (வெறுப்பு) என்ற இருவினையையும், உயிரின் நல்வினை தீவினை யென்ற இருவினையையும் குறித்து நின்றது.

3. போக்கு = பிறப்பு, தோற்றம்; வரவு = இறப்பு ஒடுக்கம்.

4. ஆணை, நியதி, ஆக்ஞை, ஒரே பொருளைக் குறிக்கும் பல சொற்கள். ஆணை (Law) = இறை (சிற்) சத்தி.

5. அன்றே = அநாதியே.

6. இறைவன் தனித்து ஏகமாய் நிற்கும் நிலை சிவம் என்றும், பிரபஞ்சத்தோடு ஒன்றாயும், வேறாயும், உடனாயும் நிற்குநிலை சத்தி என்றும், பஞ்சகிருத்தியம் செய்யும் நிலை பதி என்றும் நூல்கள் வழங்குகின்றன.

7. அநாதி சிருஷ்டிக்குச் சிவன் கர்த்தா. அவாந்தர சிருஷ்டிகளுக்குச் சிவன் அநுக்கிரகம் பெற்ற அனந்தேஸ்வரர், ஹிரண்ய கர்ப்பாதியர்கள் கர்த்தாக்களாம்.



8. இச் சூத்திரம் கர்மத்தையும் அதன் காரியமாய போகத்தையும், சிருஷ்டியையும் சொல்ல வந்ததே தவிர பாசத்தைப் பற்றி யல்ல.

### சித்தியார்

உலகெலாம் ஆகி, வேறாய், உடனுமாய், ஒளியாய் ஓங்கி
அலகிலா உயிர்கள் கன்மத்து ஆணையில் அமர்ந்து செல்லத்
தலைவனாய், இவற்றின் தன்மை தனக்குஎய்தல் இன்றித்
நிலவுசீர் அமலனாகி நின்றனன் நீங்காது எங்கும். [தானே

### ENGLISH SUMMARY

This Sutram explains how the emanation of the Universe from Ishvara (Logos) took place and the evolution of the Souls according to the Laws of Nature (Divine Laws).

Under the Eternal and Immutable Divine Law which is called Adi-Shakti (Fohat) as the controlling power behind all forms of energy and which is inseparable from Him, Ishvara emanated this Universe from a portion (Amsam) of His own self and yet remains Himself separate as Puranam (Infinite) unimpaired and unattached with the Universe while at the same time in inseparable and all-pervading union with the Universe. This state of connection between the Ishvara and the Universe is respectively called Abetham (one-ness), Betham (duality) and Betha - betham (union).

By the Law of Attraction (Love) He, the pure spirit (consciousness) enjoins with the Maya (Matter) and brings forth the Universe by his out-breathing (Usvasam) and by the Law of Repulsion (Hate) - He rejects Maya, separates form it and annihilates (Absorbs) the Universe by His in-

breathing (Nisvasam). Under the Law of periodicity of this out-breathing and in-breathing of the Ishvara (Logos), the Universe appears, stays and disappears throughout the eternity which is called His Samsara.

Under the Law of Karma (Action and Re-action) Ishvara as Shakti which is not different from Him makes the Souls (Atman) perform Karma and causes them to undergo the process of evolution by passing through the cycle of births and deaths under the Law of Re-incarnation in all the seven Kingdoms of Nature - I. Elemental Essence I (Akasa, Bhuthasaram), II. Elemental Essence II (Vayu Bhuthasaram) III. Elemental Essence III (Theyu Bhuthasaram), IV. Mineral Kingdom, V. Vegetable Kingom, VI. Animal Kingdom and VII. Human Kingdom - and wandering in the three worlds (Trilokas: i. Bhuloka (Physical world), 2. Bhuvarloka (Astral World) and 3. Swarloka (Mental world), allowing them to experience the fruits of their dual acts (Right - Good and Wrong - Bad) and learn wisdom and finally attain liberation from births and deaths (Moksha - Salvation). This wandering of the soul is called its Samsara Sagaram.

---

## மூன்றும் சுலோகம்

3. (அ) நேதிதோ மமதோத்ரேகா தக்ஷா
பரதிபோதத
ஸ்வாபே நிர்போகதோ போதே போத்திருத்
வாதஸ்தி பனுஸ்தநௌ||

மமதோ த்ரேகாத் = உடம்பின்கண் எனது என்ற அபிமானம் இருப்பதாலும், அக்ஷா பரதிபோததஹ = இந்திரியங்களின் ஒடுக்கத்தை யறிதலானும், ஸ்வாபே



நிர்போகதோ = சுழுத்தியில் போகம் இன்மையாலும், போதே போத்திருவாத் = ஞானத்தால் அறிதலாலும், தநௌ நேதிதோ = தனுவில் (உடலில்) இது அல்ல, இது அல்ல என்று தள்ளுவதாலும், அணுஹ = ஆன்மா, அஸ்தி = இருக்கிறது.

### கருத்து

உடலை எனது என்பதனலும், இந்திரியங்களின் ஒடுக்கத்தை யறிதலானும், சுழுத்தியில் இன்பதுன்ப நுகர்ச்சி இன்மையானும், ஞானத்தால் அறிதலானும், உடலில் இதுவல்ல என்று தள்ளுவதாலும் ஆன்மா என்பது ஒன்றுண்டு.

## மூன்றும் சூத்திரம்

(ஆ) அவதாரிகை

மாயா காரியமாகிய தனுவையும், காணப்பட்ட உடலைக் கொண்டு காணப்படாத உயிரின் உண்மையையும் உணர்த்தியது.

உளதில தென்றலின் எனதுடல் என்றலின்
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படில்
உண்டிவினை யின்மையின் உணர்த்த உணர்தலின்
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா.

### அந்நுவயம்

எனது உடல் என்றலின் ஆன்மா உளது; ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது; ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது; கண்படில் உண்டி வினையின்மையின் ஆன்மா உளது; உணர்த்த உணர்தலின் ஆன்மா உளது; மாயா இயந்திர தனுவினுள் இலதென்றலின் ஆன்மா உளது.

### பிண்டப் பொழிப்புரை

எனது உடல் என்று பிறிதின் கிழமைப்பட உரைத்தலானும், ஐம்புலன்கள் அறிதலானும், ஐம்புலன்களையும் ஒடுக்கி ஒன்று சேர அறிதலானும், சுழுத்தியில் இன்ப துன்ப நுகர்ச்சி, செயல் இன்மையானும், உணர்த்த உணர்தலானும், மாயையின் காரியமாய சூத்திரப்பாவை போன்ற விசித்திரமான இந்த தூலம், சூக்குமம், காரணம், புரியட்டக சரீரங்களை நேதி, நேதி என்று நீக்கிக்கொண்டு போவதாலும், இந்நான்கு தனுக்களுக்கும் வேறாக ஆன்மா என்பது ஒன்று உண்டு என்பது இச்சூத்திரத்தின் திரண்ட பொருளாம்.

### விளக்கவுரை

இந்த சூத்திரம் அறியப்பட்ட புரியட்ட தேகம், மனம், வாக்கு, காயம் ஆகிய நான்கு சரீரங் (தனுக்)களையும் கூறி, அவைகளுக் கப்பாற்பட்ட காணப்படாத ஆன்மாவின் உண்மையை அனுமானப் பிரமாணத்தால் உணர்த்த வந்த சூத்திரமாகும். தூலதேகமே ஆன்மாவெனும் தூலதேகான்மவாதியையும், சூக்கும தேகமே ஆன்மாவெனும் சூக்கும தேகான்மவாதியையும், மனமே ஆன்மாவெனும் காரணதேகான்ம வாதியையும், விஞ்ஞானமே ஆன்மாவெனும் புரியட்ட தேகான்மவாதியையும், யாவும் கூடிய சமுதாயமே ஆன்மாவெனும் சமுகான்மவாதியையும் மறுத்து, அவற்றை யெல்லாம் கடந்து ஆன்மா இருக்கிறதென்பதை ஏதுக்களால் வலியுறுத்தப்படுகிறது.

### தூலதனு (காயம்) Physical Body

க. (அ) தூலதேகான்மவாதியின் வாதம்

வெற்றிலை, பாக்கு, சுண்ணம்பு சேர்ந்தால் சிகப்பு நிறமாக மாறுவது போலவும், ஜலவாயுவும் பிராணவாயு



வும் சேர்ந்து நீர் உண்டாவது போன்றும், பஞ்சபூத சேர்க்கையால் இத்தூல உடல் உண்டாகிறது. நான் உண்டேன், நான் பார்த்தேன், நான் கேட்டேன், நான் நடக்கிறேன், நான் தூங்கினேன் என்பன தூல உடலால் நிகழும் அனுபவங்களாம். என் பெயரைக் கூப்பிட்டால் நான் பிரதிபலிக்கிறேன். ஈரலிலிருந்து பித்தம் சுரப்பது போல், மூளையிலிருந்து எண்ணங்கள் உதிக்கின்றன. மூளை கெட்டால் எண்ணங்கள் தோன்றுவதில்லை. உடல் நசித்தால் பஞ்சபூதங்கள் பிரிந்து போகின்றன. தூல தேகத்தை அன்னமயகோசம் என்பர்; அவத்தை சாக்கிரமமாம். ஆதலால் இந்த தூல உடலே ஆன்மா. இதைத் தவிர ஆன்மா என்பது வேறொன்றில்லை.

(ஆ) மெய்கண்டார் பதில்

எனது புத்தகம், எனது வீடு என்று சொல்லும் போது நான் வேறு, புத்தகம், வீடு வேறு. அது போல் எனது உடல் என்று வேற்றுமைப்பட (பிறிதின்கிழமைப் பொருட்பட) கூறுவதால் நான் வேறு, உடல் வேறு. சொர்ப்பனத்திலும் தூக்கத்திலும் இந்த உடலின் எண்ணம் நமக்கு இல்லை. செத்த பிணத்திற்கு உணர்ச்சியும் செயலும் இல்லை. மயக்க மருந்து உண்ட உடலுக்கு உணர்ச்சியில்லை. ஆவேசம் பிடித்தவர்களுக்கு அந்த உடலுக்கில்லாத சில புதிய அற்புத நிகழ்ச்சிகள் ஏற்படுகின்றன. ஆதலால் இந்த தூல உடலுக்கு அப்பால் உணர்கின்ற ஒரு வஸ்து இருக்கவேண்டும். அதுவே தூல தேகத்தினின்றும் வேறான ஆன்மா.

### சூக்குமதனு (வாக்கு) Astral Body

உ. (அ) சூக்கும (இந்திரிய) தேகான்மவாதியின் வாதம்

சொர்ப்பனம் என்று சொன்னீர்கள். நித்திரையின் போது தூலஉடல் செயலற்றிருந்தாலும் சொர்ப்பன

உலகில் சூக்கும உடலைக் கொண்டு தொழிற்புரிகின்றோம்; இன்ப துன்பங்களை நுகர்கின்றோம். இந்த சூக்கும உடலே ஞானேந்திரிய கர்மேந்திரியங்களுக்கு இருப்பிடம். சாக்கிரத்திலும் கூட இந்த ஐந்து புலன் பொறிகளைக் கொண்டே தூல உடல் விடயங்களை அறிகின்றது. இதில் பிராண மயகோசம் அடங்கும். அவத்தை சொர்ப்பனம். ஆதலால் இந்த சூக்கும (இந்திரிய) உடலே ஆன்மா.

(ஆ) மெய்கண்டார் பதில்

சூக்கும தேகத்தைப் பற்றி நீ சொல்வது சரிதான். ஆனால் ஞானேந்திரியங்களில் ஒரு இந்திரியம் அறிந்த விடயத்தை மற்றொரு இந்திரியம் அறியாது. காது கேட்டதைக் கண் அறியாது; மூக்கு முகர்ந்ததை நாக்கு அறியாது. ஆதலால் மூக்கைப் பிடித்துக்கொண்டு மருந்தை சாப்பிடுகிறோம். ஏனெனில் ஒவ்வொரு இந்திரியமும் ஒவ்வொருவித பூதத்தால் ஆனது. ஒவ்வொரு பூதத்திற்கும் ஒவ்வொருவித தன்மாத்திரை யுளது.

1. செவி, சத்த தன்மாத்திரையிலிருந்து உண்டான ஆகாச பூதத்தால் ஆனது. ஆதலால் அது சத்தத்தை மட்டும் அறியும்.

2. மெய், பரிச தன்மாத்திரையிலிருந் துண்டான வாயு பூதத்தாலானதாதலால் அது பரிசத்தை மட்டும் அறியும்.

3. கண், ரூப தன்மாத்திரையிலிருந் துண்டான தேயு பூதத்தாலானதாதலால் அது ரூபத்தை மட்டும் அறியும்.

4. வாய், ரச தன்மாத்திரையிலிருந் துண்டான அப்பு பூதத்தாலானதாதலால் அது ருசியை மட்டும் அறியும்.



5. மூக்கு, கந்த தன்மாத்திரையிலிருந் துண்டான பிருதிவி பூதத்தாலானதாதலால் 'அது நாற்றத்தை மட்டும் அறியும்.

அவ்வாறே கர்மேந்திரியங்கள் ஐந்தில், ஆகாயத்தின் காரியமாகிய வாக்குவசனிக்க மட்டும் செய்யும்; வாயுவின் காரியமாகிய பாதம் கமனிக்க (நடத்தல்) மட்டும் செய்யும்; அக்கினியின் காரியமாகிய பாணி இடுதல் ஏற்றல் மட்டும் செய்யும்; அப்புவின் காரியமாகிய பாயுறுமலவிசர்ச்சனம் மட்டும் செய்யும்; பிருதுவியின் காரியமாகிய உபத்தம் ஆனந்திக்க மட்டும் செய்யும்.

இவ்வாறு ஞானேந்திரியங்களும் கர்மேந்திரியங்களும் ஒவ்வொன்றும் ஒரே விடயத்தை மட்டும் அறியும். ஆதலால் இந்த ஐந்து பொறி புலன்களையும் ஒன்று சேர்த்து ஒடுக்கி எது அறிகின்றதோ அதுவே சூக்கும தேகத்தினின்றும் வேறான ஆன்மாவாகும்.

**காரணதனு (மனம்-Mental Body)**

௩. (அ) காரணதேகான்மவாதியின் வாதம்

பொறிபுலனைந்தையும் எது ஒடுக்கி அறிகின்றதோ அதுதான் ஆன்மா என்றீர்கள். அப்படி பொறிபுலன்களை ஒன்று சேர்த்து ஒடுக்கி ஒருங்க அறிவது மனம். எப்படியென்றால் புலன்களும், பொறிகளும் ஒவ்வொன்றும் ஒவ்வொருவித பூதத்தாலானதாக யிருக்க, மனம் எல்லா பூதங்களின் சேர்க்கையால் ஆனது. மனோமய கோசம் இதில் அடங்கும். அவத்தை சுழுத்தி. ஆதலால் மனம் ஒன்றே எல்லாவற்றையும் அறிதலால் அதுவே ஆன்மாவாகும்.

(ஆ) மெய்கண்டார் பதில்

ஆம், மனதைப் பற்றி நீ சொல்வது உண்மைதான். ஆனால் கருவி கரணங்களோய்ந்த சுழுத்தியில் மனதின்

சேஷ்டையில்லை. அப்படி யிருந்தும் தூங்கியெழுந்தவுடன் "நான் நன்றாய்த் தூங்கினேன்" என்ற ஓர் இன்ப உணர்ச்சி ஏற்படுகிறது. அந்த நிலையை எது உணர்கிறதோ அதுவே மனத்தின் வேறாய ஆன்மாவாகும்.

புரியட்டதனு (விஞ்ஞானதேகம் - Buddhic Body)

ச. (அ) புரியட்ட தேகான்ம வாதியின் வாதம்

அந்த இன்ப நிலையை உணர்வது தன்மாத்திரை 5, மனம், புத்தி, அகங்காரம் - 3. இந்த எட்டினாலும் ஆகிய புரியட்ட காயமாதலால் அதுவே ஆன்மா. இதில் புத்தி தத்துவத்தாலான விஞ்ஞான மயகோசம் அடங்கும். அவத்தை துரியம்.

(ஆ) மெய்கண்டார் பதில்

புரியட்ட காயத்தைப் பற்றி நீ சொல்வது சரிதான். ஆனால் புரியட்ட காயம் சடமாதலால் அது தானே உணராது. அதை உணரும்படி எது உணர்த்தி நிற்கின்றதோ அதுவே புரியட்ட காயத்தினின்றும் வேறாய ஆன்மாவாகும்.

ரு. (அ) சமூகான்ம வாதியின் வாதம்

மேற்சொல்லிய புத்தி, மனம், வாக்கு, காயம் ஆகிய இவற்றுள் ஒவ்வொன்றே ஆன்மா வென்றல் பொருந்தாது எனக் கூறியது சரிதான். ஆனால் அவற்றுள் ஒன்று குறைந்தவிடத்தும் அறிவு நிகழாமையாலும், அவையெல்லாம் கூடியவிடத்து அறிவு நிகழ்தலாலும் அவை அனைத்தும் கூடிய சமுதாயமே ஆன்மா என்றல் பொருந்தும்.

(ஆ) மெய்கண்டார் பதில்

மேற்கூறிய தனுக்கள் அனைத்தும் சடமாகிய மாயா காரியமாதலால், நிலைத்திருப்ப தின்றிச் சிலகாலம் நின்று



அழிவனவாம். மாயையின் காரியங்களாகிய தத்துவங்களாற் கட்டப்பட்டுப் பொருந்திய சூத்திரப் பாவை போன்ற விசித்திரமான இந்தத் தனுக்களை யெல்லாம் ஒவ்வொன்றாக "இது ஆன்மா அல்ல. இது ஆன்மா அல்ல" (நேதி, நேதி) என்று நீக்கிக்கொண்டே போக இறுதியில் தத்துவங்களுக்கு வேறாய் எஞ்சி நிற்பது எதுவோ அதுவே ஆன்மா; அது இத்தனுவில் குடிகொண்டிருக்கிறது என்பதை அறிவாய்.

சு. (அ) சூனியான்ம வாதியின் வாதம்

வெங்காயத்தோலை உரித்துக்கொண்டே போனால் கடைசியில் ஒன்றுமில்லாமல் வெறும் வெளியாய் சூனியமாக யிருக்கிறது. அதுபோல் தத்துவங்களாலாகிய தனுக்களை இது அல்ல, இது அல்ல என்று நீக்கிக் கொண்டே போனால் இறுதியில் சூனியத்தில் போய் முடிகின்றது. ஆதலால் சூனியமே ஆன்மா என்பதில் என்ன இழுக்கு?

(ஆ) மெய்கண்டார் பதில்

தனுக்களின் தத்துவங்களை இது ஆன்மா அன்று, இது ஆன்மா அன்று என்று ஒவ்வொன்றாக விட்டு நீக்கியும், நீங்கிய பின்னரும், ஒன்றும் காணப்படவில்லை என்று அறியும் அறிவு ஒன்று உண்டு. அவ்வறிவே ஆன்மாவாகும்.

குறிப்புரை

1. இச்சூத்திரம் தனுக்களைப் பற்றிச் சொல்ல வந்ததேயன்றிப் பிராணனையும், பிரம்மத்தைப் பற்றியும் அல்ல. அனுவசியமாக அவை நுழைக்கப்பட்டு வலிந்து பொருள் கொள்ளப்பட்டிருக்கிறது.

2. மாயா = மாயையால் உண்டாக்கப்பட்ட; விசித்திரமான.

3. தனு, சரீரம், உடல், கோசம், தேகம் ஒரே பொருளைக் குறிக்கும் பல சொற்கள்.

4. வாக்கில் சுவை என்ற ஞானேந்திரியமும், வசனம் என்ற கர்மேந்திரியமும் அடங்கி யிருத்தலால் வாக்கு என்ருல் இந்திரிய சரீரத்தைக் குறிக்கும். இந் திரியங்கள் சூக்கும உடலில் நிலைகொண்டிருக்கின்றன. அது காமசரீரம் எனவும் வழங்கப்படுகிறது.

5. "நேதி நேதி" என்ற தத்துவ நிக்கிரகத்தை ஓர் உபமானத்தால் கூறுவதுண்டு. பல ஆடவர்களை வரிசையாக நிற்க வைத்து, "இதில் யார் உன் புருடன்?" என்று ஒரு நங்கையை வினவ, தன் கணவரல்லாத மற்ற ஆடவர்களைக் காட்டும்போது இவர் அல்ல, இவர் அல்ல என்று சொல்லிக் கொண்டே வந்த மங்கை, தன் கண வரைக் காட்டும்போது, நாணமுற்று வெட்கிப் புன்முறுவ லுடன் தலை குனிந்து மௌனமாக நிற்பது போன்று, ஆத்ம விசாரம் செய்யும்போது தத்துவங்களை யெல்லாம் ஒவ்வொன்ருக நேதி, நேதி என்று நீக்கிக் கொண்டேவர இறுதியில் தன்னைத் தான் உணர்ந்து "மோன மென்பது ஞான வரம்பு" ஆக நிற்பர்.

6. தூல உடல் கண்ணுக்குப் புலனுகாத எண் ணிறந்த ஜீவ அணுக்களால் ஆயது. ஆதலால் இந்த சமஷ்டி உடலுக்கே "நான்" என்ற ஒரு தடத்த உணர்வு உண்டு. ஆகவேதான் சாதாரண மக்களுக்கு இத்தூல தேகமே நான் என்ற எண்ணமும் அபிமானமும் ஏற்படுகிறது.

7. மனோ வாக்குக் காய சரீரங்களில் சஞ்சரிக்கும் உயிருக்கு சீவன் (Personality) என்றும், புரியட்ட காய சரீரத்தில் குடிகொண்டிருக்கும் உயிருக்கு ஆன்மா (Ego) என்றும், பஞ்ச கஞ்சுக சரீரத்தில் நிலைகொண்டிருக்கும் உயிருக்குப் புருடன் (Monad) என்றும் பெயர்.



கருத்துரை

ஆன்மா மாயாகாரிய (தத்துவ)ங்களால் ஆகியதும் அதிவிசித்திரமான சூத்திரப்பாவை போன்றதுமான புரியட்டதேகம், மனம், வாக்கு, காயம் இவைகளுக்கு அப்பாற்பட்டது; ஒன்றுக்குள் ஒன்ருய் இருக்கும் இச் சரீரங்களாய பல அடுக்கு வீட்டில் அது குடியிருக்கிறது. ஆத்ம விசாரணையினுல் தன்னைத் தானேஉணரவேண்டும்.

சித்தியார்

உயிர்எனப் படுவது இந்த உடலின்வேறு உளதாய் உற்றுச்
செயிர்உறும் இச்சா ஞானச் செய்திகள் உடைய தாகிப்
பயிர்உறும் இன்பத் துன்பப் பலங்களும் நுகரும்; பார்க்கில்
துயிலொடும் அஞ்சு அவத்தைப்படும் உண்மை துரியா தீதம்.

ENGLISH SUMMARY

This Sutram proves the existence of Soul (Atman) apart from the various bodies - Gross and Subtle, 1. Physical Body (Sthula Shariram), 2. Astral body (Shukma Shariram), 3. Mental body (Karana Shariram - Causal body) and 4. Buddhic body (Puriatta Shariram) in which it dwells. These are also classified as Annamaya Kosam (Food Sheath), Pranamaya Kosam (Breath or vitality sheath) Manomaya Kosam (Mind sheath) and Vignanamaya Kosam (Wisdom sheath). Sheath means cover.

Materialists say that apart from this physical body there is no such a thing as soul. The body is formed by the aggregation of five elements - Earth, Water, Fire, Air and Ether. As the liver produces bile, the brain produces thoughts and the body functions. When the body decays, the elements separates and the body ceases functioning i.e., it dies and there ends the matter. So, the body itself is soul.

Another school of thought says that during the dream state while we are sleeping and the physical body lying on the bed, we are living an actual life in the dream world (as we do in our waking state in the physical world) with a Shukma Shariram (Subtle Astral body) which is composed of centres of senses and actions (Gnanendrias and Karmendrias). Even in the waking state we perceive things with the help of these Indrias only. So, this Shukma Shariram (Astral body) is the soul.

Another school of thought says that of these sense organs, each one can perceive only one kind of sensation. Eye can perceive only sight and not sound; nose only smell, not taste; so on and so forth. But mind perceives simultaneously all the senses. Without mind, the sense organs cannot function. So the mental body is the soul.

Another school of thought says that when we wake from a deep sleep (Sushupti) where there is no functioning of the mind, we have a feeling of pleasant calmness. It is the Buddhic body (Puriatta Sharira composed of Manas, Buddhi and Ahankara and five Tanmatras - Touch, Taste, Sight, Smell and Sound - the permanent atoms of the five elements ether, air, fire, water and earth, which perceives that sensation. So, the Buddhic body is the soul.

Meikandar says that the Buddhic body which is of Asat i.e. insentient matter cannot perceive the things by itself but can perceive only with the help of another agent. So, that agent only is the true soul (Atman).

Another set of school says that in the absence of even one of these above-said bodies, we cannot perceive things. So, the totality of these various bodies is the soul.



Meikandar says that when we analyse all these bodies made up of various tattvas one by one and reject them all as not-self, that which remains at the end is the enquirer himself which is verily the real self (Atman) which dwells in this wonderful mechanism composed of various Shariras and Kosams made up of Maya (Matter).

---

## நான்காம் சுலோகம்

4. (அ) ஆத்மாந்த: கரணாதந்யோப் யந்விதோ
மந்திரிபூபவத்|
அவஸ்தா பஞ்ச கஸ்தஸ்ஸயாந் மலருத்த
ஸ்வதிருக்கிரிய:||

ஆத்மா = ஆன்மா, அந்தக் கரணாத் = அந்தக்கரணங்களுக்கு, அன்யோபி = வேறாயினும், மந்திரிபூபவத் = அமைச்சும் அரசும்போல, அன்விதஹ = (அந்தக்கரணங்களோடு) கூடினவனையும், மலருத்த ஸ்வதிருக் கிரியஹ = (ஆணவ) மலத்தால் மூடப்பட்ட ஞானக் கிரியைகளையுடையவனாய், அவஸ்தா பஞ்ச கஸ்தஹ = அவத்தை ஐந்தினும் இருப்பவன், ஸ்யாத் = ஆகின்றான்.

கருத்து

ஆன்மா அந்தக் காரணங்களுக்கு வேறாயினும் ஆணவ மலத்தால் மறைப்புண்ட ஞானக்கிரியைகளையுடையவனாய் அமைச்சரோடு கூடிய அரசன் போல அந்தக்கரணங்களோடு கூடினவனாய் ஐந்து அவஸ்தையில் நிற்பவனாவன்.

## நான்காம் சூத்திரம்

(ஆ) அவதாரிகை

ஆணவமல காரியத்தையும், கேவலாவத்தையில் சகச மலத்தோடு கூடியிருந்த ஆன்மா, சகலாவத்தையில் கரணங்களுடன் கூடியடையும் அவஸ்தாத்திரயங்களையும் உணர்த்தியதாகும்.

அந்தக் கரணம் அவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா(து)
அமைச்சரச யேய்ப்பநின் றஞ்சவைத் தைத்தே.

அந்நுவயம்

ஆன்மா அந்தக்கரணம் அவற்றின் ஒன்று அன்று. சகசமலத்து உணராது ஆன்மா அமைச்சு அரசு ஏய்ப்ப அவை சந்தித்து நின்று ஐந்து அவைத்தைத்து.

பிண்டப் பொழிப்புரை

ஆன்மா கடைசி கருவியாகிய பஞ்ச கஞ்சுக சரீரத்தினும் வேறானது. அநாதியே ஆணவ மலத்தால் கட்டுப்பட்டு, உணர்வுஅற்றிருந்த ஆன்மா மந்திரிகளோடு கூடிய அரசன் போல (மேற்கூறிய) தனு, கரண, புவனங்களைக் கூடி சாக்கிரம் முதலிய ஐந்து அவத்தைகளை யடைந்து போக்கியத்தை நுகரா நிற்கும்.

விளக்கவுரை

அந்தக்கரணம் என்றால்:—அந்தம் = கடைசி, கரணம் = கருவி. இது கடைசியாக இருக்கப்பட்ட காலம், நியதி, கலை, வித்தை, அராகம் ஆகிய ஐந்தால் ஆய பஞ்ச கஞ்சுக சரீரத்தைக் குறித்து நின்றது.



### அந்தக்கரணான்ம வாதியின் வாதம்

மேலைய மூன்றும் சூத்திரத்தில் புரியட்ட காயத்தை உணரும்படி எது உணர்த்துகின்றதோ அதுவே ஆன்மா என்றீர்கள். அப்படி அந்த விஞ்ஞான மய கோசத்தை உணரும்படி உணர்த்துவது அந்தக்கரணமாகிய இந்த கலாதி பஞ்ச கஞ்சுகசரீரமாகையால் இந்த அந்தக்கரணத்தையே ஆன்மா என்று ஏன் சொல்லக் கூடாது? இதில் ஆனந்தமயகோசம் அடங்கும்; அவத்தை துரியாதீதம்.

### மெய்கண்டார் பதில்

பஞ்ச கஞ்சுக சரீரமும் சடமாதலால் அதற்கு உணர்வு கிடையாது. அரசனுக்காக அவனை யடுத்திருக்கும் அமைச்சன் விடும் கட்டளையை, அரசனுக்கும் அமைச்சருக்குமுள்ள நெருங்கிய தொடர்பால், அரசக் கட்டளை என்பது போல, அந்தக்கரணத்திற்கும் ஆன்மாவிற்குமுள்ள நெருங்கிய சம்பந்தா சம்பந்தத்தாலும், அவை ஒன்றுபட்டு நிற்றலானும், சிந்தையை சீவன் என்று உபசாரமாக அழைக்கப் பட்டாலும் உண்மையில் உணர்த்தி நிற்பது சித்துப் பொருளாய ஆன்மாவேயாதலால் அந்தக்கரணத்திற்கும் வேறானது ஆன்மா.

ஆன்மாக்கள் செம்பிற் களிம்பு போலவும், நெல்லின் உமி போலவும் அநாதியே சகச மலம் என்று அழைக்கப்படும் ஆணவ மலத்தால் மறைக்கப்பட்டு இச்சை (Will), அறிவு (Wisdom), செயல் (Activity) மங்கி, சுழுத்திபோல் கிடந்தன. இந்த நிலைக்குத்தான் கேவலாவத்தை எனப் பெயர். ஆடையிலுள்ள அழுக்கை உவர்மண்ணாகிய அழுக்கைக் கொண்டு நீக்குவதுபோல், உயிர்களின் இந்த ஆணவ மலத்தைப் போக்கி அறிவு, இச்சை, செயல்களை பிரகாசிப்பிக்கச் செய்வதற்கு, மாயா மலத்தாலாகிய தனு, கரணங்களுடன் கூட்டுவித்துப் புவனத்தில் புக்கு

வித்து, இன்ப துன்ப போக போக்கியங்களை அனுபவிப்பதன் மூலம் அனுபவ அறிவைப் பெறும்படி இறைவன் சங்கற்பித்துள்ளான். இந்நிலைக்குத்தான் சகலாவத்தை எனப் பெயர். இவ்வாறு கேவலாவத்தையிலிருந்து சகலாவத்தையில் இறங்குவதைத்தான் (Descent into the Physical Matter) பிரவிருத்தி மார்க்கம் Involution) எனச் சொல்லப்படுகிறது.

எவ்வாறு ஓர் அரசன் தனது மந்திரிப் பிரதானி முதலிய பரிவாரங்களுடன் தேச பரிபாலனம் செய்கின்றானோ அவ்வாறே ஆன்மா தனு கரணங்களைத் துணை கொண்டு புவனத்திற்போந்து, போகத்தை நுகர்கின்றது. அரச காரியங்கள் அரசனை யடுத்துள்ள அமைச்சர்கள் மூலம் நடைபெறுவதுபோல் ஆன்மாவின் இச்சை, அறிவு, செயல்கள் அதை அடுத்துள்ள அந்தக்கரணத்தின் மூலம் தொழிற்படுகின்றன. மந்திரி முதலிய பரிவாரங்களுடன் பவனி சென்ற அரசன் தன் அரண்மனைக்குத் திரும்புங்கால், வாயில்தோறும் நிறுத்த வேண்டியவர்களை நிறுத்திக் காவலும் வைத்து, அவர்களைப் பிரிந்து அந்தப்புரத்திற்குத் தனித்துச் செல்வது போல் ஆன்மாவும் தத்துவங்களுடன் கூடிப் பிரியும்.

இவ்வாறு ஆன்மா தனு, கரண, புவனத்தைக் கூடிப் போகத்தை நுகர்ந்து பிரியும் முறையில் சாக்கிரம், சொர்ப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்ற ஐந்துவித அவத்தைகளை அடையா நிற்கும்.

சாக்கிரமாம் நுதலினில் இந்திரியம் பத்தும்
சத்தாதி வசனாதி வாயு பத்தும்
நீக்கமில் அந்தக்கரணம் புருடனொடு
நின்றது முப்பானைந்தும் நிலவும் கண்டத்து



ஆக்கிய சொப்பனம் அதன்கிவாயு பத்தும்
அடுத்தன சத்தாதி வசனாதி யாக
நோக்கு கரணம் புருடனுடனே கூட
நுவல்வர் இருபத்தைந்தாம் நுண்ணியோரே. 1

சுழுத்தி இதயந்தன்னில் பிராணன் சித்தம்
சொல்லரிய புருடனுடன் மூன்றதாகும்
வழுத்திய நாபில் துரியம் பிராணனொடு மன்னு
புருடனுங் கூட வயங்கா நிற்கும்
அழுத்திடும் மூலம்தன்னில் துரியாதீதம் அதனிடையே
புருடன் ஒன்றி அமரும் ஞானம்
பழுத்திடும் பக்குவர் அறிவர் அவத்தை ஐந்தில்
பாங்கு பெறக்கருவி நிற்கும் பரிசுதானே. 2

—தாயுமானர்

கருத்துரை

ஆன்மா அந்தக்கரணமாகிய பஞ்ச கஞ்சுக சரீரத்தினும் வேறானது. அநாதியே கேவலாவத்தையில் ஆணவ மலத்தினால் மூடப்பட்டு இச்சை, அறிவு, செயல் மறைப்புண்டிருந்த ஆன்மா, அழுக்கைக் கொண்டு அழுக்கை நீக்குவதுபோல், மாயா மலத்தாலாய தனு, கரண, புவனத்தைக் கூடி, அமைச்சுடன் கூடிய அரசன்போல் சகலாவத்தையில் போகத்தை நுகரும்போது சாக்கிரம் முதலிய ஐந்து அவத்தைகளை அடையா நிற்கும்.

குறிப்புரை

1. அந்தக்கரணம், புற அந்தக்கரணம் அக அந்தக்கரணம் என இருவகைத்து. மூன்றும் சூத்திரத்தில் புற அந்தக்கரணத்தைச் சொல்லி இச் சூத்திரத்தில் அக அந்தக்கரணம் சொல்லப்பட்டது.

2. அவை = முதலாவது, இரண்டாவது சூத்திரங்களில் சொல்லப்பட்ட "அவை"யின் பொருள் போன்றே இந்த "அவை"யும் சேதன சேதனப் பிரபஞ்சத்தை - முக்கியமாக முதல் நான்கு சூத்திரங்களிலும் சொல்லப்பட்ட தனு, கரண, புவன, போகத்தைக் குறித்து நின்றது.

3. சகசமலம், ஆணவமலம், மூலமலம் - ஒரே பொருளைக் குறிக்கும்; சகசமலம் = உடன் பிறந்த மலம் (சக = உடன், ஜ = பிறந்த). வியாபகமான ஆன்மாவை அணுவாக்கினதால் ஆணவம் எனப் பெயர் வந்தது. மூலமலம் = ஆதியிலுள்ள மலம். இதன் காரியம் = மோகம், மதம், இராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம்.

4. உயிரின் உணர்வு (Consciousness) கருவிகளுடன் கூடித் தொழிற்படும் நிலைக்கு அவத்தை எனப்படும். உண்மையில் அவத்தைகள் 7. துரியாதீதத்தில் 3 அவத்தைகள் அடங்கும். நாம் சம்பந்தப்பட்ட வரையில் ஐந்தே தொழிற்படுகின்றனவாதலால், ஐந்து மட்டும் இங்கு கூறப்பட்டுள்ளது.

5. இச்சூத்திரம் மேலைச் சூத்திரத்தோடு தொடர்புடையது. இரண்டிலும் ஆன்மாவின் பொது இலக்கணம் கூறப்பட்டுள்ளது. துரியம் என்றால் நான்கு.

6. கஞ்சுகம் = சட்டை - Sheath. உண்மையில் சரீரங்கள் 7. ஆனால் நாம் சம்பந்தப்பட்ட வரையில் ஐந்தே. அதற்கு மேலுள்ளது விந்து, நாத சரீரங்கள்.

சித்தியார்

உணர்வன கரணம் என்னில் ஒன்றையொன்று
    உணரா, வெவ்வேறு
அனைதரும் செயல்கள் நான்கும் அறிந்து
    அவையடக்கி யாக்கிப்



புணரும்உட் கருவி யாக்கிப் புறக்
    கருவியினும் போக்கி
இணைதரும் இவற்றின் வேறாய் யான்எனது
    என்பது ஆன்மா.

### ENGLISH SUMMARY

This Sutram explains how and why the Soul (Atman) came into contact with the various bodies and the Universe.

In the last part of the previous Sutram it was stated that the agent which makes the Buddhic body to perceive things is the Soul. Another school of thought says that agent is Antakaranam (literally means last instrument) composed of Kalai (Activity - Mind), Buddhi (Wisdom) and Aragam (Will) circumscribed by Kalam (Time), Maya (Space) and Niyathi (Causation) which is also called as Pancha-Kanchuga Shariram (Atmic body) and is the true Soul (Atman).

Meikadnar says that this Antakaram (Pancha Kanchuga Shariram) also which is of Asat and Achit (Insentient matter) is not Atman but only a sheath as its name implies (Kanchugam - Sattai i.e., covering) and serves as a vehicle for the Atman to function in the higher plane (Janoloka - Atmic plane); But owing to its proximity to the Atman like the Cabinet Ministers to the King, it is identified with Atman as the Prime-Minister is identified with his King.

Though the real nature of the Atman is Omnipresent, Omniscient and Omnipotent, because it is in conjunction with the innate impurity (Anavamalam, Egoism), its faculties and capacities had been limited and it became unconscious. In order to overcome this Anavamalam and regain its true nature the Self is clothed in all these various bodies and sent to this Universe of various planes to take birth in all

the seven Kingdoms of Nature (Involution) to undergo evolution and gain experience and knowledge and ultimately become perfect.

As the King knows his state affairs through his Ministers, etc. so also is the relation of the Atman with its bodies and the Universe. When it lives in this world, it undergoes five kinds of Avasthas (states of consciousness) Jagram (waking state) Swarpanam (Dreaming state), Sushipti (deep sleep state), Thuriam (sub-conscious state) and Thuriyatheetham (Super conscious state).

---

## ஐந்தாம் சுலோகம்

5. (அ) விதந்தி யக்ஷாணி பும்சார்த்தாந்
நஸ்வயம் சோபி சம்புநா|
தத்விகாரீ சிவச்சேந் நகாந்தோ
யோவத்சதம் நயேத்||

அக்ஷாணி = இந்திரியங்கள், அர்த்தான் = விஷயங்களை, பும்ஸா = புருடனல், விதந்தி = அறிகின்றன, ஸக அபி = அவனும், ஸ்வயம் = தானே, ந = அறிவதில்லை. சம்புநா = சிவனல் அறிகின்றான். தத் = அதனல், சிவஹ = சிவன், விகாரிசேத் = விகாரியாவானே யெனின், ந = இல்லை. காந்தஹ = காந்தக்கல், அயோவத் = இரும்பை சேட்டிப்பதுபோல். ஸஹ = அந்தசம்பு, தம் = அந்த ஆத்மாவை, நயேத் = சேட்டிப்பிக்கின்றான்.

### கருத்து

இந்திரியங்கள் ஆன்மாவினல் விடயங்களை அறிகின்றனவே தவிர தாமே அறியமாட்டா. ஆன்மாவும் தானே அறிவதில்லை; சிவனல் அறிகின்றது. அதனல்



சிவன் விகாரியாவானே யெனில், ஆவதில்லை. காந்தக்கல் இரும்பை சேட்டிப்பதுபோல் சிவன் ஆன்மாவை சேட்டிப்பிக்கின்றான்.

## ஐந்தாம் சூத்திரம்

(ஆ) அவதாரிகை

ஆன்மாவின் முன்னிலையில் தனு கரணங்களும், இறைவன் சந்நிதியில் சேதன சேதன புவனங்களும் தொழிற்படும் முறையை உணர்த்தியது.

விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்தறிந் தறியா ஆங்கவை போலத்
தாந்தம் உணர்வின் தமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.

### அந்நுவயம்

காந்தம் கண்ட பசாசத்தவை போல், விளம்பிய உள்ளத்து மெய், வாய், கண், மூக்கு, (செவி) அளந்து அறியாதறிந்த ஆங்கு, அவைதாம் தமிஅருள் தம் உணர்வின்.

### பிண்டப் பொழிப்புரை

காந்தத்தின் முன்பு இரும்பு அசைவது போன்று மேற்கூறிய ஆன்மாவின் முன்னிலையில் மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய ஞானேந்திரியங்கள் தொழிற்படுகின்றன; அதாவது விடயங்களை அறியாதறிகின்றன. அதுபோல் இறைவனின் சங்கற்பமாகிய அருட்சத்தியின் சந்நிதி மாத்திரையானே சேதன சேதன புவனங்கள் காந்தத்தின் முன்னுள்ள இரும்புபோல் காரியப்படுகின்றன. காந்தத்தின் முன்பு இரும்பு அசைகின்றதே யொழிய காந்தம் அசைவதில்லை. அதுபோல ஆன்மா

வின் முன்னிலையில் இந்திரியங்கள் தொழிற்பட்டாலும் ஆன்மா சலனமடைவதில்லை. அவ்வாறே இறைவன் சந்நிதியில் பிரபஞ்சங்கள் காரியப்பட்டாலும் இறைவன் நிர்விகாரியாவன்.

விளக்கவுரை

பிரபஞ்சம் காரியப்படும் முறையை ஒவ்வொரு நூலும் ஒவ்வொருவிதமான உவமானத்தால் கூறி யுள்ளது. அவை வருமாறு :—

1. பூரணச் சந்திரன் முன் கடல் பொங்குவது போல.

2. ஆடவர் முன்னிலையில் பெண்களுக்கு இன்பம் ஜனிப்பது போல.

3. சூரியன் கதிர்முன் பூக்கள் மலர்வதுபோல்.

4. காந்தத்தின் முன் இரும்பு அசைவது போல.

சிவஞான போதத்தில் எடுத்தாளப்பட்ட நான்காவது உவமானமே மிக்க பொருத்த முடைத்து. இதில் உபமேயத்திற்கும் உபமானத்திற்கும் அநேக ஒற்றுமைகளைக் காணலாம். அவை யாவன :—

1. காந்தமும் இரும்பும் ஒரே இனம் - கனிப் பொருள்கள். பதியும் பசுவும் அந்நியமின்மை - சச்சிதானந்த வஸ்து.

2. காந்தத்தை சார்ந்த இரும்பும் காந்த சக்தியை அடைகிறது. பதியை சார்ந்த பசுவும் பதித் தன்மையடைகிறது.



3. காந்தத்தின் முன் இரும்பு அசைகிறது. காந்தம் அசைவதில்லை. பதியின் முன் புவனம் காரியப் படுகிறது. பதி நிர்விகாரி.

4. காந்தம், இழுக்கும் சத்தி, இரும்பு மூன்றும் முறையே பதி, அருட்சத்தி, புவனம் மூன்றையும் குறிக்கிறது.

இந்த சூத்திரத்தின் மற்றொரு சிறப்பு யாதெனில் தூல உபமானத்தைக் கொண்டு சூக்கும உபமேயத்தையும், அந்த சூக்கும உபமேயத்தையே உபமானமாகக் கொண்டு காரண உபமேயத்தையும் விளக்குவதாகும்.

| | உபமானம் | உபமேயம் |
|---|---|---|
| 1. | காந்தக்கல் + இரும்பு | ஆன்மா + இந்திரியங்கள் |
| 2. | ஆன்மா + இந்திரியங்கள் | இறைவன் + பிரபஞ்சம் |

ஞானேந்திரியங்களான மெய், வாய், கண், மூக்கு, செவி விடயங்களை அளந்து அறிகின்றன வென்பது மூன்றும் சூத்திரத்தில் சொல்லியவாறு ஒவ்வொரு இந்திரியமும் ஒவ்வொரு வித பூதத்தால் ஆயது. ஒவ்வொரு பூதத்திற்கும் ஒரு அளவு (Wave-length of Vibration) உண்டு. அதைத்தான் தன் மாத்திரை என்பது (தன் என்பது இறைவனைக் குறிக்கிறது, மாத்திரை என்றால் அளவு) ஒவ்வொரு பூதத்திலும் இறைவனின் அசைவு இருக்கிறது. 'அணுதொறுங் கரந்தே அசைந்திடும் அரன்'; 'அவனின்றி ஓர் அணுவும் அசையாது' என்பது ஆப்தர் வாக்கியம். ஒவ்வொரு அசைவின் அளவிற்கு ஒரு பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது; அதுதான் தன்மாத்திரை. அந்த மாத்திரை (அளவு)கள் கீழ்வருமாறு :—

ஞானேந்திரியங்கள்

| புலன் | பூதம் | தன்மாத்திரை |
|---|---|---|
| மூக்கு | பிருதிவி | நாற்றம் |
| வாய் | அப்பு | சுவை |
| கண் | தேயு | ஒளி |
| மெய் | வாயு | ஊறு |
| செவி | ஆகாசம் | ஓசை |

கர்மேந்திரியங்கள்

| | | |
|---|---|---|
| வாக்கு | ஆகாசம் | வசனம் |
| பாதம் | வாயு | கமனம் |
| பாணி | தேயு | தமனம் (தானம்) |
| பாயுரு | அப்பு | விசர்க்கம் |
| உபத்தம் | பிருதிவி | ஆனந்தம் |

குறிப்பு:—ஓர் இந்திரியம் அறிவதை மற்றொன்று அறியாது. ஓர் இந்திரியம் செய்வதை மற்றொன்று செய்யாது.

எப்படி ஐம்புலன்களும் விடயங்களை அறியாதறிகின்றன வென்பதை சாந்தோக்கிய உபனிஷத்தின் 6-வது சாகை, 7-ம் பிரிவு முதல் சுலோகத்தில் புருடன் பார்க்காமல் பார்க்கின்றான், கேட்காமல் கேட்கின்றான், முகராமல் முகருகின்றான், ருசிக்காமல் ருசிக்கின்றான், பரிசிக்காமல் பரிசிக்கின்றான், நினையாமல் நினைக்கின்றான், அறியாமல் அறிகின்றான் எனக் கூறப்பட்டிருக்கிறது.

இதைத்தான் சாங்கியமும் கூறுகின்றது. சாங்கிய நூல்படி தத்துவங்கள் 25. அவையாவன: பிரகிருதி1, புத்தி-1, அகங்காரம்-1, மனம்-1, தன்மாத்திரைகள்-5, பூதங்கள் - 5, ஞானேந்திரியம் - 5, கர்மேந்திரியம்-5, புருடன்-1 ஆக மொத்தம் (25) இருபத்தைந்து.



சாங்கிய தத்துவங்கள் - 25 தோன்று முறை




சாங்கிய நூல் தத்துவப்படி ஆடவன் முன்னிலையில் பெண்களுக்கு இன்பம் ஜனிப்பதுபோல், புருடன் முன்னிலையில் அவ்யக்த முக்குண பிரகிருதியில் சலனம் ஏற்பட்டு முக்குணங்கள் வியக்தமாகி (வெளிப்பட்டு) அகங்காரம், புத்தி, மனம், தன்மாத்திரைகளும், பூதங்களும், ஞானேந்திரிய, கர்மேந்திரியங்களும் உற்பத்தியாக இப்பிரபஞ்சம் தோன்றிற்று. பிரபஞ்சத்தின் எல்லா செயல்களும் பிரகிருதியின் காரியங்களே. குடத்தின் நீர் கலக்குற்றபோது அதில் பிரதி பிம்பித்த சந்திர பிம்பம் அசைந்தாலும் உண்மைச் சந்திரன் சலனமுறுவதில்லை. அதுபோல் மூலப்பிரகிருதி மாயா காரியமாகிய இப்பிரபஞ்சம் விகாரப்பட்டாலும் புருடன் சலனமற்று சாக்ஷிமாத்திரையாய் நிற்பன். இதை உணர்வதே முத்தி என்பது சாங்கிய தத்துவத்தின் சித்தாந்தம். சாங்கியத்தில் கர்த்தாவாகிய கடவுளைப் பற்றிக் கூறப்படவில்லை. இருந்தும் சைவ சித்தாந்தத்திற்கு சாங்கிய சித்தாந்தம் அடிப்படையாக அமைந்துள்ளது என்பதை மறந்துவிட

லாகாது. வேதத்தின் ஞான காண்டம் ஆறு அங்கங்(தரிசனங்)களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அந்த ஆறு தரிசனங்களில் சாங்கியமும் ஒன்று என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். கீதையில் பகவான் இதைத்தான் "சாங்கியம் வேறு; யோகம் வேறு" என்று அறியாதார்தான் கூறுவர் என்று அருளி யிருக்கிறார். இதைத்தான் "விளம்பிய உள்ளத்து மெய், வாய், கண், மூக்கு, செவி அளந்து அறியாதறிகின்றன" வென்று இச் சூத்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

இறைவன் பஞ்சகிருத்தியங்களை எப்படிச் செய்கின்றான் என்பதை நூல்கள் இரண்டு விதமாகக் கூறுகின்றன :—

1. தனது சங்கல்ப மாத்திரையான் செய்கின்றான்,
2. அவனுடைய சந்நிதானத்தில் எல்லாம் நடைபெறுகின்றன என்பதாம்.

1. சங்கல்ப மாத்திரையான் செய்வது என்பது, ஓர் சிற்பி ஒரு சிலையைச் செய்வதற்கு முன்பு, அல்லது ஒரு சித்திரக்காரன் ஒரு ஓவியத்தை வரைவதற்கு முன்பு, அல்லது ஒரு கொத்தன் (Architect) ஒரு கட்டடத்தைக் கட்டுவதற்கு முன்பு அவைகளைப் பற்றிய விவரங்களைத் தங்கள் மனதில் கற்பனை செய்துகொண்டு, அதற்கான ஒரு படத்தை (Sketch)யும் வரைந்து வைத்துக்கொண்டு தான் பிறகு தங்கள் வேலையைத தொடங்குவர். அது போல் இறைவன் இந்தப் பிரபஞ்சங்களை சிருஷ்டிப்பதற்கு முன்பு அவைகளைப் பற்றித் தனது உணர்வில் (Consciousness) சங்கல்பித்துக்கொள்கின்றான். அதைத் தான் ஈஸ்வர சங்கல்பம் (Divine Ideation) என்பது. அவனுடைய சங்கல்பம்தான் இப்பிரபஞ்சத்தின் சேதனா சேதனப் பொருட்களின் நாம ரூபங்களாகும். அவனது



சங்கல்பம் நின்றுவிட்டால் பிரபஞ்சம் மறைந்துவிடும். எதைப்போலென்றால் ஓர் இந்திர ஜாலக்காரன்போலும் அவன் காட்டும் இந்திரஜால கண்கட்டு வித்தைகள் போன்றுமாம். இதைத்தான் சங்கரர் பிரபஞ்சம் ஒரு மாயை (Illusion) என்றார்.

2. இறைவனின் சந்நிதானத்தில் நடைபெறுகின்றதென்பது மேற்சொல்லியவாறு ஒரு கொத்தன் (Architect) கட்டப்போகும் கட்டடத்தைப் பற்றிய விவரங்களைக் கற்பனை செய்துகொண்டு, ஒரு படமும் (Plan) வரைந்து, அதற்குரிய திட்டத்தை(Estimate)யும் போட்டுக்கொடுத்து விடுகிறான். அதை வைத்துக்கொண்டு இன்ஜினியர்களும், சூப்பர்வைசர்களும், ஓவர்சீயர்களும், மேசன்களும், மற்றுமுள்ள சித்தாட்களும் சேர்ந்து அந்தக் கொத்தன் மேற்பார்வையின்கீழ் அக்கட்டடத்தைக் கட்டி முடிப்பது போன்று.

அல்லது ஓர் அரசனின் மந்திரிகள். கவர்னர்கள், கலெக்டர்கள், தாசீல்தார்கள், ரெவின்யூ இன்ஸ்பெக்டர்கள், கிராம மணியக்காரர்கள், கணக்கப்பிள்ளைகள், தோட்டித்தலையாரிகள் முதலிய அரசாங்க சிப்பந்திகள் அரசியல் திட்டப்படி அரசன் ஆணையை மேற்கொண்டு தேசத்தைப் பரிபாலனம் செய்வது போன்றும்.

அவ்வாறே இறைவன் தான் சிருஷ்டிக்கப்போகும் பிரபஞ்சத்தின் விபரங்களை முதலில் சங்கல்பித்துக்கொள்கிறான். பிறகு அவன் ஆணைப்படி அனுசதாசிவர்கள். அனந்தீஸ்வரர்கள், மந்திரேஸ்வரர்கள், பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் முதலிய பல கடவுளர்களும், தேவேந்திரன் முதல் சிறு கிராம தேவதையுள்பட முப்பத்து முக்கோடி தேவர்களும், முனிவர்களும், மகரிஷிகளும். அவன் சங்கல்பத்தைக் கொண்டு நடத்துகின்றனர். இறைவன் அவர்களை அதிட்டித்து நின்று பஞ்சகிருத்தியங்களைச் செய்கின்றான்.

ஆதலால் மேலே சொல்லியவாறு சூரியன் முன்னிலையில் பூக்களின் மொக்கு மொட்டாவதும், மொட்டு அரும்பாவதும், அரும்பு மலராவதும், மலர்ந்த மலர்கள் வாடி வதங்கி உதிர்வதுபோலவும் இப்பிரபஞ்ச காரியங்கள் சிவன் சந்நிதானத்தில் நடைபெறுவதால் இறைவன் நிர்விகாரி; அறிந்து அறிவித்து நிற்பன்.

கருத்துரை

காந்தத்தின் முன்பு இரும்பு அசைவதுபோல் ஆன்மாவின் முன்னிலையில் ஞானேந்திரிய கர்மேந்திரியங்கள் உட்பட தனுக்களும், கரணங்களும் தொழிற்படுகின்றன. அவ்வாறே இறைவனுடைய அருட்சத்தியின் சந்நிதானத்தில் அவன் சங்கல்ப மாத்திரையான் சேதனு சேதன பிரபஞ்சங்கள் காரியப்படுகின்றன. ஆகவே இறைவன் நிர்விகாரி.

குறிப்புரை

1. மூக்கிற்குப் பின்னல் "செவி" சொல்லெச்சம்; தொக்கி நின்றது.

2. ஞானேந்திரியங்களைச் சொல்லவே இனம்பற்றி கர்மேந்திரியமும், தனுவும், கரணமும் கொள்ளப்பட்டது.

3. உணர்வு. Consciousness. சிற்சத்தி.

4. அவை - 1-ம், 2-ம், 4-ம் சூத்திரங்களில் வந்த "அவை" போல் சேதனு சேதன பிரபஞ்சத்தைக் குறித்து நின்றது.

5. தமிஅருள் = இறை அருட்சத்தி.

6. தம் = உடைய, ஆறும் வேற்றுமை உருபு. மரியாதையைக் குறிப்பது.

7. ஆங்கு = போல.



சித்தியார்

பொறிபுலன் கரணம் எல்லாம் புருடனால்
அறிந்து ஆன்மாவை
அறிதரா அவையே போல் ஆன்மாக்கள்
அனைத்தும் எங்கும்
செறிதரும் சிவன்த னாலே அறிந்திடும்,
சிவனைக் காணு
அறிதரும் சிவனே யெல்லாம் அறிந்து
அறிவித்து நிற்பன்.

### English Summary

This Sutram explains how the bodies of the Soul function and how the Universe evolves.

As the iron moves in front of a magnet, so the bodies with its organs of senses (Gnanendriams) and organs of action (Karmendriams) functions in the presence of the Soul. (Atman), Similarly the Universe both sentient and insentient evolves in the presence on the Chit Shakti of Isvara (Logos).

It is said that there are two modes of emanation and evolution of the Universe by Ishvara - 1. by His Samkalpas (Divine Ideation) and 2. carried out by His agents, Devas and Rishis in His presence. As an Architect who first conceives, plans and designs a building to be erected by him and then have it erected by engineers, overseers and other workmen who carry out his designs and instructions under his supervision, so also the emenation and evolution of the Universe is said to be brought about by the Divine Thought (Ishvara Samkalpam) acting on Maya (Cosmic Matter) and carried by His agents - Devas and Rishis - a group of divine and spiritual beings.

Thus the Universe was evolved out of His ideal pian and upheld through eternity in the unconsciousness of the Absolute - So Ishvara is immutable.

---

## ஆறும் சுலோகம்

6. (அ) அதிர்ச்யம் சேதஸத் பாவோ திருச்யஞ்
சேஜ்ஜடி மாபவேத்!
சம்போ ஸ்தத்வியதிரேகேண
ஞேயம்ரூபம் விதுர்புதா3||

சம்போஹ = சிவனது, ரூபம் = சொருபம், அதிர்ச்யம் சேத் = காணப்படாதது எனின், அசத் பாவஹ = அசத்துத் தன்மையாம்; திருச்யம்சேத் = காணப்படுவது எனின். ஜடிமாபவேத் = சடத்தன்மையாம்; தத்வியதிரேகேண = அவ்விரண்டிற்கும் வேருய், ஞேயம் = அறியத் தக்கதாம் என்று, புதாஹ = ஞானிகள், விதுக = அறிவர்.

### கருத்து

சிவனது சொரூபம் காணப்படாதது எனின் அசத்தாம், காணப்படுவது எனின் சடமாம். அவன் அவ்விரண்டிற்கும் வேருய் அறியத்தக்கதாம் என்று ஞானிகள் அறிவர்.

## ஆறும் சூத்திரம்

(ஆ) அவதாரிகை

பதி, பசு, பாசம் மூன்றிற்கும் அடிப்படை வஸ்துவான சிவசத்தின் இலக்கணம் உணர்த்தியது.

உணருரு அசத்தெனின் உணரா தின்மையின்
இருதிற னல்லது சிவசத் தாமென
இரண்டு வகையின் இசைக்குமன் னுலகே.



### அந்நுவயம்

சிவசத்து அசத்து எனின் உணர்உரு; இன்மையின் உணராது; (அது) இருதிறன் அல்லது; இரண்டு வகையின் ஆம் என மன் உலகு இசைக்கும்.

### பிண்டப் பொழிப்புரை

சிவமாகிய உள்பொருள் அசத்துப் பொருள் எனின் (கருவிகரணங்களால்) உணரப்படவேண்டும்; சத்து எனின் (அது பிரபஞ்சத்தை) உணராது. அது சத்துமல்ல, அசத்துமல்ல அதாவது இரண்டிற்கும் அப்பாற்பட்டது. (ஆயினும்) அதுவே சத்தாகவும், அசத்தாகவும் ஆக இரண்டு வகையாகவும் பரிணமிக்கிறது(வெளிப்படுகிறது) என்று நிலைபெற்ற மெய்ஞ்ஞானிகள் அறிவர்.

### விளக்கவுரை

மின்சார சக்தி ஆண்அலை (Positive), பெண்அலை (Negative)யாக வேறுபட்டுப் பல கருவிகளில் சேர்ந்து பல விதமாக இயங்கும்போதுதான் அதன் சக்தி நமக்குப் புலனாகிறது. அப்படி அது இரண்டாகப் பிரிவதற்கு முன் எத்தன்மைத்ததாக இருந்ததென்பதை இன்று வரை எந்த விஞ்ஞானிகளாலும் கண்டு பிடிக்கப்படவில்லை. மின்சார சக்தி ஆதிசக்தியின் தூல பரிணமம்.

அதுபோல் சிவம், சிவன் (Spirit), சத்தி (Matter-மாயை)யாகப் பிரிந்து இச் சேதனு சேதன பிரபஞ்சமாக வியக்தமாய் (வெளிப்படையாய்)ப் பரிணமிக்கும்போதுதான் அதன் காரியத்தை நாம் அறிகின்ருேம். இரண்டாகப் பிரிவதற்கு முன் அவ்யக்த (வெளிப்படாத) நிலையில் அது எவ்வாறு இருக்கும் என்று எந்த ஞானிகளாலும் கூறப்படவில்லை. கண்டவர் விண்டிலர்; விண்டவர் கண்டிலர்.

எங்ஙனம் இருந்ததுஎன்று எவ்வண்ணம் சொல்லுகேன்
அங்ஙன் இருந்ததுஎன்று உந்திபற
அறியும் அறிவதன்று உந்திபற. —திருவுந்தியார்

பார்அறிவார் எங்கள் அண்ணல் பெருமையை
பார்அறிவார் இந்த அகலமும் நீளமும்
பேர்அறியாத பெருஞ்சுடர் ஒன்று அதின்
வேர்அறியாமை விளம்பு கின்றேனே. —திருமந்திரம்

இங்கு சத்து, அசத்து என்ற இரண்டை மட்டும் கூறினபோதிலும் இனம்பற்றி அச்சிவம் சித்து, அசித்து; சுகம், துக்கம்; ஆண், பெண்; இரவு, பகல்; வேண்டுதல் (விருப்பு), வேண்டாமை (வெறுப்பு); ஆகிய எல்லா மறுதலை இருமைகளுக்கும் அப்பாற்பட்டது. ஆயினும் அதுவே இருமையாக (இரண்டு வகையின்) பரிணமிக்கிறது என்பதை அறியத்தக்க தொன்றும். சத்தும் அசத்தும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் போல பிரிப்பற்ற ஒன்றும்.

''இன்மையின்'' என்றது அசத்து இன்மையின் அதாவது சத்தாயின் என்ற பொருள்பட இங்கு நின்றது. இதையே அடுத்த சூத்திரத்தில் ''யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின் சத்தே அறியாது'' என்று விரித்துக் கூறப்பட்டுள்ளது. சித்தியாரும் தமது ஆறுவது சூத்திரத்தில் ''சத்தின் முன் அசத்தெல்லாம் நின்றிடாவே'' எனக் கூறியுள்ளதை இங்கு கவனிக்கத் தக்கது.

இதை ''உணராது எனின் இன்மை'' எனக்கொண்டு உணர முடியாதது என்றால் சூன்யப் பொருளாம் என்ற கருத்தும் கொள்வதுமுண்டு. அதுசூன்யப் பொருள்தான். ஆனல் தாயுமானர் அருளியவாறு அது நிறை சூனியமாகும்.



முப்பாழும் பாழாய் முதற்பாழும் பாழாய் அப்பாழுக் கப்பாலாய் நின்றது அது. அதை அநிர்வசனீயம் என்பர். அசத்திலிருந்தே சத்துப் பிறந்தது என்பது வேத வாக்கியம். அது சகளத்திற்கும், நிஷ்களத்திற்கும் அவ்யக்தத்திற்கும், கால (Time), தேச (Space), வர்த்தமானங்கட்கும் (Causation) அப்பாற்பட்ட ஆதிமூலம் (Rootless Root). இதைத்தான் திருவுந்தியாரும்:—

''அகளமாய் யாரும் அறிவரிது அப்பொருள்
சகளமாய் வந்ததுஎன்று உந்திபற
தானகத் தந்ததுஎன்று உந்திபற''

எனக் கூறியுள்ளார்.

அகளமாகிய சிவம் (பிரம்மம்) நிஷ்களமாயும், சகள நிஷ்களமாயும், சகளமாயும் பரிணமித்த அவதரத்தை சுத்த மாயா காரியமாகிய சிவதத்துவ மென்பர். அது சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவம், மகேச்சுரம், உருத்திரன், விஷ்ணு, பிரம்மா ஆகிய நவபேதங்களாகப் பரிணமிக்கிறது. அவற்றில் சிவன், சத்தி, நாதம், விந்து நான்கும் நிஷ்களம்; சதாசிவம் சகள நிஷ்களம்; மகேச்சுரன், உருத்திரன், விஷ்ணு, பிரம்மா நான்கும் சகளமாம். சிவம் அகள நிலை என்பது. இதையே சுருக்கி சிவ தத்துவம் சிவம், சத்தி, சதாக்கியம், ஈச்சுரம், சுத்த வித்தை என்ற சுத்த தத்துவம் ஐந்து என்று கட்டளைகளில் கூறப்பட்டுள்ளன.

சிவன், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், திகழும் ஈசன்
உவந்தருள் உருத்திரன்றன்மால்அயன் ஒன்றின்ஒன்றாய்ப்
பவந்தரும் அருவம் நாலுஇங்கு உருவம்நாலு, உபயம்ஒன்
நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர். [றாய்
—சித்தியார்

கருத்துரை

சிவமாகிய உள்பொருள் சத்திற்கும், அசத்திற்கும், சித்திற்கும் சடத்திற்கும், சுகதுக்கத்திற்கும் அப்பாற்பட்டது. எனினும் அதுவே சத்து அசத்தாகவும்; சித் அசித்தாகவும்; சுகதுக்கமாகவும் பரிணமிக்கின்றது. அது அநிர்வசனீயமான ஆதிமூலம். அதுவே சச்சிதானந்த சகளப் பொருளாகவும், சேதன சேதன பிரபஞ்சமாகவும் பரிணமிக்கிறது.

குறிப்புரை

1. இன்மையின் = அசத்து இன்மையின் = சந்து ஆயின்.

2. சிவசத்து = சிவமாகிய உள்பொருள். சிவம் = மங்களகரமானது, எங்கும் வியாபித்துள்ளது. சத் = சூன்யமல்ல; உள்பொருளேயாம் என்பதைக் குறித்து நின்றது.

3. இனம்பற்றி சத்துடன் சித்தும் ஆனந்தமும், அசத்துடன் அசித்தும், துக்கமும் கூட்டிக் கொள்ளவும்.

4. மன் உலகு = நிலைபெற்ற மெய்ஞ்ஞானிகள்.

5. திறன் = வகை, தன்மை.

6. உரு = இயல்பு.

சித்தியார்

அறிவுறும் பொருளோ ஈசன், அறிவுறு
தவனே என்னின்
அறிபொருள் அசித்து அசத்தாம்; அறியாதது
இன்றும், எங்கும்
செறிசிவம் இரண்டுமின்றி சித்தொடு
சத்தாய் நிற்கும்
நெறிதரும் சத்தின் முன்னர் அசத்தெலாம்
நின்றிடாவே.



## English Summary

This Sutram gives the definition of The Ultimate Reality-Shivam, the Rootless Root and substratum of all manifestations.

If Shivam, the Ultimate Reality is Asat (Mutable - Matter), It must be knowable by the senses; but as It cannot be perceived by the senses, It is not Asat. If It is Sat (Spirit - Consciousness), the Asat or matter is non-apparant to It and It cannot perceive the Universe. So, It is not Sat also. It is neither Sat (Existence, Being) nor Asat (Non-existence, Non-being) i.e., It is beyond Sat and Asat. Nevertheless, It manifests as both Sat and Asat, so saya the wise, the knower of things.

The Absolute, the Ultimate ONE Reality, beness is both absolute Being and Non-being. Spirit (Sat, Consciousness) and matter (Asat, Maya) are to be regarded not as two independent realities but as the two facets or aspects of the ONE Absolute Reality like two sides of a coin which constitute the basis of creation.

Shivam, the Ultimate Reality is an omnipresent, eternal boundless and immutable principle on which all speculation is impossible. It is beyond all dualities - pairs of opposites Spirit and Matter, Male and Female, Day and Night, Love and Hate, Bliss and Pain, etc., and beyond Time, Space and causation. It is beyond the range and reach of human thought; unthinkable and unspeakable. It is the one absolute ultimate reality. It is both absolute Being (Sat) and Non-being (Asat), the Root-less Root of all manifestations and yet It manifests as dualities - pairs of opposites.

They (Sat and Asat) are two which are really one like two sides of a coin, inseparable and each depending on the other for its manifested existence.

## ஏழாம் சுலோகம்

7. (அ) நாசிச் சித்சந்நி தௌகிந்து
நவித்தஸ்தே உபமித ஃ||
பிரபஞ்ச சிவயோர் வேத்தாயஃ
ஸ ஆத்மா தயோஃ பிருதக்||

அசித் = அசித்தா(சடமா)கிய பிரபஞ்சம், சித்சந்நிதௌ = சித்தாகிய (சிவத்தின்) முன், ந = பிரகாசிப்பதில்லை; கிந்து = ஆதலினல், தேஉபே = அவ்விரண்டும் (சிவனும் பிரபஞ்சமும்), மிதஹ = ஒன்றை யொன்று, நவித்தஹ = அறிவதில்லை. பிரபஞ்ச சிவயோஹ பிரபஞ்சம், சிவன் இவ்விரண்டையும், வேத்தா = அறிபவன், யஹ = எவனே, ஸஹ = அவன், தயோஹப்ருதக் = அவ்விரண்டிற்கும் வேருன, ஆத்மா = (சடசித்தாகிய) ஆன்மாவாம்.

### கருத்து

சடமாகிய பிரபஞ்சம் சித்தாகிய சிவத்தின் முன்பு விளங்கித் தோன்ருது; ஆதலினல், சிவனும் பிரபஞ்சமும் ஒன்றையொன்று அறிவதில்லை. பிரபஞ்சம், சிவன் இவ்விரண்டையும் எவன் அறிகின்ருனே அவனே அவ்விரண்டிற்கும் வேருய சடசித்தாகிய ஆன்மாவாம்.

## ஏழாம் சூத்திரம்

(ஆ) அவதாரிகை

பசு பதியின் இலக்கணம் உணர்த்தியது.

யாவையும் சூனியம் சத்தெதிர் ஆதலின்
சத்தே அறியா(து) அசத்தில தறியா(து)
இருதிறன் அறிவுள(து) இரண்டலா ஆன்மா.



### அந்நுவயம்

சத்து எதிர் யாவையும் சூனியம் ஆகலின் சத்து (அசத்தை) அறியாது. அசத்து (அறிவு) இலது ஆதலின் (சத்தை) அறியாது - இரண்டலா ஆன்மா இருதிறன் அறிவுளது.

### பிண்டப் பொழிப்புரை

சத்தான சிவத்தின் சந்நிதானத்தில் அசத்தான பிரபஞ்சமெல்லாம் பாழேயாகும்; அதாவது பிரகாசியாது. அசத்தாகிய பிரபஞ்சம் அறிவற்றது; அதாவது சடம்; ஆதலால் அது சித்தாகிய சிவத்தை அறியாது. இவ்வாறு, இரண்டும் ஒன்றை யொன்று அறியாது. சத்தும், அசத்தும் ஆகிய இரண்டு தன்மைகளுமில்லாத சதசத்தாகிய ஆனமா சத்தாகிய சிவத்தையும், அசத்தாகிய பிரபஞ்சத்தையும் அறியும் தன்மையுடையது.

### விளக்கவுரை

மேலே சூத்திரத்தில் சிவம் சத்து, அசத்தாகவும்; சித்து அசித்தாகவும் பரிணமித்தது எனப் பார்த்தோம். அதாவது சிவம் சிவனகவும் (Spirit) சத்தியாகவும் (Matter, Maya) பிரிந்தது. தனி சித்தின் முன் அசித்தாகிய சடம் தோன்ருது அப்பிரகாசமாயிருக்கும். சடத்திற்கு அறிவு இல்லாததனல் அது சித்தை அறியாது.

விஞ்ஞான ஆராய்ச்சியின்படி உலகில் எதுவும் தனி சித்து (சக்தி-Spirit, Force) அல்லது தனி சடம் (Matter) என்பது கிடையாது. எல்லாம் சித்தசித்து (Spirit-Matter) ஆகவே இருக்கின்றன.

வியக்தமான இந்த சேதன சேதன பிரபஞ்சத்தில் எதை எடுத்துக்கொண்டாலும் உயிர் தனியாகவோ, மெய் தனியாகவோ காண முடியாது. அணு முதல்

அண்டம் வரை எல்லாம் சத்தசத்து (Spirit - Matter) ஆகவும், ஜீவ அணுமுதல் அனந்தீஸ்வரர் வரை எல்லாம் சித்தசித்து (உயிர்மெய் - நாமரூபம்) ஆகவே தோற்ற மளிக்கின்றன. ஆதலால் சேதனப் பொருளாகிய உயிர் தனி சத்தாகவோ, தனி அசத்தாகவோ இல்லாமல் சத சத்தாக இருக்கிறது. அதனாலேதான் ஆன்மா சத்தாகிய சிவனையும், அசத்தாகிய மாயா பிரபஞ்சத்தையும் அறியும் தன்மையையுடையதாக இருக்கிறது.

இந்த இயல்பு பிண்டத்திலுள்ளது அண்டத்திலும் உள்ளது என்ற நியதிப்படி சீவான்மா (பசு)விற்கும், பரமான்மாவிற் (பதிக்)கும் பொது. ஆனால் சிவன் அநாதி முத்தச் சித்துப் பொருள், அகண்டமானது; சீவனே அநாதி பெத்தச் சித்துப்பொருள், கண்ட மானது. இதுவே வித்தியாசம்.

ஆன்மா சதசத்து என்ற விடத்து இனம் பற்றி சித்தசித்து, சுகதுக்கம் என்பதையும் கூட்டிக்கொள்க. வியக்தமான சேதன சேதன பிரபஞ்சம் கால (Time) தேச (Space) வர்த்தமான (Causation)ங்கட்கு உட்பட்டது. இதை புருட தத்துவம் என்பர். காலம் (Time), மாயை (Space), நியதி (Causation), கலை (Manas), வித்தை (Bhuddhi), அராகம் (Atma), புருடன் (Monad) இந்த ஏழும் புருட தத்துவமாகும்.

மானிடவர்க்கத்திற்குக் (Human Kingdom), கீழ்ப் பட்ட வர்க்கங்களாய தாதுவர்க்கம் (Mineral Kingdom), தாவரவர்க்கம் (Vegetable Kingdom), விலங்கு வர்க்கம் (Animal Kingdom) இவைகளில் அசித்து (சடம்)மேலோங்கி யும், சித்து கீழ் அடங்கியும் இருக்கிறது. மானிட வர்க்கத்தின் மேற்பட்ட சீவன் முக்த வர்க்கம் (Super human Kingdom), கடவுளர் வர்க்கம் (Divine Kingdom) இவைகளில் சித்து மேலோங்கியும் அசித்து கீழ் அடங்கி



யும் நிற்கும். மானிட வர்க்கத்தில்தான் சித்தும் அசித் தும் சமநிலையாம் ஒன்றையொன்று எதிர்த்து நிற்கின் றன. குருக்ஷேத்திர போராட்டமெல்லாம் இந்த மானிட வர்க்கத்தில்தான் நடைபெறுகிறது. ஆகவே ஆன்மா சார்ந்தது சார்ந்தவண்ணமாய், சிவனை (சித்தை)ச் சார்ந் தால் சிவமயமாயும், பாசத்தை (அசித்தை)ச் சார்ந்தால் பந்தபாச மயமாகவும் ஆகிறது. அதனால்தான் ஆன்மா சித்து, சடம் இரண்டையும் அறியும் தன்மைத்தான சத சத்தாக இருக்கின்றது என இச்சூத்திரம் கூறுகின்றது.

கருத்துரை

தனிசத்தும், தனி அசத்தும் ஒன்றை யொன்று அறியாது. ஆன்மா தனி சத்துமல்ல, தனி அசத்துமல்ல. அது சதசத்து. அதனால் அது சத்து (சிவன்), அசத்து (பிரபஞ்சம்) இரண்டையும் அறியும் தன்மையை யுடைய தாகயிருக்கிறது. சத்தோடு சார்ந்து சத்தாயும், அசத் தோடு சார்ந்து அசத்தாயும், சார்ந்ததன் சார்ந்த வண்ண மாகக் காணப்படும்.

குறிப்புரை

யாவையும் = அவை = பிரபஞ்சம்.

சூனியம் = பாழ், அப்பிரகாசம். விளங்கித் தோன்றாது.

சத்து, அசத்து என்ற விடத்து இனம் பற்றி சித்து, அசித்தையும் கூட்டிக்கொள்க.

ஏ (சத்தே = சத்து + ஏ) அசை.

இந்த சூத்திரத்தில் ஆன்மாவின் சிறப்பிலக்கணம் கூறப்பட்டுள்ளது.

பச் என்றால் தளை, கட்டு, பந்தம். ஆதலின் பசு என்றது பந்திக்கப்பட்ட ஜீவாணு முதல் அனந்தீஸ்வரர்

வரை எல்லாவற்றிற்கும் பொருந்தும் எனினும் இச்சூத்திரத்தில் பசு (ஆன்மா) என்றது மக்கள் உயிரைக் குறித்து நின்றது.

சித்தியார்

அனைத்தும்சத்து என்னின் ஒன்றை
அறிந்திடாது, அசத்தாம் என்னின்
முனைத்திடாது அசத்து சத்தின்
முன்இருள் இரவி முன்போல்
நினைப்பதுஇங்கு அசத்தே என்னின்
சத்தின் முன்நிலாமை யானும்
கனைக்கொடுஒன்று உணர்த லானும்
தான்அசத்து உணரா தன்றே.

ENGLISH SUMMARY

This Sutram gives the definition of the Soul (Atman).

As everything in the Universe is non-apparant before Sat (pure consciousness - Spirit) as stated in the previous Sutram, Sat cannot perceive the Asat i.e., the Universe is non-existent to Sat. As Asat (Pure matter) is insentient and non-apparant in the presence of Sat, it cannot know the Sat. But the Soul (Atman) which is neither Sat (pure spirit) nor Asat (pure matter) i.e., which is Satasat (Spirit-Matter) perceives both Sat and Asat.

According to modern scientific research, there is no such thing in the Universe as pure Spirit alone or pure matter alone; Both are wedded together as Spirit-Matter inseparably and form this Universe. One cannot exist without the other. Spirit can manifest only through matter and the matter is embodiment of Spirit.



All manifested things in the Universe are Satasat i.e., Spirit-Matter. This rule applies to both Jeevatman and Paramatman - as above so below. So when we say Atman it includes both Jeevatman (Individual Soul) and Paramatman (Over-Soul). The difference between Jeevatman and Paramatman is only quantitative-the former being limited (Kandam) in its capacity while the later is unlimited (Akandam).

In all the Kingdoms of Nature below the Human Kingdom i.e., Mineral, vegetable and Animal Kingdoms, the Matter is predominent over the spirit i.e., the Spirit is subservient to the matter. In all Kingdoms above Humanity i.e., the Super Human Kingdom and Divine Kingdom the spirit is predominent over the Matter i.e., the Matter is subservient to the spirit. Only in the Human Kingdom both the Spirit and Matter are equal and opposite and struggling one against the other - a veritable battle-ground (Guruksheta). The man by his conduct can go down to animal life or up to Divine life. The Soul is both mortal and immortal and it knows both Spirit (God) and Matter (Universe).

---

எட்டாவது சுலோகம்

8. (அ) ஸ்தித்வாச ஹேந்திரிய வியாதை
ஸ்துவாம் நவேங்சீதி போதிதः।
முக்துவைதாங் குருணநன்யோ தன்யः
பிராப்நோதி தத்பதம்॥

தன்யஹ் = பாக்கியவான், குருண = குருவினால் இந்திரிய வியாதைஹ = இந்திரியங் (புலன்)களாகிய வேடர்களோடு, சகஸ்தித்வர = கூடியிருந்து. த்வாம் = உன்னை, நவேத்சி = அறிந்தாயில்லை, இதி = என்று, போதிதக = உபதேசிக்கப்பட்டு, ஏதான் = இவ்விந்திரி

யங்களாகிய வேடர்களை, முக்தவா=விட்டு(ப் பிரிந்து), அநந்யகஸன்=அன்னியமில்லாதவனை, தத்பதம்=சிவ பதத்தை, பிராப்நோதி=அடைகின்றான்.

கருத்து

பூர்வ புண்ணிய பாக்கியவான் "ஐம்பொறிகளாய வேடர்களிடையே சிக்குண்டு நீ உன் உண்மைத் தன்மையை அறிந்தாயில்லை" என்று குருவினால் ஞானோபதேசம் செய்யப்பட்டவனாய், அவ்விந்திரியங்களாகிய வேடர்களை விட்டுப் பிரிந்து அந்நியமில்லாதவனாய் சிவ பதத்தை அடைகின்றான்.

## எட்டாவது சூத்திரம்

(ஆ)

அவதாரிகை

பரிபக்குவமுள்ள உயிர் குரு உபதேசத்தால் ஞான தீட்சை பெறும் முறையை உணர்த்தியது.

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே.

அந்நுவயம்

(ஆன்மா) தம் தவத்தினில் தம் முதல் குருவுமாய் (வந்து) அன்னிய மின்மையின் ஐம்புலவேடரின் வளர்ந்து அயர்ந்தனை, என உணர்த்த, ஐம்புல வேடரின் விட்டு அன்னியமின்மையின் அரன் கழல் செலும். ஏ.

பிண்டப் பொழிப்புரை

உயிர்களின் அதிதீவிரதர சாதனைகளுக் கேற்ப உலகிற்கு முதலாய பகவான் குருமூர்த்தமாய் எழுந்



தருளி வந்து, அவைகளுக்கு தீட்சைகள் செய்வித்து "நீ எனக்கு அன்னியமானவன் அல்ல, என் சுஜாதி; ஆயினும் இழிகுண இந்திரியங்களுடன் கூடி வளர்ந்ததினால் உனது உண்மைத் தன்மையை மறந்து, சம்சார சாகரத்துல் உழன்று துன்புற்றிருக்கின்றாய்" என ஞானோபதேசம் செய்ய, அவ்வுயிரும் அந்த இழிகுண இந்திரியங்களின் கூட்டுறவை விட்டுப் பிரிந்து அனன்னிய பாவனையால் இறைவன் திருவடிகளைத் தேடிச் செல்லும்.

விளக்கவுரை

மேலை சூத்திரத்தில் உயிர்கள் சத்தோடு சார்ந்தால் சத்தாயும், அசத்தோடு சார்ந்தால் அசத்தாயும் சார்ந்த தன் சார்ந்தவண்ணம் இருக்குமென்று பார்த்தோம். சச்சிதானந்த இயல்புடைய உயிர் செம்பிற் களிம்புபோல் ஆணவ மலத்தால் மறைக்கப்பட்டு, இந்திரிய வயமயங்கி உலக பாசத்தில் உழன்று துன்புறுகிறது. அதை ஓர் உதாரணத்தால் இங்குக் கூறப்படுகிறது.

ஓர் அரசன் குழந்தை வேடர்கள் கையில் சிக்குண்டு அவர்களுடன் வனத்தில் வளர்ந்து வாழ்ந்து வந்த பழக்க வழக்கங்களால், தன் அரச குல பழக்க வழக்கப் பண்பாடுகளை மறந்து, வேடர்களுடைய அநாகரீக தீய வழிகளில் ஈடுபட்டு உழன்று இடருற்று வந்தது. ஒரு சமயம் வேட்டையின் நிமித்தம் தன் பரிவாரங்களுடன் அக்காட்டிற்கு வந்த அம்மன்னன் வேடர்கள் மத்தியில் வளர்ந்து வந்த தன் அரசிளங்குமரனைக் கண்டு, அவனைத் தனித்து அழைத்து "நீ என் போன்று அரச குலத்தைச் சார்ந்தவன். ஏதோ விதி வசத்தால் வேடர்களிடம் சிக்குண்டு இந்த அநாகரீக அவல நிலையை யடைந்து, துன்புற்று நிற்கின்றாய். நீ அவர்களை விட்டு நம் இனத்திற்கே திரும்ப வந்து சேர்வாயாக" என்று புத்தி

மதிகளைக் கூறிச்செல்ல, உண்மையை உணர்ந்த அந்த அரசிளங்குமரன் வேடர்களை விட்டுத் தப்பியோடி, தன் நாட்டை யடைந்து, அரச குடும்பத்தில் சேர்ந்து, மந்தியில் வந்த வேடர்களின் தீய ஒழுக்கங்களை மறந்து, தன் குலப் பண்பாடுகளைப் பெற்றுப் பின் தன் நாட்டிற்கே அரசனாகத் திகழ்ந்தான். இது சித்தாந்திகளின் எடுத்துக் காட்டு.

வேதாந்திகள் இதையே வேறொரு உதாரணத்தால் கூறுவர்.

நிறைந்த கர்ப்பமான பெண் சிங்கமொன்று ஓர் ஆட்டு மந்தையின் மேல் பாயும்போது, அதிர்ச்சியால் கர்ப்பம் கலங்கி, மந்தையின் நடுவில் ஒரு குட்டியை ஈன்று, வீழ்ந்து உயிர் துறந்தது. ஆட்டு மந்தையில் பிறந்த அந்த சிங்கக்குட்டி ஆடுகளுடனே வளர்ந்து தன் இனத்தின் சுபாவங்களை மறந்து ஆடுகளைப்போல் பயந்த சுபாவத்துடன் கத்துவதும், இரைதின்பதுமாக இருந்தது.

தன் பேடையைத் தேடி அங்கு வந்த ஆண் சிங்கம் அந்த சிங்கக் குட்டியைக் கண்டு, அதை ஓர் கிணற்றண்டை இழுத்துச் சென்று, கிணற்றை எட்டிப்பார்க்கும் படி செய்தது. கிணற்று நீரில் தன் சாயலையும், ஆண் சிங்கத்தின் சாயலையும் கண்ட சிங்கக்குட்டி தனது உண்மை சொரூபத்தை அறிந்து, அக்கணமே வீராவேசங் கொண்டு மந்தையில் பாய்ந்து ஆடுகளைக் கொன்று தின்று, காட்டில் சுயேச்சையாய் வன அரசாகத் திரிய ஆரம்பித்தது.

உயிர்களும் இறைவன் இனத்தைச் சேர்ந்தவைகளே, அவனைப் போன்று சச்சிதானந்த சொரூபமே. ஆனால் தங்கத்தில் களிம்பு சேர்ந்து செம்பானதுபோல் வியாபகத் தன்மையுடைய ஆன்மா ஆணவ மலத்தால்



அணுத் தன்மையடைந்து, தனது இயல்பை மறந்து, இந்திரிய வயப்பட்டு உலக பாசத்தில் அழுந்தி சம்சார சாகரத்தில் உழன்று இன்னலுறலாயிற்று.

இந்திரிய வயமயங்கி இறப்பதற்கே காரணமாய்
அந்தரமே திரிந்துபோய் அருநரகில் வீழ்வேற்கு
சிந்தைதனைத் தெளிவித்து, சிவமாக்கி யெனையாண்ட
அந்தமிலா ஆனந்த மணிகொள்தில்லை கண்டேனே.

என்ற மணிவாசகரின் மணிமொழிப்படி "தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத்தரும் சத்தி பின்னமிலா இறைவன்" (திருவருட் பயன்) குருமூர்த்தமாய் எழுந்தருளி வந்து பரிபக்குவப்பட்ட ஆன்மாக்களுக்குத் தீட்சைகள் செய்வித்து ஞானோபதேசம் செய்யப் பசுக்கள் தளை நீங்கி பதியின் தன்மையை அடையும்.

சிவனும் சீவனும் அநன்னியம் (வேறில்லை) என்பதைத் திருமூலர் திருமந்திரம் கீழ்வருமாறு கூறுவதாகும்.

சீவ னெனசிவ னெனவே றில்லை
சீவ னார்சிவ னாரை அறிந்திலர்
சீவ னார்சிவ னாரை அறிந்தபின்
சீவ னார்சிவ னாயிட் டிருப்பாரே.

"தொட்டுக் காட்டாத வித்தை சுட்டுப் போட்டாலும் வாராது" என்பது உலக வழக்கு. குரு உபதேசமில்லாமல் ஞானம் கிட்டாது. "எழுத்தறிவித்தவன் இறைவனாகும்" என்றபடி குருவே நமக்குத் தெய்வமாகும்.

" குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவம்என்பது குறித்து ஓரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே உரையுணர் வற்றதோர் கோவே "

—திருமந்திரம்

இறைவனே குருவடிவங் கொண்டு நேரில் வந்து தீட்சைகள் செய்வித்து ஞானோபதேசம் செய்வதுமுண்டு; அல்லாமலும் மகரிஷிகளை அதிட்டித்து நின்று அவர் மூலமும் செய்வதுமுண்டு. "காணுங் கண்ணிற்குக் காட்டும் உளம்போல்" என்றபடி பக்குவமுள்ள ஆன்மாக் களுக்கே குருவருள் கிட்டும்.

இருவினை நேரொப்பில் இன்னருள் சத்தி
குருவென வந்து குணம்பல நீக்கித்
தருமென ஞானத்தால் தன்செய லற்றால்
திரிமலம் தீர்ந்து சிவனவ னாமே. —திருமந்திரம்

குருவு (இறைவனு)க்கும் ஞானோபதேசம் பெறும் உயிருக்குமுள்ள சம்பந்தா சம்பந்தம் எப்படி யென்றால் தாசமார்க்கத்திலிருந்து புத்திரமார்க்கத்திற்கும், புத்திர மார்க்கத்திலிருந்து சக (நேச) மார்க்கத்திற்கும், சக மார்க்கத்திலிருந்து சன் (ஏக) மார்க்கத்திற்கும் நெருங் கிச் செல்லும். தாச மார்க்க நிலையில் சாலோக பதவியும், புத்திர மார்க்க நிலையில் சாமீப பதவியும், சகமார்க்கத் தில் சாருப பதவியும், சன்மார்க்கத்தில் சாயுச்சிய பதவி யும் கிட்டும். (விளக்கம் இணைப்பிலுள்ள சின் முத்திரை களைப் பார்க்கவும்). தீட்சையில் நயனதீட்சை, ஸ்பரிச தீட்சை, மானச தீட்சை, சமய தீட்சை, ஞான தீட்சை, நிர்வாண தீட்சை முதலிய பலவகையுண்டு.

பரிபக்குவமடைய, அதிதீவிரதர ஞானசாதனைகள் யாவை என்பதையும் அவற்றாலாய பயன்களும் அடுத்து வரும் இரண்டு சூத்திரங்களால் விளக்கப்பட்டுள்ளன.

கருத்துரை

தீவிர சாதனைகளால் பரிபக்குவமடைந்த ஆன்மாக் களுக்கு இறைவன் சற்குரு மூர்த்தியாய் வந்து, தீட்சை



கள் செய்வித்து ஞானோபதேசம் செய்ய, உயிர்களுக்கு அநன்னியபாவம் ஏற்பட்டுச் சிவோகம்பாவனை செய்து திருவடி ஞானத்தை யடையும்.

குறிப்புரை

1. ஐம்புலம் என்றவிடத்து இனம் பற்றி கர்மேந் திரியங்களையும், கரணங்களையும் கொள்ளல் வேண்டும்.

2. அயர்ந்து வளர்ந்தனை என்பதை வளர்ந்து அயர்ந்தனை என்று மாற்றுக.

3. தம் = உலகு; முதல் = இறைவன்.

4. குருவும் என்றதில் உம் என்ற விகுதி இதற்கு முன் இறைவன் உயிருக்குயிராய் உடனின்று அந்தர்யாமி யாய் உணர்த்தி வந்ததைக் காட்டுகிறது.

5. குரு = கு = இருளை (அஞ்ஞானத்தை), ரு = நீக்கு பவர் - காரணப் பெயர்.

6. தவம் = தபஸ் = எரித்தல் = அதிதீவிரதர சாதனைகள்.

7. அரன் = பாசங்களை அரிப்பவன்.

8. முன்சூத்திரத்தில் சொல்லிய ஆன்மா இச்சூத் திரத்தில் எழுவாயாக நின்றது - ஆன்மா செலும். ஏ = அசை.

9. பதி பசு உறவு குரங்கு நியாயம், பூனை நியாயம் போலுமாம்.

சித்தியார்

மன்னவன்தன் மகன்வேட ரிடத்தே தங்கி
வளர்ந்தவனை யறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என்மகன்நீ யென்றவரிற் பிரித்துப்
பெருமையொடும் தானாக்கிப் பேணு மாப்போல்
துன்னியஐம் புலவேடர் சுழலிற் பட்டுத்
துணைவனையும் அறியாது துயர்உறும்தொல் உயிரை
மன்னும்அருட் குருவாகி வந்துஅவரின் நீக்கி
மலம்அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பான்.

### ENGLISH SUMMARY

When the Soul is sufficiently ad/anced for initiation into the path by active sathanas (sustained spiritual practices) the Lord appears before it in the form of a Guru (Divine Master-Teacher) and instructing it "you are my own kith and kin (class) with all the qualities of omniscience, omnipotent and omnipresent and having Eternal Existence, Wisdom and Bliss like me, but being entangled with five evil senses and lower Kama-Manas, you have forgotten your own nature and lost your true perspective", initiates it to the path of spirituality. Then the soul Wakes up to reality, renounces all attachment to the senses and worldly pleasures and moves towards His Feet.

—— —

### ஒன்பதாம் சுலோகம்

9. (அ) சித்திருசாத்மநித்ருஷ்டவே சம் த்யக்துவா
விருத்திம் மரீசிகாம்
லப்த்வா சிவபதச் சாயாம் த்யாயேத்
பஞ்சாக்ஷரீம் சுதீ:||

ஸுதீஹ=விவேகமுடையவன், சித்திருசா=ஞான திருஷ்டியால், ஆத்மநி=ஆன்மாவாகிய தன்னிடத்தில், ஈசம்=ஈசனை, திருஷ்ட்வா=அறிந்து (கண்டு), மரீசிகாம் விருத்திம்=கானல்சலம் போன்ற பிரபஞ்ச வியா பாரத்தை, த்யக்த்வா=விட்டு, சிவபதச்சாயாம்=சிவ பதமாகிய நிழலையடைந்து, பஞ்சாக்ஷரீம் = பஞ்சா க்ஷரத்தை, தியாயேத்=தியானிக்கக் கடவன்.



கருத்து

விவேகமுடையவன் ஞானதிருஷ்டியால் ஆத்மா வாகிய தன்னுள் ஈஸ்வரனைக் கண்டு கானல் ஜலம் போன்ற இப்பிரபஞ்ச வியாபாரத்தை விட்டு, சிவபத மாகிய நிழலையடைந்து பஞ்சாக்ஷரத்தைத் தியானிக்கக் கடவன்.

### பத்தாம் சுலோகம்

10. (அ) சிவேனைக்யம் கத: சித்தஸ்த
ததீந:ஸ்வவிருத்திக:|
மலமாயாத்ய சம்ஸ்பிஷ்டோ பவதி
ஸ்வாநு பூதிமான்||

சித்தஹ=(சிவஞானம் பெற்ற) சித்தன், சிவேன= சிவனுடன், ஐக்யம்=ஐக்கியத்தை, கதஹ=அடைந்தவ னாய், தததீநஹஸ் விருத்திகஹ=அச் சிவன் வயமான தனது விருத்தியை உடையவனாய், மலமாயாத்ய=மல மாயை முதலியவற்றால், அஸம் பிருஷ்டஹ=பற்றப் படாதவனாய், ஸ்வாநுபூதிமான்=ஸ்வானுபவமுடையவ னாக, பவதி=ஆகின்றான்.

கருத்து

சிவஞானம் பெற்ற சித்தன் சிவனுடன் ஐக்கியத்தை அடைந்தவனாய், மலமாயை முதலியவற்றால் பற்றப்படா தவனாய் சுவாநுபவமுடையவனாக ஆகின்றான்.

### ஒன்பதாம், பத்தாம் சூத்திரங்கள்

அவதாரிகை

சிவஞானம் பெற அதிதீவிரதர சாதனைகளாகிய ஞானயோகம், ராஜயோகம், பக்தியோகம், கர்மயோகம்

ஆகிய நான்கு சாதனைகளையும் அவற்றாலாய பலன்களை யும் உணர்த்தியது.

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்நிழலாம் பதி,விதி எண்ணும் அஞ்செழுத்தே. 9

அவனே தானே யாகிய அந்நெறி
ஏகனாகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை இன்றே. 10

அந்வயம்

பாசக்கண், ஊனக்கண் பதியை உணரா. பாசம் ஒருவ. 1. ஞானக் கண்ணினால் நாடி, 2. சிந்தையில் நாடி, 3. அஞ்செழுத்து விதி எண்ணும்

அவனே ஆகி, தானே ஆகி, அவனே தானே ஆகிய அந்நெறி (ஓர்ந்து) ஏகனாகி 4. இறை பணி நிற்க.

பாசம் உராத்துனைத் தேர்த்தென ஒருவ, பதிதண் நிழலாம்; மலம், மாயையொடு வினை தன் வலிமை இன்றே.

பிண்டப் பொழிப்புரை

பதியை பாச அறிவாலும், பசு அறிவாலும் காண முடியாது. பாசம் நீங்க 1. தத்துவஞான விசாரணை செய், 2. தியானம் செய், 3. சிவனது பஞ்சாக்ஷரத்தை முறைப்படி ஜெபி.

(இரண்டாம் சூத்திரத்தில் கூறியவாறு) இறைவனே உயிர்களாகப் பரிணமித்தும், தான் தனித்து வேறாகியும், அவைகளோடு உடனாயும் நிற்கும் அந்நிலையை ஓர்ந்து, அவனுடன் இரண்டறக் கலந்து நின்று, அவனது (ஆணை வழித்தான)(மன்பதைத்) 4. திருத்தொண்டில் நின்றால்



பாசங்கள் கானல் நீரென நீங்கி இறைவன் திருவடி ஞானம் கிட்டும்; மும்மலங்களாகிய ஆணவம், கன்மம், மாயை உன்னைப் பந்திக்காது.

விளக்கவுரை

9-ம், 10-ம் சூத்திரங்கள் ஒன்றுக்கொன்று நெருங் கிய தொடர்புடைத்து. அந்த இரண்டு சூத்திரங்களே சிவஞான போதத்திற்குக் கேந்தரமானவை (உயிர்க்கு உறுதுணையான நான்கு சாதனங்களும் அவற்றின் பலா பலன்களையும் கூறுவன). அதனால்தான் இரண்டையும் சேர்த்து இங்குக் கூறப்பட்டுள்ளது.

இறைஞானம் பெறுவதற்கு நான்கே சாதனங்கள் உள. அவை யாவன:—ஞானயோகம், இராஜயோகம், பக்தியோகம், கர்மயோகங்களாம். "ஞானக் கண்ணால் நாடு" என்பது ஞான யோகத்தையும், "சிந்தையில் நாடு" என்பது இராஜயோகத்தையும், "ஐந்தெழுத்தை விதிப்படி எண்" என்பது பக்தி யோகத்தையும், "இறை பணி நிற்க" என்பது கர்மயோகத்தையும் குறித்து நின்றன இவ்விரு சூத்திரங்களிலும் என்பதை உணர்க.

கண் என்றால் அறிவு. அறிவிற்குக் கருவியாயிருப்பது அந்தக் கரணம். அதில் மனமும் புத்தியும் முதன் மைத்து. மனம் இருவகைப்படும்:—கீழ்மனம் (Lower Mind) அதாவது உருவமனம் (Concrete Mind); மேல் மனம் (Higher Mind) அதாவது அருவமனம் (Abstract Mind). கீழ்மனம் இந்திரியங்கள் வயப்பட்டு, சதா உலக சிற்றின்பத்திற்கே இழுத்துச் செல்லும். அதனால் இது காம மனம் (Kama Manas) என்று சொல்லப்படுகிறது. இதுவே எல்லா தீயகுணங்கட்கும், செயல்களுக்கும் இருப்பிடம். இதைத்தான் பாசக்கண் அல்லது பாச ஞானம் என்று சித்தாந்த நூல்களில் கூறப்பட்டுள்ளது. இதைக்கொண்டு இறைவனை அடையவே முடியாது.

மேல்மனம் உன்னத நோக்கு உடைத்ததாய்இருக்கும். விஞ்ஞானிகளின் பூத பௌதிக, ரசாயன ஆராய்ச்சிக்கு நுண்மாண் நுழைபுலன் அறிவாகும். இது தர்க்கம், அனுமானப்பிரமாண அளவைகள், இலக்கண இலக்கியங்கள், கணிதம், சோதிடம், ஆயுர்வேதம் முதலிய நூல் ஆராய்ச்சியின் கருவியாகிய நுண்ணறிவாம். (இது சில சமயம் கீழ்நோக்கிச் சென்றாலும் செல்லக்கூடும்.) இதைத் தான் ஊனக்கண் அல்லது பசுஞானம் என்று சொல்வது. இதனால் மட்டும் இறைவனை அடைய முடியாது.

இந்த மேல் மனம் ஆழ்ந்த தியானத்தில், அவனருளால், மனோமயகோசத்தை ஊடுருவி விஞ்ஞான மய கோசத்தை (புத்தியை)த் தொடும்போது, மின்னொளி யென ஞானம் உதயமாகிறது. ஞானக்கண்ணிற்கு இருப்பிடம் அதிநுட்பமான புத்தி தத்துவமாகிய விஞ்ஞான மய கோசமாம். இதனால் அறியும் அறிவைத்தான் உள் உணர்வு (Intuition) என்று சொல்வது. இதனால் மட்டுமே இறைவனை அறியலாம். இதைத்தான் ஞானக்கண் அல்லது பதிஞானம் என்பது.

இரண்டாம் சூத்திரத்தில் "அவையே தானே யாய்'' என்றவிடத்து 'அவை' என்பது சேதனம், அசேதனம் ஆகிய இரண்டு பிரபஞ்சங்களையும் குறித்து நின்றது. பத்தாம் சூத்திரத்தில் "அவனே தானே யாகிய" என்றவிடத்து 'அவன்' என்பது அசேதனப் பிரபஞ்சத்தை நீக்கி, சேதனப் பிரபஞ்சமாகிய உயிர்களை மட்டும் குறித்து நிற்கிறது. இறைவனே உயிர்களாகப் பரிணமித்து, ஒன்றாயும், வேறாயும், உடனாயும் நிற்பதால் நம்மில் பிறரையும், பிறரில் நம்மையும், எல்லோரையும் இறைவனிலும் இருக்கக் காண்டல். இதையே தான் பகவான் கீதையிலும் திருவாய் மலர்ந்தருளி யிருக்கின்றார். இதனால் உயிர்த்தொண்டே இறைபணி யென்றாகிறது.



1. ஞானக் கண்ணினால் நாடு என்றது தத்துவ ஞான விசாரணை செய் என்பது பொருள். இது ஞான யோகமாம். ஞான யோகிகள் எப்போதும் "பசித்திரு", "தனித்திரு'', "விழித்திரு" என்ற ஆணையைக் கடைப் பிடித்தொழுகவேண்டும். குணம் எனும் குன்றேறி நிற்க வேண்டும். சதா இயற்கையின் அற்புதத்தையும் அழகையும் சிந்தித்து, எங்கெங்கெல்லாம் அழகு, இனிமை, கம்பீரம், விசித்திரம் காண்கின்றதோ அங்கெல்லாம் இறைவனின் திறனைக் கண்டு, அவனைப் புகழ்ந்து மகிழ வேண்டும். எல்லாவற்றிலும் இறைவனைக் காணல் வேண்டும்.

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தின்
வகைதெரி வான்கட்டே உலகு. —குறள்

2. சிந்தையில் நாடு என்றது தியானம் செய் என்பது பொருள். இது சிவராஜயோகமாம். இறைவனை இருதயத்திலும், உச்சியிலும் காணவேண்டும். இதை இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்ற அட்டாங்க யோக மென்பர். குண்டலினி சக்தியை மூலாதாரத்தி லிருந்து எழுப்பி ஆறு ஆதாரங்களையும் கடந்து உச்சியிலுள்ள சகஸ்ரதலத்திற்குக் கொண்டு போகவேண்டும். இதனால் அட்டமா சித்திகளும் கைவல்யமாகும். விரிவை பதஞ்சலி யோக சூத்திரத்தில் காண்க.

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்கம்
நெறிநின்றார் நீடுவாழ் வார். —குறள்

3. "ஐந்தெழுத்தை விதிப்படி எண்" என்றது இறைவன் நாமத்தை ஜெபிக்கவேண்டும், பஜிக்கவேண்டும் என்பதாம். இது பக்தி யோகமாம். பக்தி மார்க்கத்தில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு உட்பிரிவுகள் உள. இறைவன் திருநாமங்களையும், அவன் புகழையும் போற்றிப் புகழ்ந்து பரவசப்பட்டு ஆடிப் பாடிப் பரவுதல் வேண்டும். உடல் பொருள் ஆவி அனைத்தையும் அவனுக்கே அர்ப்பணம் செய்தல் வேண்டும். இதைப் பரபக்தி என்பர். பல கடவுளர்களுக்குரிய ஷடாக்ஷரம், அஷ்டாக்ஷரம் முதலிய பல மந்திரங்கள் இருந்தும், பஞ்சாக்ஷரமே எல்லாவற்றிற்கும் தலைசிறந்து சிகரமாய் விளங்குவது. பஞ்சாக்ஷரத்தில் 1. தூலம், 2. சூக்குமம், 3. காரணம், 4. மகாகாரணம், 5. முக்தி பஞ்சாக்ஷரமென ஐவகை யுண்டு. நமசிவாய—தூல பஞ்சாக்ஷரம், சிவயநம - சூக்கும பஞ்சாக்ஷரம், சிவயவசி - காரண பஞ்சாக்ஷரம், சிவ - மகா காரண பஞ்சாக்ஷரம், சி - முக்தி பஞ்சாக்ஷரம். இவைகளை விதிப்படி ஓத, குருஉபதேசம் பெறவேண்டும். அதனாலன்றோ மணிவாசகப் பெருமான் தமது திருவாசகத்தில் எடுத்த எடுப்பில் "நமச்சிவாய" வாழ்க என ஆரம்பித்தருளியிருக்கின்றார். தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, திருவருட்பா முதலிய தோத்திரங்கள் பக்திமார்க்கத்தின்பாற்பட்டன.

கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

கற்றதனா லாயபயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின். —குறள்

4. "இறைபணி நிற்றல்" என்பது சீவகோடிகளுக்குத் தொண்டு செய்தல். இது கர்மயோகத்தின்பாற்



படும். அவனே தானேயாகி அதாவது சிவன் தானே பல பல சீவனுமாகி நிற்றலால், பிறரை நம்மிலும், நம்மைப் பிறரிலும், எல்லோரையும் சிவனிலும் காணவேண்டும். கீதையின் உபதேசமும் இதுவே. "எல்லோரும் இன்புற்றிருப்பதுவே யல்லாமல் வேறொன்றும் அறியேன்" என்ற தாயுமானார் வாக்கும், "உலகம் இன்புறுவது தான்இன்புறுவக்கண்டு" என்ற வள்ளுவர் வாக்கும் இக்கருத்தை வலியுறுத்தும். அனைத்துயிர் ஒன்றென்றெண்ணி, நமது சுகதுக்கம் பிறர் சுகதுக்கம், பிறர் சுகதுக்கம் நமது என்ற எண்ணம் உதிக்க வேண்டும். இதற்குத் திறவுகோல் அன்பேயாகும்.

அரசன் சேவை என்றால், அரசன் எந்த நோக்கத்துடன் (தன் குடி மக்கள் இன்புற்று வாழ) தேச பரிபாலனம் செய்கின்றானோ, அந்த நோக்கத்திற்கு உதவியாக அவனது சேவகர்கள் அரச ஆக்கினையை மேற்கொண்டு சேவை செய்வதே அவர்களது கடமையாகும். அதுபோல், இறைவன் உயிர்களின் நலன் கருதி, பஞ்சகிருத்தியங்களைச் செய்தலால், நாமும் அவன் ஆணையை மேற்கொண்டு, உயிர்களுக்குத் தொண்டு செய்வதே இறை பணியாகும்.

எறும்பு முதல் யானை ஈறாக யாரும் கருமம் செய்யாமல் இருக்க முடியாது. அப்படிக் கருமம் செய்யும்போது அதனால் சில வினைப் பயன்களும், பிறவிகளும் வந்து சேருகின்றன. கருமங்களில் கர்மம், விகர்மம், அகர்மம் என மூன்று விதங்கள் உண்டு; தன்னலங் கருதியே கர்மம் செய்தல், தன்னலமும் பிறர் நலமும் கருதிச் செய்யும் கர்மங்கள், பிறர் நலங் கருதியே செய்யும் கர்மங்கள். பிரதிபலனை எதிர்பாராது பிறர் நலத்திற்காகச் செய்யும் கருமமே உத்தம கர்மமாகும். இதுவே கர்மயோகத்தின் அடிப்படை. கர்மங்கள் செய்யும்போது செய்யும் நல்

வினை தீவினைகளுக்கேற்ற கர்மப் பிரதி கருமங்களும், ஆகாமியம், பிராரத்தம், சஞ்சிதம் முதலிய கர்மங்களும் ஏற்படும். பலனை எதிர்நோக்காது ஈஸ்வரார்ப்பணமாக சற்கருமங்களை நமது கடமையாகக் கொண்டு செய்து வந்தால், இருவினை யொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் கிட்டும்; வீடுபேறுண்டாம்.

> அறவாழி அந்தணன்தாள் சேர்ந்தார்க் கல்லால்
> பிறவாழி நீந்தல் அரிது. —குறள்

இந்தத் தீவிரதர சாதனங்களாய ஞானயோகம், ராஜயோகம், பக்தியோகம், கர்மயோகத்தால் என்ன பயன் என்றால் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும் மலங்களும் வலியிழந்து நம்மைக் கட்டுப்படுத்தாது. இதற்கு முன் அவை நமக்கு எஜமானாக இருந்தது போய், இப்போது நாம் அவைகளுக்கு எஜமானாவோம். மலங்கள் (பாசங்கள்) கட்டு நீங்கவே சிவஞானம் எய்தப் பெற்று, உயிர்கள் சகலாவத்தையிலிருந்து சுத்தாவத் தையை யடையும்.

இச்சிவஞான போதத்திற்கே ஒன்பது, பத்து ஆகிய இவ்விரு சூத்திரங்களும் அச்சாணிகளாக அமைந் துள்ளன வென்று மேலே பார்த்தோம். இவற்றின் வைப்பு முறைகளிலும் ஒரு சிறப்பும், இரகசியமும் அமைந்துள்ளதைக் காணலாம். ஒன்பதாவது சூத்திரத் தில் ஞானயோகத்தையும், ராஜயோகத்தையும் சேர்த்து இரண்டாவது அடியில் ஒரே வரியில் சொல்லி, இடையில் ஒரு அடியை விட்டு, நான்காவது அடி இறுதியில் பக்தி யோகத்தைக் கூறி, அடுத்த பத்தாவது சூத்திரத்தில் கர்மயோகத்தை மட்டும் தனித்துக் கூறப்பெற்றுள்ளது சிந்திக்கத்தக்க விடயமாகும்.

ஞானயோகமும், இராஜயோகமும் மிக்கக் கடின மான மார்க்கங்களாகும். அவைகளுக்குத் தனித்த சில



தன்மைகளும், அப்பியாசங்களும் தேவை. அவை எல் லோருக்கும் கைகூடாது. இடையூறுகளும், இன்னல் களும், ஆபத்துக்களும் நிறைந்தவை. பொறிவாயில் ஐந் தவித்த பொய் தீர் ஒழுக்கநெறி நின்றார்க்கும், உரனென் னும் தோட்டியால் ஓர் ஐந்தும் காக்கும் திறனும், ஆமை போல ஐந்தடக்கும் ஆற்றலுடன் குணமெனும் குன்றேறி நின்றார்க்கே அவைகள் கைவல்யமாகும். இந்த மார்க் கங்களில் அட்டமா சித்திகளும் கிட்டும். ஒழுக்கத்தில் தவறினால் வாம மார்க்கத்தில் இழுத்துச் செல்லும். ஆதலால் இந்த இரண்டு மார்க்கங்களும் கத்தி முனையில் நடப்பது போன்றதாகும்.

பக்தியோகம் யாவர்க்கும் எளிது. தனித்த அப்பி யாசங்கள் வேண்டியதில்லை; பொருட் செலவுமில்லை. யாவர்க்குமாம் இறைவர்க்கோர் பச்சிலை யிருந்தால் போதும். நைந்துருக மனமும், ஒருமையுடன் அவன் திருவடிகளை நினைக்கும் சிந்தனையும் இருந்தால் போதும். தாயினும் சிறந்த தயாபரனான இறைவன் வேண்டு வார்க்கு வேண்டியதை ஈவான் கண்டாய். அதனாலன்றோ எல்லா ஞான சாதனைகளும், அட்டமாசித்திகளும் கைவரப் பெற்ற திருவருட் பிரகாச வள்ளலாகிய இராம லிங்க சுவாமிகள் தமது அருட்பா ஆறு திருமுறைகளிலும் பக்தி மார்க்கத்தையே வலியுறுத்திச் சென்றிருக்கிறார். நாயன்மார்களும், ஆழ்வார்களும் பக்தியையே வலி யுறுத்தியுள்ளனர். இந்த கலியுகத்திற்குப் பக்தி மார்க் கமே சிறந்ததாகும்.

கர்மயோகம் மிகவும் முக்கியமானது. மேலே சொல்லியவாறு ஓர் அறிவுயிர் முதல் இறைவன் ஈறாக யாரும் கர்மம் செய்யாமல் இருக்க முடியாது. கீதையில் பகவான் "நான் ஒரு கணமேனும் கர்மம் செய்யாதிருந் தால் இப்பிரபஞ்சம் அழிந்துவிடும்" என்று சொல்கிறார்.

முத்தியின் முடிவு இறைவன் பாதத்தைப் பிடித்துத் தொங்கிக்கொண்டிருப்பதல்ல; அல்லது அவனது நடனத்தைப் பார்த்து ஆனந்தித்துக் கொண்டிருப்பதல்ல. அவனுடன் ஏகனாகி இறைபணி செய்தலே சீவன் முக்தர்களின் குறிக்கோளும், கடமையும், பொறுப்புமாகும். பழதம்போதே பணமும் சம்பாதி (Earn as you learn) என்றபடி கர்மம் செய்யும்போதே முத்திக்கு வித்திடலாம். இதற்கு "அன்பே சிவம்", "ஜீவகாருண்யம்" திறவுகோலாகும். அதனால்தான் கர்மயோகத்தைத் தனி சூத்திரமாக அருளப்பெற்றுள்ளது.

இந்த இரண்டு சூத்திரங்களின் கருத்துக்களை மணிவாசகப் பெருமானின் திருவாசகத்தில் ஒரு வாசகமாகிய திருப்படையெழுச்சியில் பிரபஞ்சப்போர் என்ற தலைப்பின்கீழ் வரிசைக் கிரம வரிசையாக அப்படியே பிரதிபலிக்கப்பட்டுள்ளன.

ஞானவாள் ஏந்தும் ஐயர் நாதப்பறை யறைமின்
யானமா ஏறும் ஐயர் மதிவெண்குடை கவிமின்
ஆனநீற்றுக் கவசம் அடையப் புகுமின்
வானவூர்கொள்வோம்யாம் மாயைப்படை வாராமே.

தொண்டர்காள் தூசிச்செல்வீர் பக்தர்காள் சூழப்போகீர்
ஒண்திறல் யோகிகளே பேரணி யுந்தீர்கள்
திண்திறல் சித்தர்களே கடைக்கூழை செல்மின்கள்
அண்டர்நாடு ஆள்வோம்யாம் அல்லற்படை வாராமே.

இரண்டு அரசர்களுக்கிடை போர் நடக்கிறது. போரிட, 1. வெண்கொற்றக் குடை வேண்டும், 2. வாகனம் வேண்டும், 3. வாள்வேண்டும். 4. கவசம் வேண்டும், 5. போர்ப்பறை வேண்டும், 6. ரத, கஜ, துரக, பதாதியாகிய சதுர்விதப் படைகள் வேண்டும்; ஆக ஆறு அங்கங்களும் வேண்டும்.



இங்கு ஒளிக்கும் இருளுக்கும் போர் நடக்கிறது. ஒளிப்படைக்குத் தலைவன் இறைவன். மதி = குடை, தர்மம் (அறம்) = வாகனம். ஞானம் = வாள், திருநீறு = கவசம், நாதம் = பறை. தொண்டர்கள் (கர்மயோகியர்கள்), பத்தர்கள் (பக்தி யோகியர்கள்), யோகிகள் (சிவராஜயோகியர்கள்), சித்தர்கள் (ஞானயோகியர்கள்) ஆகியவர்கள் சதுர்விதப் படைகளாம்.

எதிரிப் படைக்குத் தலைவன் இருள். சினம் = குடை, வாகனம் = மறம், வாள் = அஞ்ஞானம்; கவசம் = வெறுப்பு, பறை = ஆரவார இரைச்சல், நாற்படை = ஆணவம், கன்மம், மாயை, பந்தபாசம்.

போர் நடக்கின்றது; சத்தியமே ஜெயிக்கின்றது. யோகியர்களுக்கு ஒண்திறல் என்றும், சித்தர்களுக்குத் திண்திறல் என்றும் அடைமொழி கொடுத்திருப்பதைக் கவனிக்கவும். போரில் நான்கு படைகளின் அணிவகுப்பு வரிசையையும் ஆராய்ந்து பார்க்கவும்.

மற்றும் இவ்விரு சூத்திரங்களிலும் வேதத்தின் ஞான காண்டத்தில் கூறப்பட்டிருக்கும் ஆறு அங்கங்களாகிய நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், மீமாம்சம், வேதாந்தத் தரிசனங்களின் கருத்துக்கள் பொதிந்து கிடப்பதைக் காணலாம்.

### கருத்துரை

உலக பாசத்தோடு கூடிய காம மனத்தாலும், வெறும் அறிவினால் மட்டும் இறைவனைக் காணமுடியாது. பாசம் நீங்குவதற்கு அதிதீவிரதர சாதனைகளாகிய ஞான யோகம், ராஜயோகம், பக்தியோகம், கர்மயோகம் இவைகளில் ஒன்றை அப்பியசிப்பதன் மூலம், பாசங்கள் கானல் நீரென அறவே ஒழிய, ஆணவம், கன்மம், மாயைகளாகிய மும்மலங்களும் வலியிழந்து கட்டு நீங்க, சிவனது திருவடி ஞானம் உயிர்களுக்குக் கிட்டும்.

குறிப்புரை

1. எட்டாவது சூத்திரத்தில் அதிதீவிரதர சாதனை யால் திருஅருள் கிட்டும் எனக் கூறி அந்த அதிதீவிரதர சாதனைகள் யாவை என்பதை இந்த 9-ம், 10-ம் சூத்திரங் களில் விளக்கப்படுகின்றன.

2. கண் = அறிவு, ஊனக்கண் = குறைந்த அறிவு.

3. உராத்துணைத்தேர்த்து = பேய்த்தேர் = கானல் நீர். உரா = ஊராத, திரிகின்ற. துனை = வேகம் = அதி வேகம்.

4. யோகம் = ஐக்கியம்.

5. அவனே தானே :—அவன் (உயிர்கள்). முதல் சூத்திரத்தில் அவன், அவள், அது எனும் அவை என்ற படி உயிர்களை ஆண்பாலில் கூறுவது மரபு. (புருடன்). தான் = இறைவன்.

சித்தியார்

பாசஞா னத்தாலும் பசுஞானத் தாலும்
பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத் தாலே
நேசமொடும் உள்ளத்தே நாடிப் பாத
நீழற்கீழ் நில்லாதே நீங்கிப் போதின்
ஆசைதரும் உலகமெலாம் அலகைத்தே ராம்என்று
அறிந்துஅகல அந்நிலையே யாகும் பின்னும்
ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க
உள்ளத்தே புகுந்து அளிப்பன் ஊனமெலாம் ஓட. 9

இவன்உலகில் இதம்அகிதம் செய்த வெல்லாம்
இதம்அகிதம் இவனுக்குச் செய்தார்பால் இசையும்
அவன்இவனாய் நின்றமுறை யேக னாகி
அரன்பணியில் நின்றிடவும் அகலும் குற்றம்



சிவனும்இவன் செய்தியெலாம் என்செய்தி யென்றும்
செய்ததுஎனக்கு இவனுக்குச் செய்தது என்றும்
பவம்அகல உடனாகி நின்றுகொள்வன் பரிவாய்
பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே. 10

## English Summary

The ninth and tenth Sutras enumerates the four important paths - Sadhanas - (Spiritual practices) for attaining the Lord's Feet (Salvation). The ninth Sutra deals with Gnana Marga (Wisdom path), Yoga Marga (Meditation path) and Bhakthi Marga (Devotion path) and the tenth one, Karma-Marga (Action path).

Ishvara cannot be known by the Lower (concrete) Mind wedded with the senses for the enjoyment of worldly pleasures (i.e., by Pasa-Gnanam). Nor can He be perceived by the Higher (abstract) Mind with its intellectual logic and arguments (i.e., by Pasu-Gnanam).

He can be realised only through Buddhi Intuition) called Pathi-Gnanam which can be attained by sustained spiritual practices of one of the four paths - Gnana Yoga, Raja Yoga, Bhakthi Yoga and Karma yoga.

I. Gnana Marga - Investigation into the Laws of Nature and Atman (Self) and Occult Research to see God in the Nature, to see the divinity in Beauty, Music, Arts, etc., to scan and admire the grandeur and beauty of the rising and setting of the sun behind the vast deep ocean and high mountain ranges with gigantic forest trees (because the God geometrises as Plato said) and to realise the power, glory and wisdom of God.

II. Yoga Marga - the path of mediation. It consists eight steps :—1. Yama (Forbearance) i.e., control of senses, 2. Niyama (Observance i.e., control of mind), 3. Asana (Postures), 4. Pranayama (control of breath), 5. Pratyahara (abstraction or calmness), 6. Dharana (contemplation or concentration), 7. Dhyana (absorption or Meditation) and 8. Samadhi (trance or beatitude). This will arouse the Kundalini Sakthi (serpant power) and cause it pass upwards through six kinds of Chakras Muladharam, Swathishtanam, Manipuragam, Anagatham, Vishuthi and Aggnai and reach the top Sahasrram and attain Samadhi. For details see the Yoga Sutras of Patanjali.

III. Bhakthi Marga - the path of devotion. Unselfish and utterly dedicated love to God ; surrendering completely all-life, body and wealth to his cause. Praying, singing (hymns) His Glory and repeating His Mantras - Panchatcharam according to rules.

IV. Karma-Marga - the path of action. With awareness that you (souls) are part and parcel of Ishvara (as explained in the 2nd Sutram) merge your individuality and become one with Him and in tune with Him i.e., perceiving all your actions to be His, do His will which is self-sacrificing service to humanity including the sub-human Kingdom. See action in inaction and inaction in action and surrender all the fruits of your actions to Him. i.e., Karma Yoga.

Thus by practising these sadhanas, the bondage of Anava (Egoism) i.e., "I and Mine", Maya (delusion) and Karma (action) loses its grip on you i.e., you become the master over them and you will attain the Be-attitude - the Blissful State under the Lord's Feet.

---



## பதினோராம் சுலோகம்

11. (அ) திருசோர் தர்சயிதா சாத்மா தஸ்ய
தர்சயிதா சிவஃ|
தஸ்மாத் தஸ்மிந் பராம் பக்திம்
குர்யா தாத் மோப காரகே॥

திருசோர் = கண்களுக்கு. தர்சயிதா = காட்டுவது, ஆத்மா = ஆத்மாவாம். தஸ்யச = அந்த ஆத்மாவிற்கு, தர்சயிதா = அறிவிப்பது, சிவஹ = சிவன். தஸ்மாத் = ஆதலால், ஆத்மோபகாரகே = ஆத்மாவிற்கு உபகாரம் செய்கின்ற, தஸ்மின் = அச்சிவனிடத்தில், பராம்பக்திம் = மேலான பக்தியை, குர்யாத் = செய்யவேண்டும்.

கருத்து

கண்களுக்குப் பொருளைக் காணும்படி காட்டுவது ஆன்மாவாம். அதுபோல் அவ்வான்மாவுக்கு விஷயங்களை அறிவிப்பவன் சிவனாகும். ஆதலின் ஆன்மாவிற்கு உபகாரம் செய்கின்ற அச்சிவனிடத்தில் மேலான பக்தியைச் செலுத்தவேண்டும்.

## பதினோராம் சூத்திரம்

(ஆ) அவதாரிகை

தோன்றாத் துணைவன் அருளால் உயிர்கள் தன்னைத் தான் அறிந்து தலைவனையும் உணரும் முறையினை உணர்த்தியது.

காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே.

### அந்நுவயம்

காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல் (உயிர்கள்) உள்ளத்தைக் காண (இறைவன்) அயரா அன்பின் காட்டலின் (உயிர்) உள்ளத்தைக் கண்டு அரன்கழல் செலும்.

### பிண்டப் பொழிப்புரை

பார்க்கும்தகுதியுடைய கண்ணுக்குப் பொருள்களைக் காட்டும் மனம்போல இறைவன் பக்குவமுள்ள உயிர்களுக்கு அவைமாட்டு வைத்திருக்கும் இடையறா அன்பின் காரணமாக அதன் உள்ளத்தைக் காணும்படி காட்ட உயிர்களும் தன்னைத்தான் அறிந்து தலை (இறைவனை யும் உணரும்.

### விளக்கவுரை

இந்த சூத்திரத்தில் இரண்டு உண்மைகள் பொதிந்திருக்கின்றன. ஒன்று இறைவன் ஏதோ ஒரு சமயம் தான் உயிர்களுக்கு அருள்பாலிக்கின்றான் என்பதில்லாமல், அநவரதமும் (எக்காலமும்) உயிர்களைக் கண்காணித்துக்கொண்டே யிருக்கின்றான் என்பது. மற்றொன்று தன்னைத்தான் அறிந்தவனே தலைவனையும்அறிய முடியும் என்பது இரண்டாவது உண்மை.

எட்டாம் சூத்திரத்தில் சொல்லியவாறு, இறைவன் பக்குவமுள்ள ஆன்மாக்களுக்குக் குருமூர்த்தமாய் எழுந்தருளி வந்து, தீட்சைகள் செய்வித்து, ஞானோபதேசம் செய்ததோடு இறைவனுக்கும் உயிர்களுக்குமுள்ள தொடர்பு முடிந்துவிட்டதா? எனின்; இல்லை. "நொண்டி மாடு வீடு வந்து சேரும்வரை கதவு திறந்திருக்கும்; சாத்தப்படமாட்டாது" என்ற முதுமொழிப்படி, "தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தரும் சத்தி பின்னமிலா



இறைவன்" எல்லா உயிர்களும் தனது திருவடி வந்து அடையும் மட்டும், வீட்டுக் கதவை திறந்து வைத்துக் கொண்டே, பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிந்து காக்கும் தயாபரன் உயிர்கள்மாட்டு வைத்திருக்கும் இடையறா பேரன்பால் அவர்களுக்குத் தோன்றாத் துணையாய் இருந்துகொண்டு, பக்குவமுள்ள ஆன்மாக்களாக இருந்தாலும் சரி, பக்குவப் படாத ஆன்மாக்களாக இருந்தாலும் சரி அவர்களுக்கு உள்ளும்புறமுமாக இருந்துகொண்டு, அவர்களை அறக் கருணையாலும் (Rewards) மறக்கருணையாலும் (Punishment) வழி நடத்துவன். அன்பே சிவனது வடிவம்; அன்பும் சிவமும் ஒன்றே.

இவ்வாறு வழி நடத்தும்போது இறைவனுக்கும் (குருவுக்கும்) உயிர்களுக்கும் (சீடர்களுக்கும்) உள்ள தொடர்பு பல நிலைகளை யுடைத்து. குரங்கு நியாயம், பூனை நியாயம் என்றபடி முதலில் நாம் குரங்குக் குட்டி போல், அவனைத் தாவிப் பிடிக்க முயற்சித்தால் அவன் நம்மை எட்டிப்பிடித்துப் பூனையைபோல் கௌவிக் கொள்வன். குருவுக்கும் சீடனுக்கும் உள்ள சம்பந்தம் முதலில் எஜமானனுக்கும் வேலைக்காரனுக்கும் (ஆண்டான் அடிமை) உள்ள தாசமார்க்கமாய் (Probationary) இருக்கும். பிறகு சிறிது நெருங்கிப் பிதாவிற்கும் பிள்ளைக்கும் இருப்பதுபோல் (புத்திரமார்க்கம்-Sonship) இருக்கும். ஞானம் முதிர முதிர தொடர்பு தோழனைப் போலும் சகமார்க்க (Initiates)மாயும், கடைசியாக சன்மார்க்கமாய் ஐக்கியத்தில் (Adeptship) முடியும். இப்படி உயிர்கள் வீட்டை நோக்கி ஞானப்படிகளில் ஏற ஏற முறையே சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சியப் பதவிகளை ஒவ்வொன்றாய் யடையும்.

இவ்வாறு வீட்டை நோக்கி ஞானப்படிகளில் ஏறு முன்பு சமயதீட்சை, ஞானதீட்சை, நிர்வாண தீட்சை

முதலிய தீட்சைகளையும் ஞானோபதேசங்களையும், சற்குருவினால் பெறப்பட வேண்டும். ஞானதீட்சையில் குடீசகன், பரிவிராஜகன், பகூதகன், ஹம்ஸன், பரமஹம்ஸன் என்ற ஐந்து படிகளும் தீட்சைகளும் உண்டு. ஒவ்வொரு படியையும் ஏறுமுன் சில பாசக்கட்டுகளைக் களையவேண்டும். எல்லாக் கட்டுக்களையும் நீக்கின பிறகுதான் சீவன் முக்த (Super Human) நிலையை அடைய முடியும். அதற்குமேல் நிர்வாண தீட்சைகள் உள; அவை தேவரகசியமாம். (For details see "Path of Discipleship" by Annie Besant and "The Masters and the Path" by C.W. Leadbeater.)

காண சக்தியுடைய கண்ணுக்குத்தான் பொருட்கள் விஷயமாகும். குருட்டுக் கண்ணுக்கு யார் காட்டினாலும், எப்படிக் காட்டினாலும் காண முடியாது. நல்ல கண்ணும் அது தானே அறியாது. மனம் காட்டத்தான் அது விடயங்களை அறியும். மனம் அத்துடன் சம்பந்தப்பட வில்லையானால் அது விடயங்களை அறியாது. மனம் வேறு இடத்தில் ஈடுபட்டிருக்கும்போது எதிரில் வரும் ஆட்களைக் கூட நாம் கவனிப்பதில்லை; இது நமது தினசரி அனுபவம்; அப்படியே எந்த இந்திரியம் (புலன்) ஆனாலும் சரி அத்துடன் மனம் சம்பந்தப்பட்டுக் காட்டினால் தான் அது தொழிற்படும்; விடயங்களை அறிய முடியும். மனம் ஆன்மாவினால் தொழிற் படுகின்றதென்பதை ஐந்தாம் சூத்திரத்தில் பார்த்தோம்.

அதுபோல் உயிருடன் இறைவன் சேர்ந்து காட்டினால்தான் உயிரும் விடயங்களை உணரும். எவ்வளவுக்கெவ்வளவு இறைவன் அருட்சக்தியை அது (உயிர்) கிரகிக்க சக்தியுடைத்தோ அவ்வளவுக்கவ்வளவு அது விடயங்களைத் தெளிவாக உணரும். அதற்கு, கருவிகளை சாதனையால் சுத்தம் செய்யவேண்டும்.



சற்குருவினால் ஞான தீட்சைகளும் ஞானோபதேசமும் தீவிர சாதனைகளை முடித்த முமுட்சுகளுக்கே கிட்டும். மற்றும் அவன் (ஈசன்) அருளாலேதான் அவன் தாளையடைய முடியும். அவன் தாளும் நமது இருதய கமலத்துக்குள்ளேயே இருக்கிறது. (மலர்மிசை ஏகினான் மாணடி—குறள்). ஆதலால் முதலில் நம்மை நாம் அறிய வேண்டும்; பிறகுதான் நமக்குள்ளிருக்கும் இறைவனை அறியமுடியும். தன்னை அறிந்தவனே தன் தலைவனையும் அறிவான். ஏனெனில் அவன் உயிருக்குள் உயிராய் மறைந்திருக்கும் கள்வன். அதனாலன்றோ அப்பர் அடிகளும் "தேடிக் கண்டுகொண்டேன் தேடொணா தேவனைத் தேடி என் உள்ளே கண்டு கொண்டேன்" என்று தனது அநுபவத்தை அருளியுள்ளார். ஆதலின் ஆத்ம விசாரணை வேண்டும். அதற்கும் அவனே வழிகாட்டியாயுள்ளான்.

காட்டு வித்தால் யாரொருவர் காணாதாரே
ஆட்டு வித்தால் யாரொருவர் ஆடாதாரே
காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே.

—அப்பர்

தன்னைத்தான் அறிதலாவது, உள்ளம் கருவிகளோடு கூடி நிற்கும் நிலையில் அது புருடன் (Monad), ஆன்மா (Ego), சீவன் (Personality) என்ற மூன்றுவித நாமரூப உபாதிகளை அடைகின்றது. இவை மேலிருந்து கீழாக ஒன்றனின் சாயல் மற்றொன்றாகும். தன்னைத் தான் அறிதல் என்பது சீவன்தான் ஆன்மாவென அறிதல், ஆன்மா தன்னை புருடனென அறிதல், புருடன் தன்னைச் சிவனென உள்ளத்தில் சோகம் பாவனையால் உணர்தல். இணைப்பைப் பார்க்கவும்.

கருத்துரை

இந்திரியங்களைத் தொழிற்படச் செய்விக்கும் மனம் போல, இறைவன் உயிர்களுக்குத் தன்னைத்தான் அறிந்து தன்னையும் வந்தடைய அவைமாட்டு வைத்திருக்கும் இடையறாப் பேரன்பால் தோன்றாத் துணைவனாகயிருந்து அனவரதமும் அவைகளுக்கு வழிகாட்டி நிற்கின்றான்.

குறிப்புரை

1. உளம் = மனம்.

2. உள்ளம் = ஆன்மா (-ம் சூத்திரம் - விளம்பிய உள்ளத்து). வடமொழி 'அகம்' என்ற பதத்திற்கு 'உள்ளம்' ஒன்றே நேர்சரியான தமிழ்ச் சொல்லாகும். உள்ளமே உயிரின் உண்மை நாமமாகும். 'அகம் பிரம் மாஸ்மி' என்ற மகா வாக்கியத்தை உணர்ந்து பார்க்கவும்.

3. 8-ம் சூததிரத்தில் "அரன்கழல் செல்லுதல்" அரனைத் தேடிச் செல்லல் என்ற கருத்திலும், இச்சூத் திரத்தில் அரனை உணர்தல் என்ற பொருளிலும் நின்றது.

4. காட்டலின் அயரா அன்பின் என்றதை அயரா அன்பின் காட்டலின் என்று மாற்றிப் பொருள் கொள்ளவும்.

| 5. | உவமானம் | உவமேயம் |
|---|---|---|
| | உளம் (மனம்) | இறைவன் |
| | கண் | உள்ளம் (உயிர்) |

6 கண் என்றவிடத்து இனம் பற்றி மற்ற புலன் களையும் கூட்டிக்கொள்ளவும்.

7. உயிரினால் மனம் தொழிற்படுகிறது.



சித்தியார்

காயம்ஒழிந் தால்சுத்த னாகி ஆன்மாக்
காட்டக்கண் டிடும்தன்மை யுடைய கண்ணுக்
கேயும்உயிர் காட்டிக்கண் டிடுமா போல
ஈசன்உயிர்க் குக்காட்டிக் கண்டிடுவன் இத்தை
ஆயும்அறி வுடையனாய் அன்பு செய்ய
அந்நிலைமை இந்நிலையில் அடைந்தமுறை பாலே
மாயமெலாம் நீங்கிஅரன் மலரடிக்கீழ் இருப்பன்
மீளாத சிவாநுபவம் மருவிக் கொண்டே.

ENGLISH SUMMARY

This Sutram explains how God which is love guides the souls to His Feet and how the soul on self-realisation attains salvation.

As the mind enables the eye to see things, so also the Lord the embodiment of love who has un-interrupted infinite love towards the souls help them to know themselves. The soul on self-realisation i.e. realising its true nature attains the Feet of the Lord under His guidance i.e., the personality identifies itself with Ego and Ego with Monad and Monad merges with Ishwara.

---

பன்னிரண்டாம் சுலோகம்

12. (அ) முக்திமை பிராப்ய சதஸ்தேஷாம்
பஜேத்வேஷம் சிவாலயம்|
ஏவம் வித்தியாச் சிவஞ்ஞாந போதே
சைவார்த்த நிர்ணயம்||

முக்தியை = முத்தியின் பொருட்டு, ஸதக = சாதுக்களை, பிராப்ய = அடைந்து, தேஷாம் = அவர்களது, வேஷம் = திருவேடத்தையும், சிவாலயம் = சிவாலயத்தையும், பஜேத் = வழிபடுக. ஏவம் = இவ்வாறு, சிவஞ்ஞான போதே = சிவஞானபோதம் என்னும் இந்நூலில், சைவார்த்த நிர்ணயம் = சைவார்த்த நிர்ணயத்தினை, வித்யாத் = அறிவாயாக.

கருத்து

முத்தியின் பொருட்டு சாதுக்களை அடைந்து • அவர்களது திருவேடத்தையும், சிவாலயத்தையும் வழிபடுக. இவ்வாறு சிவஞானபோதம் என்னும் இந்நூலின்கண் சைவ ஆகமங்களின் பொருள் நிச்சயத்தை அறிவாயாக.

## பன்னிரண்டாம் சூத்திரம்

12. (ஆ) அவதாரிகை

உலகர்க்கு வைதீக மார்க்கத்தில் பிரவேசிக்கத் திரிகரண சுத்திக்கான ஆரம்ப சாதனங்களை உணர்த்தியது.

செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரனெனத் தொழுமே.

அந்வயம்

செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா (தடுக்கும்) அம்மலம் கழீஇ, அன்பரொடும் மரீஇ, மால் அறநேயம் மலிந்தவர் வேடமும் ஆலயம் தானும் அரன் எனத் தொழும். ஏ.



பிண்டப்பொழிப்புரை

இறைவனது செவ்விய திருவடிகளை அணைவதற்குத் தடையாயுள்ள அக்குற்றங்களை யெல்லாம் நீக்கி, நல்லவர்களுடன் உறவுகொண்டு, மயக்கமற்ற மெய்ஞ்ஞானிகளின் திருவேடத்தையும் ஆலயங்களையும் கடவுள் எனவே வழிபடுவாயாக.

விளக்கவுரை

9-ம், 10-ம் சூத்திரங்களின் அதிதீவிர முமுட்சுகளுக்குரிய தீவிர தர ஞான சாதனங்களை அருளிய மெய்கண்டார் இச்சூத்திரத்தில் உலக வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் சாதாரண லௌகீகர்களுக்கு வைதீக சமய வாழ்க்கையில் ஈடுபடுவதற்கான ஆரம்ப சாதனங்களை அருள்கின்றார். எல்லாக் குற்றங்களும் நீங்கிய சீவன் முக்தர்களுக்காகச் சொல்லியதல்ல இச்சூத்திரம்.

இறைவன் திருவடிகளை அடைவதற்குத் தடையாயுள்ள குற்றங்கள் யாவை? ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களானும் வருவனவாகிய குற்றங்களாம். அவைகளை விரிக்கின் பெருகுமாதலால் சுருக்கிக் கூறுதும் :

I ஆணவத்தினால் வரும் குற்றங்கள் மோகம், மதம், இராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் என்ற ஏழாயினும் அது பல பல ரூபங்களை எடுக்கும். ஆனால் அவற்றை யெல்லாம் இரண்டில் அடக்கலாம். அவையாவன "நான்" என்ற அகங்காரமும், 'எனது" என்ற மமகாரமுமாகும். இவை தன்னலத்தினால் (Selfishness and Selfish motives) வருபவை. எல்லாக் குற்றங்களுக்கும் கேடுகளுக்கும் இவைகளே காரணமாம்.

இதைப் போக்குவது எப்படி? இவை நீங்க வேண்டு மானால் "நான், எனது" என்ற மனப்பான்மையைப் போக்கி "நாம், நமது" என்ற எண்ணத்தை வளர்க்க வேண்டும். பிறர் சுகதுக்கம் நமது சுகதுக்கம்; பிற உயிர் களுக்குச் செய்யும் தீங்கு இறைவனுக்கு மட்டுமல்ல நமக்கு நாமே செய்து கொண்ட தீங்காகும்; பிற உயிர் களுக்குச் செய்த நன்மை நமக்கு செய்துகொண்ட நன்மை யாம்; ஆதலால் அனைத்துயிர் ஒன்றென்ற உணர்வை வளர்க்கவேண்டும். இதற்கு ஜீவகாருண்யமே திறவு கோலாகும்.

யான்எனது என்னும் செருக்குஅறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகு புகும்.

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது. —திருக்குறள்

II. கன்ம மலத்தால் வரும் குற்றங்கள் தீவினை களாம். சமய வாழ்க்கையில் செல்ல விரும்புபவர்கள் தீவினைகளை அறவே நீக்கி, நல்ல வினைகளையே செய்தல் வேண்டும். தீவினைகள் யாவை, நல்வினைகள் யாவை என்பது பற்றி நமது பொய்யா மொழிப் புலவர் திருவள்ளுவர் தமது தமிழ் மறையில் விளக்கமாக அருளி யுள்ளார். ஔவை பிராட்டியாரும் புண்ணியம் ஆம், பாவம் போம் என சுருங்கச் சொல்லி விளங்கவைத் துள்ளார். ஒளியின் முன் இருள் ஓடுவதுபோல் திரிகர ணங்களாலும் நாம் நன்மைகளையே செய்தால் எதிரான தீவினைகள் நம்மை விட்டுத் தானே விலகும்.

செய்தக்க அல்ல செயக்கெடும்; செய்தக்க
செய்யாமை யானும் கெடும். —குறள்



III. மாயா மலத்தால் வரும் குற்றங்கள் மயக்க மாம். இது நித்தியம் அநித்தியம், நன்மை தீமைகளையும், அவசியம் அவசியமின்மை, என்பவற்றின் வித்தியாசங் களைத் தெரியவொட்டாமல் உயிர்களை மயக்கும். தனு கரணங்களை 'நான்' என அபிமானிக்கச் செய்யும். சிற்றின் பங்களைப் பேரின்பமாகக் கருதி நம்மை இந்திரியங்களில் சிக்க வைக்கும். இக் குற்றங்களை நித்தியாநித்திய வஸ்து விவேகப் பகுத்தறிவைக் கொண்டு களையவேண்டும்.

திரிகரணங்களாகிய மனோ வாக்குக் காயங்களால் வரும் குற்றங்கள் யாவை? அவற்றைப் போக்குமாறு எங்ஙனம்?

1. காயம்-மெய்மையைக் கடைப் பிடிக்கவேண்டும். அதற்குக் கள்ளுண்ணமை, புலால் மறுத்தல், கள்ளாமை, கொல்லாமை, பிறனில் விழையாமை, இன்னா செய்யாமை, வெருவந்த செய்யாமை, தீநட்பு - கூடாநட்பு - சிற்றினம் சேராமை; ஈகை, விருந்தோம்பல் முதலிய பண்புகளை வளர்க்கவேண்டும். உடலை சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும்.

2. வாக்கு-வாய்மையைக் கடைப்பிடிக்க வேண்டும். அதற்கு இன்னா சொல்லாமை, புறங்கூறாமை, பயனில சொல்லாமை, பொய் சொல்லாமை, இனியவை கூறல் முதலிய பண்புகளை வளர்க்கவேண்டும்.

3. மனம் - உண்மையை கடைப்பிடித்தொழுகல் வேண்டும். அதற்கு அழுக்காறாமை, வெஃகாமை, மனத் துக்கண் மாசிலனாதல் முதலிய பண்புகளை வளர்க்க வேண்டும்.

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும். —குறள்

இரண்டாவதாக நல்லவர்களுடைய கூட்டுறவு வேண்டும். "நல்லார் இணக்கமும் நின்பூசை நேசமுமே

அல்லாது வேறொன்றும் வேண்டேன்'' எனப் பட்டினத் தடிகளும், ''ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற உத்தமர்தம் உறவு வேண்டும்'' என அருட்பிரகாச வள்ளலாரும், ''சான்றோர் இனத்திரு'' என ஔவை பிராட்டியாரும் அருளிப் போந்தனர். அன்பர் என்பது பண்புடைய சான்றோர்களை.

> ஸத்சங்கத்வே நிஸ்ஸங்கத்வம்,
> நிஸ்ஸங்கத்வே நிர்போகத்வம்
> நிர்போகத்வே ஜீவன்முக்திः

மூன்றாவதாக உண்மை சந்நியாசி (துறவி)களின் (போலித் துறவிகள் அல்ல) திருவேடத்தையும், ஆலயங்களையும் கடவுள் எனப் பாவித்து வழிபடல் வேண்டும். மெய்ஞ்ஞானிகளின் தேஜஸ்ஸும், அவர்கள் ஆன்மீக சக்தியும் வெகுதூரம்வரை விசிரம்பித்துப் பிரகாசிக்கும். ஆதலால் அவர்களின் சந்நிதானத்தில் இருந்தாலே நமது தீய எண்ணங்களெல்லாம் ஓடி ஒளிந்து மனசாந்தி ஏற்படும்.

ஆலய வழிபாடு அத்யாவசியமானது. ஆலயத்தைப் பார்க்கும்போதே நமக்குக் கடவுள் உணர்ச்சி உண்டாகிறது. பால் பசுவின் உடல் முழுவதும் பரவி இருந்த போதிலும் அதன் மடியின் மூலம்தான் நமக்குப் பால் கிடைக்கின்றது. அதுபோல் இறைவன் எங்கும் வியாபித்திருந்தாலும், ஆலயங்கள் மூலமே அவனது அருட் சத்தியும், சைதன்யமும் பிரகாசிக்கின்றது அதனாலன்றோ ''கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்'' என்றும், ''ஆலயம் தொழுவது சாலவும் நன்று'' என்றும் ஔவை பிராட்டியார் ஓதியுள்ளார்.

(ஆலயத்தைப் பற்றி இணைப்பில் பார்க்க).

மேலே சொல்லியவாறு இச் சூத்திரம் உலக வாழ்க்கையில் அழுந்திக்கிடக்கும் சாதாரண மந்ததர மக்கட்கு



வைதீக சமய மார்க்கத்தில் இட்டுச் செல்ல திரிகரண சுத்திக்காகச் சொல்லப்பட்ட ஆரம்ப சாதனங்களே தவிர சிவஞான முனிவர் சொல்வது போன்று எல்லா மலங்களும் அறவே நீங்கிய சீவன் முக்தர் (Super Human)களுக்காகச் சொல்லப்பட்டதல்ல.

''நட்ட கல்லை தெய்வமென்றே நாலு புஷ்பம் சாத்தியே
சுற்றிவந்து மொனமொனவென்று சொல்லும்மந்திரம்ஏது
நட்டகல்லும் பேசுமோ நாதன் உள்ளிருக்கையில்'' [டா

என்பது சீவன் முக்தர்களின் நிலையாம். இருந்தும் சீவன் முக்தர்கள் உலகோர்க்கு வழிகாட்டியாக ஆலயம் தொழுவர். பெரியோர்களை வணங்குவர்; சமய சின்னங்களை அணிவர். அதனால்தான் 9-10 சூத்திரங்களில் அதி தீவிர சாதனைகளையும் அவற்றால் எய்தும் பயன்களையும் சொன்ன மெய்கண்டார் இச் சூத்திரத்தில் ஆரம்ப சாதனைகளை மட்டும் சொல்லிப் பயனைச் சொல்லாமற் விட்டனர் போலும்.

ஆலய வழிபாடு, சமயச் சின்னங்களையும், குறிகளையும் அணிதல் முதலியன ஞானத்திற்கான படிகளில் முதற்படியே யாகும்; இக்கரையிலிருந்து அக்கரை போக உதவும் படகு மாதிரி இவைகள் எல்லாம் ஞானத்தை அடைய உதவும் கருவிகள்-சாதனங்களாகும். அப்படியிருக்க முதற்படியிலேயே உட்கார்ந்து கொண்டு- இக்கரையில் படகிலேயே இருந்துகொண்டு - இதுவே ஞானம், இதுவே மோக்ஷம், இதுவே முடிவு என்பது போன்ற மடமை வேறொன்றில்லை.

> உரைசெயிற் பிரமஞானம் ஒன்றுமே
> முத்திக்கு ஏது
> சரியை நற்கிரியை யோகந்தாம்
> ஒருமூன்றும் ஞானம்

மருவுதற்கு ஏதுவென்று மறை
புகன்றுரைக்கும் இந்தக்
கருவிடைப் பொருள் என்று எண்ணிக்
களிப்பவர் கபவர் அன்றே.

—பிரபுலிங்க லீலை

ஆனால் உலகில் லட்சத்தில் ஒருவரோ இருவரோ தான் -ம், 10-ம் சூத்திரங்களில் சொல்லிய அதிதீவிர சாதனைகளுக்கு அருகராவர். மற்றெல்லோரும் உலக பந்தபாசத்தில் ஈடுபட்டிருக்கும் மந்ததர மக்களாகும். அவர்களுக்கு இச் சூத்திரத்தில் சொல்லப்பட்டிருக்கும் ஆரம்ப சாதனங்கள் லௌகீகத்திலிருந்து சமய மார்க்கத்திற்குச் செல்ல இன்றியமையாதன. அதனாலன்றோ மெய்கண்டார் இதை இறுதியாக அருளியுள்ளார்.

மற்றொரு சிறப்பு இச் சூத்திரத்தில் கவனிக்கத் தக்கது. வடமொழி சுலோகம் போலல்லாமல் இச் சூத்திரம் இந்நாட்டவர்க்கு அதுவும் சைவ சமயிகளுக்கு மட்டும் உரித்தானதல்ல; எல்லா நாட்டவர்க்கும் எல்லா சமயத்தவர்க்கும் உரித்தானது. எல்லா நாட்டிலும் சமயங்கள் (பௌத்தம், கிருஸ்துவம், மகம்மதியம் முதலியன) இருக்கின்றன. அச்சமயத்திற்குரிய சின்னங்களும், குறிகளும் உள; ஆலயங்கள் (பகோடா, மாதாக் கோயில், மசூதி முதலியன) உள்ளன. அந்தந்த சமயத் துறவிகளும், அவரவர்களுக்குரிய வேடங்களும் உள. ஆதலால் இச் சூத்திரம் எல்லா நாட்டிற்கும், எல்லாச் சமயங்களுக்கும், எல்லா மக்களுக்கும் பொருந்தும். சிவஞான போதமே ஒரு பொது நூல் என்பதற்கு இது சான்றாகும்.

கருத்துரை

சாதாரண மந்ததர மக்கள் லௌகீக வாழ்க்கையிலிருந்து வைதீக(சமய) மார்க்கத்திற்குச் செல்லவேண்டித்



திரிகரண சுத்திக்கான ஆரம்ப சாதனங்களாவன:— பாவமான தீய செயல்களை விட்டுப் புண்ணியமான நல்ல காரியங்களைச் செய்யவேண்டும். நித்தியா நித்தியவஸ்து விவேக பகுத்தறிவு வேண்டும். அனைத்துயிர் ஒன்றென்றெண்ணி, அரும்பசி எவர்க்கு மாற்றி, ஜீவகாருண்யத்துடன் ஒழுகல் வேண்டும். நல்ல ஒழுக்கம் வேண்டும்; நல்லவர்களுடைய கூட்டுறவு வேண்டும். ஆலய வழிபாடு செய்ய வேண்டுவது அத்யாவசியம். சமயச் சின்னங்களை அணியவேண்டும். துறவிகளைப் போற்றவேண்டும்.

குறிப்புரை

1. நோன்றல்=பொறுத்தல், வலிமை.

2. கழீஇ என்றது மலத்தை அழுக்காகவும், ஞானத்தை நீராகவும் உருவகப் படுத்திக் கூறப்பட்டுள்ளது.

. வேடம். திருநீறு, நாமம், உருத்திராக்கம், துளபமணி முதலிய சமயச் சின்னங்களையும், குறிகளையும், காவி, மஞ்சள், அல்லது தூய வெண்மை ஆடையையும் அணிதல் முதலியன. (நாமும் நமக்குரிய சின்னங்களை அணிதல் வேண்டும்).

-. சேரவொட்டா. அணைய விடாமல் தடுக்கும்.

5. மால்=மயக்கம், அற=நீங்கிய.

6. நேயம்=அன்பு, சிவநேயம்.

7. மலம்=மும்மலம். ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று மலம்; மனம், வாக்கு, காயங்களில் உள்ள மூன்று குற்றங்கள்.

சித்தியார்

செங்கமலத் தாளிணைகள் சேரல் ஒட்டாத்
திரிமலங்கள் அறுத்து, ஈசன் நேசரொடும் செறிந்
தங்குஅவர்தம் திருவேடம் ஆலயங்கள் எல்லாம் (திட்டு)
அரன்எனவே தொழுதுஇறைஞ்சி ஆடிப் பாடி

எங்கும்யாம் ஒருவர்க்கும் எளியோம் அல்லோம்
யாவர்க்கும் மேலானோம் என்று இறுமாப் பெய்தித்
திங்கள்முடி யார்அடியார் அடியோம் என்று
திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே.

திருச்சிற்றம்பலம்

## ENGLISH SUMMARY

This Sutram enumerates certain preliminary spiritual practices (Sadhanas) for the ordinary men of she world who are in pursuit of worldly pleasures for them to enter into the religious life.

To reach the strong sustaining Feet of the Lord, first of all wash away (remove) all the impurities that prevent you from seeking His Feet, join the company of good men of love, and worship the Holy Forms of the Sages full of devotion and devoid of delusion and the temples. You yourself wear the holy religious symbols to remind you constantly the presence of God.

The impurities are of three fold arising out of three sources :—1. Anavam (Egoism and Selfishness), 2. Karmam (Action) and 3. Maya (Delusion) which are attached to Thought, Word and Deed. Remove the first by fostering unselfishness, love and generosity ; Remove the second by ceasing to do evils and trying to do good acts ; and remove the third by discrimination between real and unreal and good and bad Worship of enlightened Saints and Sages and sacred Temples is very important and essential. If you yourself wear the holy religious symbols, it would always be reminding you of the presence of God. See not evil, hear not evil and speak not evil and let your thought, word and deed be pure, good and benevolent.

அநுபந்தம் 1

# ஆலய வழிபாடு

மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையால் தொடங்கினர்க்கு ஓர்
வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே.

—தாயுமானர்

ஆலயம் என்றால்—ஆ + லயம்; ஆ பசு (உயிர்) லயம் = லயிக்கும் இடம்; அதாவது உயிர்கள் இறைவனோடு ஒன்றுபட உதவும் இடம் எனப்பொருள். இதைக் கோயில் எனவும் சொல்வர். கோ = இறைவன்; இல் = உறையும் இல்லம் எனப்பொருள்படும். பசுவின் உடல் முழுவதும் பால் இருந்தபோதிலும், அதன் மடிமூலம் அதைச் சுரந்து ஈவது போன்று, இறைவன் அங்கிங்கெனாதபடி எங்கும் வியாபகமாக இருந்தபோதிலும் அதன் சைதன்யம், சக்தி சிலசில வத்துக்கள் மூலம் விசரிம்பித்துப் பிரகாசிக்கின்றது.

அண்டமுடி தன்னிலோ, பகிரண்ட மதனிலோ,
அலரி மண்டலம் நடுவிலோ,
அனல்நடுவிலோ, அமிர்தமதி நடுவிலோ,
அன்பர் அகம் உருகி மலர்கள் தூவித்
தெண்டமிட வரும் மூர்த்தி நிலையிலோ
திக்குத் திகந்தத்திலோ, வெளியிலோ,
திகழ் விந்துநாத நிலைதன்னிலோ,
வேதாந்த சித்தாந்த நிலைதன்னிலோ,
கண்டபல பொருளிலோ, காணாத நிலையெனக்
கண்ட சூனிய மதனிலோ,
காலமொரு மூன்றிலோ, புறவி நிலைதன்னிலோ,
கருவி கரணங்கள் ஓய்ந்த

தொண்டர்கள் இடத்திலோ, நீவீற்றிருப்பது
தொழும்பனேற்கு உளவு புகலாய்
சுத்த நிர்குணமான பரதெய்வமே,
பரஞ்சோதியே, சுகவாரியே. —தாயுமானர்

என்றபடி, பக்தர்கள் தொழும் மூர்த்தியிலும் இறைவனின் சைதன்யம் பிரகாசிக்கின்றது. கீதையில் பகவான் ''எங்கெங்கே கம்பீரமும், அழகும், இனிமையும் காணப்படுகின்றனவோ அங்கங்கெல்லாம் எனது விபூதிப் பிரசாதம் உளது என்றும், இரண்டுபேர் கூடி என்னைத் தொழுமிடத்திலும் நான் அங்கு பிரசன்னமாயிருக்கின்றேன் எனவும் அருளியுள்ளார்.

இந்த சிவஸ்தலங்கள் எப்படி உண்டாயிற்று என்றால் சனகாதி முனிவர்களில் ஒருவர் ஆதிசங்கராசாரியராக (வியாக்கியான கர்த்தாவாகிய சங்கராசாரியார் அல்ல) அவதரித்துப் பாரதநாட்டில் ஆங்காங்கே ஸ்தல விருக்ஷங்களின் அடியில் தந்திர, மந்திர, யந்திரங்களால் அபூர்வமான உலோகங்களாலாகிய சிவலிங்கங்களை ஸ்தாபிதம் செய்து சென்றனர் என்று விஷயம் அறிந்த பண்டிதர்கள் கூறுவர். பஞ்சபூதலிங்க தலங்களும், ஆறுபடை வீடுகளும், காசி, இராமேஸ்வரம், சோமநாத முதலிய பூர்வீக க்ஷேத்திரங்களும் இவ்வாறு ஸ்தாபிக்கப்பட்ட ஸ்தலங்களாகும். இவைகள் எல்லாம் பக்தர்களை ஈர்த்து அருளக்கூடிய தலங்களாக அமைந்தன. இறைவன் அடியார்களால்துதிக்கப்பெற்றுப் பூசனைசெய்யப்பட்ட பாடல் பெற்ற தலங்களாகும். ஆதலால் இத்தலங்கள் எல்லாம் இன்றுவரை பல்லாயிரம் ஆண்டுகளாக ஆன்மாக்களைக் கவர்ந்து ஈர்க்கக்கூடிய ஈஸ்வர சைதன்யமும் சக்தியும் விசிரம்பித்துப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றன.



சிவலிங்கம் இறைவனின் சிவசக்தி (விஷ்ணு)யைக் குறிக்கும் இடறனைக் குறிக்கிய அருவுருவத் திருமேனியாகும். இவைகள் எல்லாம் தமிழகத்தில் ஆங்காங்கே உள்ள ஒவ்வொருவித தலவிருக்ஷங்களின் அடியில் ஸ்தாபிக்கப்பட்டனவாதலால், அக்காலத்தில் அங்கு இப்போதுள்ளதுபோல் கட்டடங்கள் இல்லை யென்பது வெளிப்படை. இச்சிவலிங்கங்கள் சாதிகுல பாகுபாடின்றி, யாவரும் மலரிட்டுத் தொட்டுத் தொழும் நியதியுடைத்தாய் இருந்தன. இதுபோதும் காசியில் அவ்வாறே தொழப்படுவது அதற்குச் சான்றாகும். தமிழகத்தில் தமிழ்த் திருமுறைகளையே ஓதி வணங்கும் வழக்கமுடையதாயும், இத்தலங்கள் ஆதி சைவத் தமிழர்களாலேயே பரிபாலிக்கப்பட்டு வந்திருக்கின்றன வென்பதற்கும் அநேக சான்றுகள் உள. இவ்விடங்கள் ஆன்மாக்கள் சாந்தியுற்று இறைவனோடு இலயிப்பதற்குக் காரணமாய் இருந்ததால் இவை ஆலயம் என வழங்கப்பெற்றன.

ஆரியர்கள் தமிழகத்தில் குடியேறிய பிறகு இவ்வாலயங்களில் ஆகம விதிப்படி சில தத்துவங்களின் அடிப்படையில் கட்டிடங்களைக் கட்டினர். ஆதலால் அதற்குக் கோயில் என வழங்கப்பட்டது. இறையும் அதைச் சூழ்ந்திருக்கும் ஏழு சக்தி (திரை)களும், உயிரும் அதன் ஏழு உடல்களும், ஏழு ஆதாரங்களும் என்ற தத்துவத்தின் அடிப்படையில் மூலஸ்தானமும் அதைச் சுற்றி 7, 5, 3 சுற்றுப் பிராகாரங்களும் இடத்திற்குத் தக்கவாறு கட்டப்பட்டன. பிறகு வழிபாட்டில் வர்ணாசிரமத்தைப் புகுத்தி, பிராமணர்கள் சம்ஸ்கிரதத்தில் பூசனை செய்யப்படும் வழக்கத்தையும் ஏற்படுத்தினர்.

பிறகு இக்கோயில்களில் நவக்கிரகம் முதலிய சில்லறை தேவதைகளும் வருமானத்திற்காகக் குடியேற்றப் பட்டன. இது எப்படி இருக்கிறதென்றால் ஒரு ஏகச் சக்ராதிபதியின் முன்னிலையில் அவரின் சேவகனைப் புகழ்ந்து துதிப்பது போலாகும்.

இறைவனை அடைவதற்கு இக்கலியுகத்தில் பக்தி மார்க்கமே சிறந்தது. பக்தி மார்க்கத்தில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு படிகள் உள. முதல் இரண்டும் கீழ்ப்படிகளாகும். பின் இரண்டும் மேல்படிகளாகும். இவற்றில் யோகம் (தியானம்) மிகவும் முக்கியமானது. ஆலயங்களில் இறைவனை அலங்கிட்டு, நீராட்டி, மலர் தூவித் துதித்த பிறகு, ஓர் இடத்தில் அமர்ந்து தியானம், ஜபம் செய்வதற்காகவே கோயில்களில் அதன் இடவசதி, தொழுவார் தொகைக்குத் தக்கபடி, ஆயிரங்கால், நூறுகால், ஐம்பதுகால் முதலிய மண்டபங்களைக் கட்டி வைத்தனர். மக்கள் இறைவனைத் தொழுத பிறகு, இந்த கால்களின் அடியில் அமர்ந்து தியானம் செய்யும் வழக்கம் இருந்தது. காஞ்சிபுரத்தில் கைலாசநாதர் ஆலயத்தில் தியானம் செய்வதற்காகச் சுற்றுப்புற மதிலில் குகை குகையாக அமைத்திருப்பதை இன்றும் காணலாம். இப்போதெல்லாம் அம்மண்டபங்கள் எல்லாம் வெளவால் (துரிஞ்சல்) அடையும் இடிந்துபோன பாழ் மண்டபங்களாகக் காட்சி அளிக்கின்றன. கோயிலில் தொழவரும் மக்கள், பூசை முடிந்ததும், தியானம் செய்வது ஜபிப்பதை விட்டு, பழைய சம்பிரதாயப்படி, தரையில் உட்கார்ந்து எழுந்து வந்துவிடும் வழக்கம் ஏற்பட்டு விட்டது.



சிவாலயங்களில் சிவலிங்கம் மட்டுமிருந்தது போய், இறைவனின் பல்வேறு கல்யாண குணங்களைக் குறிக்கும் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு, நடராஜர், சோமாஸ்கந்தர், தக்ஷிணாமூர்த்தி, பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் முதலிய சகளத் திருமேனி விக்கிரகங்களும் வைக்கப்பட்டன. "குணங்குறி ஆனாய் போற்றி" என்றபடி ஒவ்வொரு குறியும் ஒவ்வொரு தத்துவத்தைக் குறித்து நின்றது. நாம் இவைகளை வணங்கும்போது குறியை (விக்ரகத்தை) அல்லாமல் அவற்றின் அடிப்படை குணத்தை, தத்துவத்தைத் தியானித்து, துதித்துப் போற்ற வேண்டும். இவைகள் எல்லாம் கற்பனையிலான செயற்கைக் குறிகளாகும். சிவலிங்கம் ஒன்றே இயற்கைக் குறி.

சமயச் சின்னங்களும், குறிகளுமாகிய திருநீறு, திருமண், உருத்திராக்கம், துளபமணி முதலியவைகளில் அநேக தத்துவங்களும், சக்திகளும் அடங்கியுள்ளன. விரிக்கின் பெருகும். விதிப்படி செய்யப்பட்ட திருநீற்றில், விஷக்கிருமிகளைப் போக்கும் சக்தியும், கெட்ட காற்றுகளை (துட்ட தேவதைகளை)த் தடுக்கும் சக்தியும் உள. பசு சாணம் அக்னியில் எரிக்கப்பட்டபோது அதன் அழுக்கு நீங்கி, பரிசுத்தத் தூய வெண்மை நிறமாகுவதுபோல், உயிர்களைப் பீடித்திருக்கும் மலங்கள் ஞானாக்கினியினால் தகிக்கப்பட்டுச் சுத்தாவத்தையை ஆன்மாக்கள் அடைகின்றன. விபூதியை உத்தூளனமாக இடுவது சிவனின் நிஷ்கள மேனியையும், அதை நீரால் குழைத்து முப்பட்டையாக இடுவது சிவனின் பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் ஆகிய சகள திரிமூர்த்தி மேனியையும் குறிக்கின்றது. திருநீறு அணியும்போது இந்த

அடிப்படை தத்துவங்களை நாம் ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும். இதுபோது உபயோகத்தில் இருப்பது விபூதியல்ல; வெறும் சாம்பலேயாகும்.

இவ்வாறு ஆலய வழிபாடு திரிகரண சுத்தியை உண்டாக்கி, மனசாந்தியை அடையச் செய்கிறது. இறைவனின் அருளும் கிட்டுகின்றது. அதனாலன்றோ "ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்றும் "கோயிலில்லா ஊர்தனிலே குடியிருக்க வேண்டாம்" என்றும் ஔவை பிராட்டியார் அருளிச் சென்றார். கலியுகத்திற்குப் பக்தி மார்க்கமே சிறந்தது.

இதுபோது சமய சார்பற்ற, நம்பிக்கையற்ற ஆட்சியால் ஆலயங்களில் ஈஸ்வர சைதன்யம் மறைந்து அவைகள் (கோயில்கள்) வியாபார சந்தைகளாகவும், பிற விடுதிகளாகவும் மாறி வருகின்றன. அதனாலன்றோ நாடு மூவகையாலும் (ஆதிபௌதிகம், ஆதிஆன்மிகம், ஆதிதெய்வீகம்) இன்னல்களை அடைந்து, மக்கள் அவதியுறுகின்றனர்.

உண்மையில் தமிழ்நாடு ஓர் புண்ணிய பூமியாகும். தமிழகத்தில் உள்ள மூர்த்தி, தலம், தீர்த்தங்கள் போல வேறு எங்கும் இல்லை. இந்நாட்டில் அவதரித்த சமயாச்சாரியர்கள், சந்தானச்சாரியர்கள், யோகியர்கள், சித்தர்கள், பக்தர்கள்போல் வேறு நாட்டில் கிடையாது. இலக்கணம், இலக்கியம், சாத்திரம், தோத்திரங்களில் வளமுடையது. பூமாதேவிக்குத் திலகம் போன்றது. கல் தோன்றி மண் தோன்றாக் காலத்திற்கும் முந்தியது தமிழகம், தமிழ் மொழி, தமிழர் இனம்.

அநுபந்தம் 2

# மெய்கண்டார் கண்ட மெய்நெறி

| | | | |
|---|---|---|---|
| 1 | சமயம் | — | சைவ சித்தாந்தம் |
| 2 | கடவுள் | — | சிவம் |
| 3 | குறி | — | சிவலிங்கம் |
| 4 | நான்மறை | — | குறள், போதம் |
| 5 | ஆகமம் | — | திருமந்திரம் |
| 6 | உபநிடதம் | — | திருமுறை, திவ்யப்பிரபந்தம், திருஅருட்பா, தாயுமானர் |
| 7 | குறிக்கோள் | — | அன்பே சிவம் |
| 8 | செந்நெறி | — | இறைபணி, சாதன சதுட்டயம் |
| 9 | மந்திரம் | — | ஐந்தெழுத்து, ஆறெழுத்து, எட்டெழுத்து |

## குறிப்பு

1. சிவசம்பந்தமுடையது சைவம்; எல்லா முடிவுகளையும் ஒன்றித்துப் பார்க்கும் முடிவு சித்தாந்தம்.
2. சிவம் = மங்களம், வியாபகம், அன்பு.
3. சிவலிங்கம் சிவசத்தியடங்கிய இயற்கைக் குறி. மற்றக் குறிகள் செயற்கை (கற்பனை)க் குறிகள்.
4. பொய்யாமொழிப் புலவர் திருவள்ளுவர் அருளிய அறம், பொருள், இன்பம் ஆகிய முப்பாலடங்கிய திருக்குறளும், மெய்கண்டார் அருளிய வீட்டுப்பாலாகிய சிவஞானபோதமும் தமிழ் மறைகளாகும்.

5. நந்தி மரபில் வந்த திருமூலர் அருளிய திருமந்திரம் தமிழ் ஆகமமாகும்.

6. தமிழ் உபனிடதங்கள் வேதாகமங்களின் சாரமாகும்.

7. அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார் அன்பே சிவமாவது யாரும் அறிகிலர். இதுவே வீட்டின் திறவுகோல்.

8. (அ) இறைபணி = உயிர் (மன்பதை) பணி, "என்கடன் பணிசெய்து கிடத்தலே"

(ஆ) சாதனம் I. [1]விவேகம் [2]வைராக்கியம் [3]ஒழுக்கங்கள்: சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தை ஆகிய ஆறு சத்குணங்கள் [4]அன்பு.

சாதனம் II. [1]கர்மம், [2]பக்தி, [3]யோகம் [4]ஞான மார்க்கங்கள்.

9. [1]நமசிவய, [2]சரவணபவ, [3]ஓம்நமோ நாராயணாய.

---

கற்றதனா லாயபய னென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்.

கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

அறவாழி அந்தணன்தாள் சேர்ந்தார்க்கு அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

—குறள்